# கல்கி



KALKI 15.9.2002
ரூ. 6.00







## காஸ்ட்லி கனவு!

# இந்தியாவின்
# No.1
# இன்ஸ்டிட்யூட்



# வழங்கும்
# ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்

## சரளமாக இங்கிலீஷ் பேச, சுலபமான பயிற்சி !

இங்கிலீஷில் சரளமாகப் பேச வேண்டும் என்ற விருப்பமுடையவரா நீங்கள்?

பலவழிகளில் முயன்றும் பல புத்தகங்களைப் படித்தும், உங்களால் இங்கிலீஷில் பேச முடியவில்லையா? கவலையை விடுங்கள்.

ஸ்பீச் ஜெனரேட்டிங் ஃபார்முலா SGF™ அடிப்படையில் நாங்கள் உருவாக்கியுள்ள ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர்ந்து நீங்கள் சுலபமாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் செலவிட்டு எங்களது பாடங்களை ப்ராக்டிஸ் செய்தால் போதும். மடை திறந்த வெள்ளம் போல் மடமட வென இங்கிலீஷில் பேச ஆரம்பித்து விடுவீர்கள்.

**பயிற்சி விவரம்**

★ இங்கிலீஷ் வார்த்தைகளை ஓரளவு எழுத படிக்கத் தெரிந்தவர்கள் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து, இலக்கணப் பிழையின்றி வாக்கியங்களை அமைக்கக் கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

இலக்கணம் மற்றும் உரையாடல் பயிற்சிப் பாடங்கள் அடங்கிய இக் கோர்ஸில் சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் ரூ.395/- மட்டுமே.

★ இங்கிலீஷ் வார்த்தைகளை எழுத, படிக்க இயலாதவர்கள் அடிப்படையிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுத, படிக்க கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**அடிப்படை மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் ரூ.525/- மட்டுமே.

என்ன, பயிற்சிக்காக தினசரி அரை மணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா? அப்படியானால், கீழ்க்காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள்.

கோர்ஸ் பாடங்கள் V.P.P. மூலம் உங்களது வீடு தேடி வந்து விடும். தபால்காரரிடம் பணத்தைச் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

**பாடங்களை அனுப்புவதுடன் எங்களது பணி முடிந்து விடுவதில்லை. பயிற்சியினை நீங்கள் நிறைவு செய்யும் வரை எங்களது வழி காட்டுதல் தொடரும்.**

**இதோ கூப்பன்**

- ☐ நான் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.
- ☐ நான் அடிப்படை (Basic) மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.525/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

தேவையான கட்டத்தில் ☑ குறியிடுங்கள்.

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................பின்கோடு..............

KLI

**VIVEKANANDA INSTITUTE**

9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-600 017.

E-Mail : vinglish@vsnl.com Visit us at : www.vivekin.com

05/NAGA/02/TAM

"பிறந்த நாள் கடிகாரம்' என்ற பெயரிலேயே ஒரு ஜெர்மன் நாட்டு கடிகாரம் உண்டு என்பது உங்களுக்குத் தெரியுமா? அந்த கடிகாரம் சாவி கொடுத்தால் இயங்கக் கூடிய ரகம் என்றாலும், வருடத்துக்கு ஒரு தடவை சாவி கொடுத்தால் போதும்." இந்தத் தகவலைச் சொல்கிறவர் பிரபாகர்.

சென்னைச் சூளைமேடு பகுதியில் வசிக்கும் இவரது பொழுது போக்கு கடிகாரங்கள் சேகரிப்பது.

"எங்கள் வீட்டு கடிகாரம் ஒன்று ரிப்பேர் ஆகிவிட்டது. அதை நானே கழற்றிப் பிரச்னை என்னவாக இருக்கும் என்று பார்த்தேன். நன்றாக இயங்கும் கடிகாரம் ஒன்றையும் பிரித்துப் போட்டு,



# சேகரிப்பாளர்-1



• பிரபாகர்

இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்து, தவறு எங்கே என்று கண்டுபிடித்து சரி செய்தேன். இப்படித்தான் தொடங்கியது கடிகாரத்தின் மீதான என் காதல்.

"அந்தக் காலத்தில் குதிரைகள் இழுக்கும் கோச் வண்டிகளில் தான் அரச குடும்பத்தினரும் பிரபுக்களும், ஜமீன்தார்களும் மற்ற பணக்காரர்களும் பயணம் செய்வார்கள். கைக் கடிகாரம் இல்லாத காலம். எனவே, கோச் வண்டியினுள்ளே, ஒரு குட்டி கடிகாரம் வைத்திருப்பார்கள். அதற்கு 'கேரேஜ் கிளாக்' என்று பெயர் எனச் சொல்லி, தாம் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிய கேரேஜ் கிளாக் ஒன்றைக் காட்டுகிறார். மணல் கடிகாரமும், காந்திஜி டைப் பாக்கெட் கடிகாரமும் இவரது கலெக்ஷனில் உண்டு.

மணிக்கொரு தடவை, கூண்டிலிருந்து வெளியில் வந்து, வெளியே காத்திருக்கும் தன் ஜோடிக் குருவியிடம் கீச், கீச் என்று ஒலியெழுப்பும் கடிகாரம் இவரிடம் உள்ளது.

மூர்மார்க்கெட், ஏலக்கடைகள், அடகுக் கடை என்று மணிக் கணக்காய் அலைந்து அலைந்து கடிகாரங்கள் சேகரிக்கிறார் பிரபாகர். ○

> "மூர்மார்க்கெட், ஏலக்கடைகள், அடகுக் கடை என்று மணிக் கணக்காய் அலைந்து அலைந்து கடிகாரங்கள் சேகரிக்கிறார் பிரபாகர்."


**கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com**

**புதிய ஈ மெயில் முகவரிகள் :**

எடிடோரியல் : kalki@kalkiweekly.com சந்தா : subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் : info@kalkiweekly.com



அனைத்திந்தியமொழிகள் மற்றும் பிரெஞ்சு, உள்ளிட்ட ஐம்பது மொழிகளில், மொத்தம் நாற்பத்து இரண்டாயிரம் இசைத் தட்டுகள் சேகரித்து வைத்திருக்கிறார் வி.ஏ.கே. ரங்கா ராவ்.

சினிமா பாடல்கள், கர்நாடக இசையில் வாய்ப்பாட்டு, இசைக் கருவிகள் என்றுதான் இல்லை. நாடகங்கள், சரோஜினி நாயுடு, தாகூர் போன்றவர்கள் தாங்களே தம் கவிதை வரிகளை வாசித்த பதிவுகள்; மகாத்மா காந்தி, நேருஜி, நேதாஜி ஆகியோரது உரைகள், முசோலினி, சர்ச்சில் ஆகியோரின் சொற்பொழிவுகள், இவை அடங்கிய இசைத்

# சேகரிப்பாளர்-2



• வி.ஏ.கே. ரங்காராவ்

தட்டுகளைக் கூட இவர் தேடிப் பிடித்துச் சேகரித்து வைத்திருக்கிறார். ஆல் இந்தியா ரேடியோவே, இவரது சேகரிப்பிலிருந்து, இசைத் தட்டுக்களைக் கேட்டு வாங்கிச் சென்று ஒலிபரப்பிய தருணங்கள் பல உண்டு.

பிரபல இந்திப் பாடகர் முகேஷ், ஆரம்ப காலத்தில் பாடிய பாடல் ஒன்றின் இசைத் தட்டை, அவருக்குப் போட்டுக் காட்டியபோது, "நான் இந்தப் பாட்டு பாடியது எனக்கே மறந்து விட்டது. என்னை அந்த நாட்களுக்கே அழைத்துக் கொண்டு போய் விட்டீர்கள்" என்று நெகிழ்ந்து கூறினாராம்.

> "பொப்பிலி ராஜாவின் வம்சத்தில் வந்த காரணத்தால், வெளி உலகுடன் தொடர்பு இல்லாமலேயே நாங்கள் வளர்க்கப்பட்டோம். இசைதான் எங்கள் ஒரே நண்பன்; பொழுது போக்கு."

"எனக்கு மூன்று வயதில் இசை மீது ஈடுபாடு ஏற்பட்டது. பொப்பிலி ராஜாவின் வம்சத்தில் வந்த காரணத்தால், வெளி உலகுடன் தொடர்பு இல்லாமலேயே நாங்கள் வளர்க்கப்பட்டோம். இசைதான் எங்கள் ஒரே நண்பன்; பொழுது போக்கு. அப்போதே சாக்லெட், பிஸ்கெட் வாங்கித் தந்தால் எனக்குப் பிடிக்காதாம்; இசைத் தட்டுகள் வாங்கிக் கொண்டு வந்தால் ரொம்ப சந்தோஷப்படுவேனாம்" என்று நினைவு கூர்கிறார் ரங்காராவ்.

"அகில இந்தியாவிலும் பல ஊர்களுக்குப்போய், அலைந்து, திரிந்து ஒவ்வொரு இசைத் தட்டையும் சேகரித்திருக்கிறேன்" என்கிறார் இந்தச் சேகரிப்பாளர்.



சென்னையில் உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டி நடந்த சமயம். சேப்பாக்கம் ஸ்டேடியத்தில் இரண்டரை அடி விட்டம் கொண்ட மெகா சைஸ் கிரிக்கெட் பந்து ஒன்றைப் பார்வைக்கு வைத்திருந்தார்கள். போட்டி முடிந்ததும், சம்பந்தப்பட்டவர்களிடம் சொல்லி, அந்தப் பந்தை வாங்கி, தம் வீட்டில் இருக்கும் மியூஸியத்தில் வைத்துவிட்டார் நேரு.

பந்து மெகா சைஸ் என்றால், இவர் சேகரிப்பில் உள்ள கிரிக்கெட் பேட் மினி சைஸ்.

மினி சைஸில் பகவத் கீதை, பைபிள், குர்ரான், அகராதிகள், காகிதம், களிமண், ரப்பர், பிளாஸ்டிக், மரத்தில் செய்த விதம்

# சேகரிப்பாளர்-3



விதமான முகமூடிகள், ராணுவ மெடல்கள், பழங்கால நாணயங்கள், மினியேச்சர், கார் பொம்மைகள், ரூபாய் நோட்டுகள் என்று ஏராளமான பொருட்கள் வைத்திருக்கிறார்கள் நேருவும், அவரது மனைவி சாவித்திரியும்.

இவர்கள் சென்னையில் வசித்தபோது, இவர்களது சேகரிப்பைப் பார்த்துவிட்டு எழுதாத பத்திரிகைகள் இல்லை;

தம்மிடமுள்ளவற்றைக் கொண்டு நிரந்தரமாக ஒரு மியூசியம் அமைக்க வேண்டும் என்பது நேரு தம்பதியரின் விருப்பம். ஆனால், இவரது விருப்பத்தை நிறைவேற்ற யாரும் உதவி செய்ய முன் வரவில்லை என்பதில் இவருக்கு ஏக வருத்தம்.

இப்போது சென்னையிலிருந்து இடம் பெயர்ந்து, ஏலகிரி மலையில் நிலாவூர் என்கிற மலைக் கிராமத்தில் செட்டிலாகி விட்டனர் நேரு தம்பதி. அங்கே பத்தாயிரம் சதுர அடியில் ஒரு வீடுகட்டி, அதில் தங்கள் சேகரிப்புகளைக் கொண்ட நிரந்தர மியூசியம் அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

"இயற்கை எழில் சூழ்ந்த இடம் ஏலகிரி. எதிர்காலத்தில் இது மிக முக்கியமான சுற்றுலா தலமாகப் போவது நிச்சயம். எனவேதான், இங்கு நிலாவூர் என்கிற இயற்கை எழில் சூழ்ந்த கிராமத்தைத் தேர்ந்தெடுத்தேன்" என்கிறார் நேரு. ○

"இயற்கை எழில் சூழ்ந்த இடம் ஏலகிரி. எதிர்காலத்தில் இது மிக முக்கியமான சுற்றுலா தலமாகப் போவது நிச்சயம். எனவேதான், இங்கு நிலாவூர் என்கிற இயற்கை எழில் சூழ்ந்த கிராமத்தைத் தேர்ந்தெடுத்தேன்"



தி.நகரில் வசிக்கும் சாவித்திரி வீட்டுக்குப் போனால், ஒரே குரங்கு மயம்தான். உட்கார்ந்திருக்கும் குரங்கு, நிற்கும் குரங்கு, தாவும் குரங்கு, தூங்கும் குரங்கு என்று ஒரு பக்கம். சைக்கிள் ஓட்டும் குரங்கு, கார் ஓட்டும் குரங்கு, பைக் ஓட்டும் குரங்கு என்று இன்னொரு பக்கம். பிளாஸ்டிக்கில், பீங்கானில், சாஃப்ட் டாய்ஸ் ரகத்தில் என்று வழக்கமானவற்றுடன், தேங்காய் மட்டையில் செய்யப்பட்ட குரங்குகளும் உண்டு. தேங்காய் மட்டையில் செய்யப்பட்டுள்ள ஐந்து குரங்கும் ஐந்து விதம்!

"பல வருடங்களாக, எங்கள் வீட்டில் கொலு வைப்பது வழக்கம் என்றாலும், ஒரு தடவை பிள்ளை யார்; ஒரு தடவை

# சேகரிப்பாளர்-4



• சாவித்திரி

தாயும், சேயும். இப்படி ஒவ்வொரு வருடமும் ஏதாவது ஒரு ஸ்பெஷல் இருக்கும். போன வருடம் இருபது குரங்கு பொம்மைகள் இடம் பெற்றன. அவற்றை, கொலு முடிந்து பேக் பண்ணும்போது, இன்னும் நிறைய குரங்கு பொம்மைகள் சேர்த்தால் என்ன என்று தோன்றியது. அப்போதே என் குரங்கு வேட்டையும் ஆரம்பித்துவிட்டது. இன்று குரங்கு கலெக்ஷனில் 150 பொம்மைகள் உள்ளன.

"என் குரங்கு கலெக்ஷனைப் பற்றி அறிந்த எங்கள் குடும்ப நண்பர்கள், எங்கே குரங்கு பொம்மைகளைப் பார்த்தாலும், வாங்கிக் கொண்டு வந்து கொடுக்க ஆரம்பித்துவிட்டார்கள். துபாய், மலேசியா, தென் ஆப்ரிக்கா இங்கிருந்தெல்லாம் குரங்கு பொம்மை கிடைத்தது இப்படித்தான்" என்கிறார் சாவித்திரி.

"கறுப்பு கோட், சூட், தொப்பி அணிந்து கையில் மைக்குடன் ஒரு குரங்கு பொம்மையைப் பார்த்தேன். ரொம்பப் பிடித்து விட்டது. விலை கேட்டேன். பணத்தையும் எடுத்துவிட்டேன். அப்புறம் தான் அதில் ஏதோ ரிப்பேர் என்று தெரியவந்தது. கடையில் இருந்த கடைசி பொம்மை அதுதான். சில நாட்கள் கழித்து சிரமப்பட்டு அந்த பொம்மையைத் தேடிக் கண்டு பிடித்து வாங்கினேன். அந்தப் பொம்மை இதுதான்" என்று சாவித்ரி சுட்டிக்காட்ட, கணவர் புகைப்படக் கலைஞர் யோகா அதன் சுவிட்சைத் தட்டியதும், ஒரு கையால் தொப்பியை அசைத்தபடி மறுகையில் உள்ள மைக்கில் பாட ஆரம்பித்தது அந்த அதிசயக் குரங்கு! ○

சுவிட்சைத் தட்டியதும், ஒரு கையால் தொப்பியை அசைத்தபடி மறுகையில் உள்ள மைக்கில் பாட ஆரம்பித்தது அந்த அதிசயக் குரங்கு!

"ரயில் பயணிகளிடம் கொள்ளையடிக்கிறார்கள் கொள்ளைக்காரர்கள். ஸ்டேஷன் மாஸ்டருக்குச் சாப்பாடு கொண்டு வரும் அவரது பெண் மூலம் போலீசுக்கு விஷயம் தெரிந்து, போலீஸ் ஸ்பாட்டுக்கு விரைகிறது. கொள்ளைக்காரர்களுக்கும், போலீசுக்கும் சரமாரியான துப்பாக்கிச் சண்டை. கொள்ளையர்கள் தப்பிவிடுகிறார்கள். இது 'தி கிரேட் டிரெய்ன் ராபரி' என்கிற ஆங்கிலப் படத்தின் கதை. 1902ல் வெளியான முதல் சினிமா" என்று கதை சொல்கிறார் அறந்தை மணியன்.



# சேகரிப்பாளர்-5

இவர் சுமார் ஐயாயிரம் திரைப்படங்களின் கதைகளைச் சேகரித்து வைத்திருக்கிறார். கடந்த முப்பதாண்டுகளாக சிரத்தையுடன் இந்தச் சேகரிப்பு நடந்து வருகிறது.

"உங்களுக்கு இதில் ஆர்வம் ஏற்பட்டது எப்படி?"

"சொந்த ஊரான அறந்தாங்கியில், தியேட்டரில் ஞாயிற்றுக் கிழமைகளில் காலைக் காட்சியாக ஆங்கிலப் படங்கள் திரையிடுவார்கள். அந்தப் படங்களை நான் அதிக அளவில் பார்ப்பேன். பார்த்த படத்தின் கதை, அது பற்றிய என் கருத்துக்களை டைரியில் குறித்து வைப்பது என் பழக்கம். அதுதான் பிள்ளையார் சுழி!"



• அறந்தை மணியன்

65ல் சென்னைக்கு வந்தபின் ஆங்கிலம், இந்தி படங்கள் நிறைய பார்க்க வாய்ப்பு கிடைத்தது. பூனா ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில், ஃபிலிம் அப்ரிசியேஷன் கோர்ஸ் படித்த போது, உலகளாவிய சினிமாவின் முழு பரிமாணத்தைப் புரிந்து கொண்டேன். அதன்பின் திரைப்படக் கழகம் ஒன்று தொடங்கி, பன்னாட்டு திரைப்படங்களைத் திரையிட ஏற்பாடு செய்தேன். உலக சினிமா, பன்மொழி இந்திய சினிமா பற்றி பல பத்திரிகைகள், புத்தகங்களைத் தேடிப்பிடித்துப் படித்தேன். பார்க்கிற, பார்க்க முடியாமல் போன படங்களின் கதைச் சுருக்கம், இயக்குனர், ஹீரோ போன்ற விவரங்களை முறைப்படி தொகுக்க ஆரம்பித்தேன். யாருக்கும் தெரியாது என்று நினைத்து, அயல் நாட்டுப் படங்களின் கதைகளைச் சுட்டுக் கொண்டு வந்து, தமிழில் படம் எடுத்துள்ள அறிவாளிகளை என் உலக சினிமா அனுபவத்தின் அடிப்படையில் பெரிய பட்டியல் போட முடியும்!" என்கிறார் அறந்தை மணியன். ○

"அயல்நாட்டு படங்களின் கதைகளைச் சுட்டுக் தமிழில் படம் எடுத்துள்ள அறிவாளிகளை என் அனுபவத்தின் அடிப்படையில் பட்டியல் போட முடியும்!"



நமக்கெல்லாம் பால் பாயிண்ட் பேனா தெரியும்; பவுண்டன் பேனா தெரியும். ஆனால் தண்ணீருக்குள்ளேயும் எழுதுகிற பேனா இருக்கிறது. விண்வெளியில் பயன்படுத்தக்கூடிய பேனாவைத் தெரியுமா? மண்ணில் போட்டால், நாளடைவில் மக்கிப் போகிற பயோடீக்ரேடபிள் பேனாவைத் தெரியுமா? பெங்களூரைச் சேர்ந்த ஈஸ்வரைக் கேளுங்கள். இன்னும் எத்தனையோ விதம்விதமான பேனாக்களைக் காட்டுவார். பேனாக்கள் சேகரிப்பது ஈஸ்வரரின் பொழுதுபோக்கு.

ஜாலியாக ஆரம்பித்த ஹாபியில் இதுவரை பதினோராயிரம் பேனாக்கள் சேர்ந்திருக்கின்றன – இந்திராகாந்தி பயன்படுத்திய பேனா உட்பட!

# சேகரிப்பாளர்-6



கல்லூரி நாட்களில், நண்பர் ஒருவர் வைத்திருந்த பேனா இவரை மிகவும் கவர, அதுவே பிள்ளையார் சுழி. தெருவில் விற்கிற ஐம்பது பைசா பேனா முதல் பதினைந்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள பேனா வரை இவரிடம் ஏகப்பட்ட வெரைட்டி. மூங்கில் குழாய், டெரகோட்டா, பீங்கான், கிரானைட், தேங்காய் ஓடு என்று வித்தியாசமான சமாசாரங்களில் செய்யப்பட்ட பேனாக்கள் வளையல், பிரேஸ்லெட், லாக்கெட், நகம், ஸ்க்ரூ, கத்தி, துப்பாக்கி, சீப்பு, ஸ்பூன் இசைக் கருவிகளைப் போன்ற உருவம் கொண்ட பேனாக்கள் என ரகரகமாகப் பாதுகாத்து வருகிறார்.

இன்னொரு சூப்பரான பேனா, ஸ்டாக் ஹோம் நகரில் தயாரிக்கப்பட்ட வாசனைப் பேனா. இதிலிருந்து, எழுதும் போது, நறுமணம் வந்து கொண்டே இருக்கும்.

ஏறக்குறைய அறுபது நாடுகளில் தயாரிக்கப்பட்ட பேனாக்கள் இவரிடம் இருக்கின்றன. பேனா தயாரிப்புக் கம்பெனிகள் புதுப்புது ஐடியாக்களுக்காக இவரைத் தேடி வருகிறார்களாம்.

"பெங்களூரிலும், சொந்த ஊரான மங்களூரிலும் பேனா மியூசியம் அமைப்பதுதான் என் லட்சியம்" என்கிறார் பேனா மன்னன் ஈஸ்வர்!

> “சூப்பரான பேனா, ஸ்டாக் ஹோம் நகரில் தயாரிக்கப்பட்ட வாசனைப் பேனா. எழுதும் போது, நறுமணம் வந்து கொண்டே இருக்கும்.”

— மௌலி

படங்கள் : யோகா



"குடியுரிமை பெற விண்ணப்பித்த போதுகூட மாமியார் தனக்கு வைத்த பெயரான சோனியா என்ற பெயரைக் குறிப்பிடவில்லை. அண்டோனியா மைனோ என்று மட்டும்தான் குறிப்பிட்டு இருந்தார். எனவே சோனியாவிற்கு இந்தியாவின் மீது விசுவாசமும் பற்றும் இல்லை; அவரது பற்றும் பாசமும் இத்தாலியின் மீதுதான்"_ பத்திரிகையாளர்களிடம் ஜெயலலிதா சொன்ன இந்த விஷயம் சரிதானா?

"சோனியாவின் தந்தை முசோலினியின் படைத் தளபதியாக இருந்தவர். இரண்டாவது உலகப் போரின்

# காஸ்ட்லி



போது ரஷ்யப் படைகளால் போர்க் கைதியாகப் பிடித்துச் செல்லப்பட்டார் அவர். அப்போது அவர் தப்புவதற்கு மூன்று ரஷ்ய சகோதரிகள் உதவினார்கள். அவர்கள் பெயர் சோனியா, நாடியா, அனுஷ்கா. அவர்களில் மூத்தவரான சோனியாவின் பெயரைத்தான் அந்தத் தந்தை தன் மகளுக்குச் சூட்டினார். அண்டோனியோ மைனோ என்பது குடும்பப் பெயர்'' என்கிறார் சோனியாவின் வாழ்க்கை வரலாற்றை ஆங்கிலத்தில் தொகுத்திருக்கும் எழுத்தாளரும், பத்திரிகையாளருமான பி.சி. கணேசன்.

சோனியா பற்றி அதிரடியான அக்னி அம்புகளை வீசி, அரசியல் களத்தை இன்னமும் சூடேற்றியிருக்கிறார் ஜெ.

"சோனியாவின் சகோதரிகள் மேல் சிலைத் திருட்டு வழக்கு இருக்கிறது; அவரது குடும்பத்தின் மீது போபர்ஸ் வழக்கு இருக்கிறது" என்றெல்லாம் திடீரென்று ஜெயலலிதா தாக்கத் துணிந்ததற்கு என்ன காரணம்?

"இதுபோன்று ஜெயலலிதா பேசுவது ஒன்றும் புதிதல்ல. எம்.ஜி.ஆர். மரணத்துக்கு ஜானகி அம்மாதான் காரணம் என்றும், ராஜீவ் கொலையில் மூப்பனாருக்கும் தொடர்பு

“ கலைஞரும், வாஜ்பாயும் ஓய்வு பெற்றுவிட்ட சூழ்நிலை ஏற்படும் வாய்ப்புண்டு. கலைஞரின் வலுவான தலைமையில்லாத தி.மு.க. இரண்டு, மூன்றாக சிதறும் நிலை உருவாகலாம். ”

இருக்கிறது என்றெல்லாம் பேசியவர்தான் அவர். இப்படி சகட்டுமேனிக்குப் பேசுவது அவரது சுபாவம். இப்போது பேசியதற்கு மற்றொரு காரணம், மதுரையில் த.மா.கா – காங்கிரஸ் இணைப்பின் போது கூடிய கூட்டமும், சோனியா "காங்கிரஸ் தனித்து ஆட்சி அமைக்கப் பாடுபடும்" என்று பேசியதும்தான். த.மா.காவும், காங்கிரஸும் இணைந்து அவருக்கு அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. இரண்டும் பிரிந்திருந்தால் பேரம் பேசுவது எளிது. ஆனால் இப்போது ஒருங்கிணைந்த காங்கிரஸ் கூட்டணி வந்தால் இடப் பங்கீட்டில் அதிக அழுத்தம் கொடுக்கும் வாய்ப்புள்ளது. அதனால்தான் காங்கிரஸை பலவீனப்படுத்தும் முயற்சியாக அதிரடி அடித்திருக்கிறார். இதுபோன்ற பேச்சுக்களின் மூலம் பா.ஜ.கவையும் சந்தோஷப்படுத்த முடியுமல்லவா! வருகிற பாராளுமன்றத் தேர்தல் வரை பா.ஜ.கவுடன் சுமுக உறவுடன் இருந்தால்தான் மத்திய அரசின் நிலுவையிலுள்ள தனது வருமான வரி அன்னியச் செலாவணி வழக்குகளின் வீரியத்தை குறைக்க முடியும். அதே சமயத்தில் தி.மு.க. – பா.ஜ.க. உறவை வெட்டி, தி.மு.க.வை இன்னமும் பழி வாங்கலாம். இவற்றை மனத்தில் வைத்துத்தான் ஜெ. செயல்படுகிறார்" என்கிறார் அரசியல் விமர்சகர் சின்னக் குத்தூசி.

# கனவு!



ஜெயலலிதாவின் ஆவேசத் தாக்குதல்களுக்கு காங்கிரஸ் தரப்பில் இருந்து பதில் தாக்குதல்கள் வந்தபோதும், அதில் காரம் மணம் எதிர்பார்த்த அளவில் இல்லை என்பது பளிச்சென்று தெரிந்தது. ஒருவேளை அவர் அளவுக்கு இறங்கிப் போவது சரியாக இருக்காது என்று காங்கிரஸ் மேலிடம் முடிவு செய்துவிட்டது போலும்.

"ஜெயலலிதாவின் பேச்சு குறைந்த பட்சம் தமிழக காங்கிரஸ் தலைவர்களை, இப்போதைக்கு ஒற்றுமைப்படுத்தியிருக்கிறது. மற்றபடி அம்மா ஆதரவுத் தலைவர்கள் ஜெ.வைத் தாக்க வெண்ணெய் தடவிய வார்த்தைகளைத் தேடியது புரிந்து போனது. சோனியா வெளிநாட்டுக்காரர் என்பது பா.ஜ.கவில் சொல்லப்பட்டு செல்லரித்துப் போன வாதம். இந்தியக் குடியுரிமை பெற்றவர்கள் பெரிய பொறுப்பு வகிக்கத் தடையில்லை என்று சுப்ரீம் கோர்ட்டே சொல்லிவிட்ட பிறகு காங்கிரஸ்காரர்கள் சொல்வதை அலட்சியப்படுத்துவது நல்லது. இதையே அவர்கள் பேசிக் கொண்டிருந்தால் ஜெ. விருப்பப்படி அது தேசிய அளவில் விவாதம் ஆகிவிடும். முன்பு சரத்பவார் இதே போன்று சொன்னார் எடுபடவில்லை; அத்வானி 'ரோம் ராஜ்யம்' என்று கிண்டல் செய்தார். மக்கள் புறக்கணித்து 14 மாநிலங்களில் காங்கிரஸை



யெல்லாம் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ள வேண்டாம்" என்று சொல்லி சோனியாவை கன்வின்ஸ் செய்யும் வாய்ப்புக் கூட இருக்கிறது. அ.தி.மு.க.வுடன் கூட்டணிக்காக மூப்பனார், சிதம்பரத்தையே கை கழுவியதுதானே காங்கிரஸ்' என்கிறார் சின்னக்குத்தூசி.

"காங்கிரஸுடன் கூட்டணி வைக்க நேரிட்டால்" என்று பத்திரிகையாளர்கள் கேட்டபோது "முதலில் சோனியா காந்தி பிரதமர் பதவிக்கான வேட்பாளர் இல்லை என்று சொல்லட்டும்" என்கிறார் ஜெ. சோனியா காந்தி தலைமையேற்ற பிறகுதான் பா.ஜ.கவை விட அதிகமாக 32 சதவீத வாக்குகளை நாடு முழுவதும் வாங்கியிருக்கிறது காங்கிரஸ். குறுகிய வட்டத்துக்குள் செயல்படும் ஜெயலலிதா தேசிய அரசியலை வழி நடத்தும் அளவுக்கு இன்னும் வளரவில்லை. எனவே தம் எல்லையறிந்து பேசுவது நல்லது" என்கிறார் பி.சி. கணேசன். நெசவாளர், விவசாயிகள், மாணவர்கள், அரசு ஊழியர்கள் என்று சமுதாயத்தின் ஒட்டுமொத்தத் தரப்பும் அ.தி.மு.க. அரசு மேல் அதிருப்தியுற்று இருக்கின்றன. எனவே மக்கள் பிரச்னைகளைத் திசை திருப்ப, 'சொல்லாட்டம்' ஆடி ஓய்ந்திருக்கிறார் ஜெயலலிதா" என்கிறார் அவர்.

ஆட்சியில் அமர்த்தினார்கள். ஒருமுறை ஜெ.வுக்குப் பதில் சொல்லியாகிவிட்டது. இனி அலட்சியப்படுத்துவதுதான் சரி. குரங்கு குட்டியை விட்டு சூடு பார்க்கச் சொல்லும் என்று சொல்வார்கள். அதுபோல பா.ஜ.க. தூண்டிவிட, பிரச்னையைக் கிளப்பியிருக்கிறார் ஜெ" என்கிறார் பி.சி. கணேசன்.

"1998 பாராளுமன்றத் தேர்தலில் பா.ஜ.க.வோடு கூட்டணி வைத்திருந்தபோது 'சோனியா வெளிநாட்டுக்காரர்' என்ற பிரச்னையைக் கிளப்பியது மட்டுமல்லாமல், காங்கிரஸை ஒழிப்பேன் என்றெல்லாம் சூளுரைத்தவர்தான் ஜெ. ஆனால் 1999ல் பாராளுமன்ற தேர்தலில் காங்கிரஸுடன் கூட்டு அமைத்துக் கொண்டார். 2001ல் தமிழக சட்டமன்றத் தேர்தலிலும் கூட்டணி தொடர்ந்தது. இந்த நிலைதான் பல காங்கிரஸ் தலைவர்களின் வாயைக் கடுமையாகத் தாக்காத அளவுக்குக் கட்டுப்படுத்தியுள்ளது" என்கிறார்கள் சிலர்.

"கடந்த இருபது வருடமாக அரசியலில் இருக்கும் ஜெயலலிதா ஒரு விஷயத்தை மிகத் தெளிவாகப் புரிந்து வைத்திருக்கிறார். இரண்டு தேர்தல்களுக்கு இடையில் என்ன பேசினாலும், தேர்தலின்போது, எப்படிப்பட்ட நிலை வேண்டுமானாலும் எடுக்க முடியும், கூட்டணி யாருடன் வேண்டுமானாலும் அமைக்க முடியும்' என்பதுதான் அது. காங்கிரஸுக்குள்ளே அவர் அனுப்பித்தான் வாழப்பாடி சென்றிருக்கிறார். பிரணாப் முகர்ஜி, அர்ஜுன்சிங், மார்க்கரெட் ஆல்வா என்று அம்மா ஆதரவு கோஷ்டி ஒன்று மேலிடத்தில் இருக்கிறது. தேர்தல் நெருங்கும்போது, "ஜெ.வின் பழைய பேச்சுக்களை

**கா**ங்கிரஸின் மீது அம்மா அடித்த அதிரடியைக் கண்டு அ.தி.மு.க. பிரமுகர்களே ஆடிப் போய் விட்டனர். "என்ன இருந்தாலும் காங்கிரஸ் கூட்டணி இருந்தால் ஒரு கூடுதல் பலம்தான். தேசிய அரசியலில் கால் வைக்க முயற்சிக்கும் போது பரபரப்பை உண்டுபண்ண இதுபோன்ற தாக்குதல்கள் சகஜம்தானே" என்கிறார் ஒரு மூத்த அ.தி.மு.க. பிரமுகர். தேவேகவுடா, குஜ்ரால் போன்று அரசியல் பின்பலமில்லாதவர்கள் பிரதமராக வர முடிகிறது என்றால், தமிழகத்தின் அசைக்க முடியாத தலைவராக இருக்கும் அம்மா, பிரதமர் பதவிக்குப் பொருத்தமானவர்தானே" என்கிறார் அவர்.

"ஜெயலலிதா தற்போது சோனியாவுக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கியிருப்பது அவரது தொலைநோக்கு அரசியல் திட்டத்தின் ஒரு பகுதிதான். இரண்டாண்டுகள்

கழித்து, கலைஞரும், வாஜ்பாயும் ஓய்வு பெற்றுவிடும் வாய்ப்புண்டு. கலைஞரின் வலுவான தலைமையில்லாத தி.மு.க. இரண்டு, மூன்றாகச் சிதறும் நிலை உருவாகலாம். ஒரு பகுதி ஸ்டாலினுடனும், இன்னொரு பகுதி வைகோவுடனும், மூன்றாவது பகுதி அ.தி.மு.க.வுடனேவும் போகக் கூடும். வைகோவை பலவீனப்படுத்த 'பொடா'வில் போட்டாகி விட்டது. தி.மு.க. பலவீனமான நிலையில் காங்கிரஸ், இடது சாரிகள், முஸ்லிம்லீக் ஆகிய அமைப்புகள் ஓரணியில் திரண்டு அ.தி.மு.க.வை எதிர்க்கும். அது போன்ற அணி உருவாகாமல் தடுக்கவே தில்லியில் மூன்றாவது அணி என்ற கோஷத்தை எழுப்பியிருக்கிறார் ஜெ. தில்லியில் இடது சாரிகளுடன் கூட்டு என்றால் தமிழகத்திலும் காங்கிரஸுடன் கூட்டு இருக்காது. மூன்றாவது அணியின் மூலம், பா.ஜ.க.வுக்கு எதிரான வாக்குகள் ஒட்டு மொத்தமாக காங்கிரஸுக்குச் சேராமல் பிளவுபடும். இது பா.ஜ.க. அத்வானிக்கு பிரதமர் பதவியேற்க மிகவும் உதவி புரியும். எனவே ஒரே கல்லில் இரண்டு மாங்காய் என்ற அளவில், சோனியா வெளிநாட்டுக்காரர், மூன்றாவது அணி என்றெல்லாம் பேசியிருக்கிறார் ஜெயலலிதா. பா.ஜ.கவின் ஊது குழலாக அவர் மாறி வருவதற்கு மற்றொரு உதாரணம் காட்டலாம். ஆர்.எஸ்.எஸ். குருமூர்த்தியின் கட்டுரைகள், அடுத்த நாளே ஜெயலலிதாவின் அறிக்கைகளாக வருகின்றன. ஆனால் ஜெயலலிதாவின் சாகசம் எடுபடாது" என்கிறார் மூத்த பத்திரிகையாளர் ஞாநி.

தேசிய அளவில் மூன்றாவது அணி என்று இடது சாரிகளும், முலாயம் சிங்கும் சேர்ந்து அமைத்தார்கள். ஆனால் ஜனாதிபதி தேர்தலில் அது பிளவுபட்டுப் போய் விட்டது. இப்போது முலாயம், சோனியாவிடம் தூது விட்டுக் கொண்டிருக்கிறார். அது போல சோம்நாத் சாட்டர்ஜி, சோனியாவுக்கு விருந்து வைத்து அரசியல் உறவு வைத்துக் கொள்ளத் துவங்கி விட்டார்.

"தேசிய அரசியலில் பா.ஜ.கவுக்கு மாற்று சக்தியாக, வலுவாக இருப்பது காங்கிரஸ் தான். இது இடதுசாரிகளுக்குப் புரியாததல்ல. மூன்றாவது அணி என்று தனியாக அமைத்து வாக்குகளைப் பிரித்தால் அது பா.ஜ.கவுக்கு நல்ல வாய்ப்பாகப் போய்விடும் என்று இடது சாரிகளுக்குத் தெரியாதா என்ன?" என்று கேட்கிறார் பி.சி. கணேசன்.

அதுபோல சரத்பவாரின் தேசியவாத காங்கிரஸ், இரண்டு மாநிலங்களில் காங்கிரஸ் கூட்டணியில் இருக்கிறது. அவரும் ஜெயலலிதாவின் கருத்துக்கு ஆதரவாக வர மாட்டார். "மூன்றாவது அணி அமைக்க ஜெயலலிதா நம்பிக்கையான தலைவர் அல்ல" என்று சி.பி.எம். சொல்லி விட்டது. இப்படிப்பட்ட நிலையில் இன்று ஜெ.வுக்கு ஆதரவாக இருக்கும் ஒரு பிரமுகர் சுப்பிரமணிய சுவாமிதான். "தேசிய அளவில் காங்கிரஸைப் பிளந்து, இடதுசாரிகளுடன்




"தலைவர் தன் புத்தகத்துக்கு ஏண்டா கலிகாலம்னு பெயர் வச்சிட்டாரு?"
"தடாவில் முன்பு ஒரு வருஷம் ஜெயில் களி தின்ற அனுபவத்தைத் தானே புத்தகமா எழுதியிருக்கார்!"
— உ. ராஜாஜி

மூன்றாவது அணி அமைத்து, தில்லியில் உங்களுக்குத் தகுதியான இடத்தைப் பெற்றுத் தருவேன்" என்று ஜெ.வுக்கு சுவாமி நம்பிக்கை ஊட்டியிருப்பதாகப் பேச்சு எழுந்துள்ளது. இது போன்ற ஒரு சூழ்நிலை தங்களுக்குத்தான் சாதகம் என்று, வாஜ்பாய் மீது ஜெ. தாக்குதல் நடத்தியதைக் கூடக் கண்டு கொள்ளாமல் பா.ஜ.க. மௌனம் காக்கிறது.

— ப்ரியன்

அட்டை, படங்கள் : வெங்கட்

இந்தா, பிடி
கும் குத்து!
அப்பர் கட்! நாக் அவுட்!



# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

## ஜெ. பாணி மிரட்டல் அரசியல்!

சோனியா காந்தி பிறப்பால் இந்தியர் அல்ல; ஆகவே, அவர் இந்நாட்டின் பிரதமராகப் பொறுப்பேற்பது விரும்பத்தக்கதல்ல என்கிற கருத்து பலருக்கு உண்டு. பத்திரிகைகளிலும் அரசியல் மேடைகளிலும் கருத்தரங்குகளிலும் இக் கருத்து பல முறை வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இன்று சோனியா தலைமை வகிக்கும் காங்கிரஸ் கட்சியில்கூட இவ் விஷயத்தில் கருத்து வேறுபாடு உண்டாகி பிளவு ஏற்பட்டது.

ஆனால், உணர்வு ரீதியான இந்தக் கருத்துகளைப் புறந்தள்ளிவிட்டு, வெறும் சட்ட ரீதியாக மட்டுமே இச் சிக்கலை அணுகிய உச்சநீதி மன்றம், சோனியாவின் இந்திய பிரஜா உரிமையையும் தேர்தலில் நின்று அரசு அமைக்கும் அவரது உரிமையையும் அழுத்தம் திருத்தமாக அங்கீகரித்திருக்கிறது.

மக்கள் மன்றமோ, சட்ட ரீதியாக மட்டுமின்றி, உணர்வு ரீதியாகவும் அவரை ஏற்கத் தயார் என்று தெரிவிக்கும் வகையில் அவருக்கு வாக்களித்து, பாராளுமன்ற உறுப்பினராக்கியிருக்கிறது.

இவ்வளவு நடந்த பிறகும், ஜெயலலிதா மீண்டும் பழைய பிரச்னையைக் கிளறக் காரணம் என்னவாயிருக்கும்?



2002 செப்டெம்பர் 15
சித்ரபானு ஆவணி 30
மலர் : 61
இதழ் : 7




அதுவும் காவிரி நடுவர் மன்றக் கூட்டத்தில் பங்கேற்க டெல்லி சென்றவர், திடீரென்று சோனியா காந்திக்கு எதிராக வார்த்தைப் போரைத் தொடுப்பானேன்? பதிலுக்குச் சாடாமல் சோனியா மௌனமாய் இருந்துவிட, ஜெயலலிதா, விஷயத்தை அதோடு விட்டு விடாமல் சென்னை திரும்பிய பிறகு மீண்டும் அதே பிரச்னையைக் கிளறிவிடுவானேன்? தாமே பத்திரிகையாளர் சந்திப்புக்கு ஏற்பாடு செய்வானேன்? 'சோனியாவைப் பற்றி நான் பேசியதற்கு நீங்கள் விளக்கம் கேட்கப் போவதில்லையா?'என்று பத்திரிகையாளர்களை நோக்கித் தாமே கேள்வி கேட்டு பதிலும் சொல்லுவானேன்? அந்தப் பதிலிலும் சரி, சோனியாவுக்கு எதிரான இதர அறிக்கைகளிலும் சரி, நாகரிக எல்லைகளை மீறி வார்த்தைகளைக் கொட்டுவானேன்?

ஜெயலலிதா பாணி 'கவனம் கவரும் அரசியல்' அணுகுமுறை இது என்பது ஒரு காரணம்.

வரவிருக்கும் பாராளுமன்றத் தேர்தலை மனதிலிருத்தி அவர் வியூகம் வகுக்கிறார் என்பது மற்றொரு காரணம்.

சமீபத்திய காங் - த.மா.க இணைப்பின் வெற்றி, இதர கட்சிக்காரர்களைப் போல் ஜெயலலிதாவையும் நிமிர்ந்து உட்காரச் செய்திருக்கிறது.

நாட்டின் பதினான்கு மாநிலங்களில் ஏற்கெனவே ஆட்சியைப் பிடித்துள்ள காங்கிரசுக்கு பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி வாய்ப்புகள் அதிகம். அதிலும் தற்போதைய பி.ஜே.பி. தலைமையிலான கூட்டணி ஆட்சிக் காலத்தில் நிர்வாகமோ பொருளாதாரமோ மெச்சும்படியாக இல்லை; அடிப்படைவாதம் படமெடுத்து ஆடுகிறது என்பதையெல்லாம் நோக்க, வாக்காளர்கள் ஒரு நல்ல மாற்றத்தை நாடுவார்கள் என்று எதிர்பார்க்கலாம்.

இந்நிலையில், காங்கிரசுடன் கூட்டணி வைத்துக் கொண்டு தமது முக்கியத்துவத்தை விட்டுக் கொடுக்க விரும்பாத ஜெயலலிதா, காங்கிரஸ் - பி.ஜே.பி. அல்லாத இதர கட்சிகள் துணையுடன் மூன்றாவது அணி அமைத்து, தேர்தல் களத்தில் இறங்க திட்டமிடக் கூடும். சந்தடி சாக்கில் பிடுங்கியது ஆதாயம் என்ற ரீதியில், இரு தரப்புக்கும் மெஜாரிடி இல்லாத நிலையில், தம்மைப் பிரதமராக ஏற்கும் தரப்புக்கு ஆதரவு தரும் எண்ணம் கூட அவருக்கு இருக்கலாம். இந்தத் திட்டத்தின் முதல் கட்டமாகவே சோனியா எதிர்ப்புப் பிரசாரத்தைத் தமிழக முதல்வர் தொடங்கியிருக்கிறார் என்று நம்புதற்கு இடமிருக்கிறது.

ஆனால், இந்தத் திட்டத்தை அரசியல் முதிர்ச்சியின்றி சிறுபிள்ளைத் தனமாகக் கையாண்டு




வருவதன் மூலம் தமது வெற்றி வாய்ப்புகளைக் குறைத்துக் கொள்வதுடன் குலைத்தும் கொள்கிறார்.

சோனியாவை மக்கள் ஏற்ற பிறகு அவரது இத்தாலியப் பின்னணி பற்றிப் பேசுவதில் அர்த்தமில்லை. அதைச் சுட்டிக் காட்டிக் கடுமையாகப் பேசப் பேச, சோனியாவிடத்தில் மக்களுக்கு அனுதாபம் அதிகரிக்கிற வாய்ப்புகளே அதிகம்.

ராஜீவின் மனைவி, இந்திராவின் மருமகள், நேரு குடும்பத்தவர் என்கிற ஆதாயங்கள் சோனியாவுக்கு இருப்பதை மறுக்க முடியாது.

எம்.ஜி.ஆரின் நம்பிக்கையைப் பெற்றவர் என்ற காரணத்தால்தான் அரசியல் பின்னணி இல்லாத நிலையிலும் ஜெயலலிதாவுக்கு வாக்காளர்களின் அனுதாபமும் ஆதரவும் கிடைத்தது. அ.தி.மு.க.விலேயே பலர் அவரை எதிர்த்தபோதும் கிடைத்தது. இதே ரீதியில், சோனியாவுக்கு ஆதரவாகவும் தேசிய அளவில் அனுதாப அலை வீசுகின்ற வாய்ப்புகள் உண்டு.

ஜெயலலிதா இதை மறந்துவிட்டு, நாள்தோறும் கடுஞ்சொற்கள் வீசுவதும் நாகரிக எல்லைகளை மீறிய விமர்சனங்கள் செய்வதும் பலனளிக்காது.

இன்றுவரை நேரடியாகப் பதில் பேசாமல் சோனியா மௌனம் காப்பது புத்திசாலித்தனம். அதனினும் புத்திசாலித்தனமாக, ஜெயலலிதாவின் விமர்சனங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க அவர் ஒன்று செய்யலாம். கட்சித் தலைமையை விட்டுக் கொடுக்காமல், ஆட்சித் தலைமைக்குச் சிறந்ததொரு நிர்வாகியை, அனுபவஸ்தரை முன்னிறுத்தி, எதிர்காலப் பிரதமர் என்று அறிவிக்கலாம்.

அவ்வாறு செய்தால், காங்கிரஸை இன்று எதிர்ப்பவர்கள் கூட ஆதரிப்பார்கள். மக்களின் நம்பிக்கையும் ஆதரவும் ஒரு சேரக் கிடைக்கப்பெற்று காங்கிரஸ் மீண்டும் ஆட்சியமைக்க நிறைய வாய்ப்பு இருக்கிறது.

சோனியா பிரதமராகப் பதவியேற்றாலோ தினமும் 'அன்னியர்' என்ற விமர்சனத்தை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். காங்கிரஸ் தலைவராக மட்டுமே நீடித்தால், பிரதமருக்கு ஆலோசனைகள் கூறி இயக்கும் விதத்தில் அபாயங்களற்ற அதிகார பலம் அவருக்கு இருக்கும்.

இந்த யோசனையை காங்கிரஸில் உள்ள யாருமே சோனியாவுக்குச் சொல்ல முன்வரமாட்டார்கள். ஆனால், சோனியா புத்திசாலியாக இருந்தால், இந்த முடிவுக்கே வருவார். இந்த முடிவு அவருக்கும் காங்கிரஸுக்கும் தேசத்துக்கும் நல்ல எதிர்காலத்தை அமைத்துத் தரும். ○




✉ 'விடிகின்ற நேரம்' சிறுகதை படித்தேன். வீதியழகு பெற்ற காரைக்காலின் அமைப்பினை விடியல் நேர இதத்தோடும் பதத்தோடும் அனுபவித்துக் காண்பதும், பள்ளிவாசல் மினாராவின் புறாக்களின் மெல்லிய சிறகடிப்பு ஓசையையும், மாதா கோவிலில் வாசிக்கப் பெறும் பைபிள் வசன வாசிப்பையும், சிவன் கோவில் மணியோசை ரீங்காரத்தையும் கேட்பது வாசகர் பெறும் புதிய அனுபவமாகும்.

புதுச்சேரி, அரிமதி தென்னகன்

✉ வாழ்க்கைத் தரம் மாறலாம்; ஆனால் வாழ்வு மாறாது என்பதைச் சொன்னது திருவாரூர் பாபுவின் 'உணர்ச்சொல்லி' சிறுகதை.

சேலம், ஹரிபிரியன்

# கல்கி கனவுக்கு ஜெ. அனுமதி ?

✉ தலையங்கம் அருமை. சென்ற தேர்தலில் 'வாக்குச் சாவடிக்கே வராத வாக்காளர்கள்' என்றிருப்பதை 'வாக்குச் சாவடிக்குள் அனுமதிக்கப்படாத உண்மையான வாக்காளர்கள் அதிகம்' என்று மாற்றிக் கொள்ளுவது சரியென்று நினைக்கிறேன்.

கோவை, ஆர்.எஸ்.லக்ஷ்மி

✉ சூதாடிச்சித்தன் கார்த்தி கேயனின் நகர்உலா அமர்க்களம்.

திருநெல்வேலி, த.பகவதி

✉ 'இதைப் படிங்க' படித்தேன். எல்லோரும் இதைப் பாடமாக எடுத்து கொண்டு ரயில் பெட்டிகளின் கதவை, ரயில் ஓடும்போது கவனமாக மூட வேண்டும். வாசகர்களின் நலனைக் கருத்தில் கொண்டு இது மாதிரி செய்திகளை அடிக்கடி வெளியிடவும்.

பாமணி, கிருஷ்ணப்பா

✉ தலையங்கம் பலவகைகளிலும் நன்கு அலசி ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கிறது. இதைக் காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்து, கோஷ்டிச் சண்டைகளை ஒழித்து சுறுசுறுப்புடன் இப்போதிருந்தே செயல்பட்டால் நல்ல பலனை அனுபவிக்கலாம்.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ தலையங்கம் என்னவோ படிப்பதற்கு நன்றாகத் தானிருந்தது. ஆனால் காங்கிரஸ் உணர்ச்சி பெற்று - எழுந்து, - ஆட்சி அமைச்சு... அட தேவுடா! ஒருவேளை சோனியாவோடு சேர்ந்து கனவுகாண கல்கிக்கும் அனுமதி அளித்து விட்டாரோ ஜெயலலிதா?

ஆதமங்கலம் புதூர், கே. சண்முகம்

✉ பஸ்லுல்லா ரோடில் கட்டப்பட்ட தமது வீட்டை ராஜாஜிக்கு வழங்கினார் 'கல்கி' என்று 25.08.02 இதழில் பிரசுரமாகியுள்ளது. புதிதாகக் தாம் கட்டிக் குடியேறிய வீட்டை ராஜாஜிக்காகக் 'கல்கி' காலி செய்து கொடுத்தார் என்பது உண்மையே. ஆனால் இந்த வீட்டை ஜாம்னாலால் பஜாஜ் அடக்க விலைக்கு வாங்கி ராஜாஜிக்கு வசிக்கக் கொடுத்தார். ராஜாஜி வற்புறுத்தியதன் பேரில் அதற்கு ரூ.200 மாத வாடகை பெற்றுக் கொண்டார். சில ஆண்டுகளுக்குப் பிறகு ஜம்னாலால் பஜாஜின் குமாரர் அந்த வீட்டை ராஜாஜிக்குக் கிரயம் செய்தே கொடுத்துவிட்டார். இந்த விவரங்களை சுந்தாவின் 'பொன்னியின் புதல்வர்' மற்றும் ராஜ்மோகன் காந்தியின் 'ராஜாஜி வாழ்க்கை வரலாறு' ஆகியவற்றில் காணலாம்.

சென்னை, வேதமூர்த்தி

## வட்டமேஜை

முன்னோர்களுக்கு திதி கொடுக்கும் வழக்கத்தை விட்டவர்களுக்கும் - மறந்தவர்களுக்கும் தம்மை நினைவுகூறும் குடும்பத்தாருக்கு மஹாளயபக்ஷ காலத்தில் பிதுர்க்கள் பூமிக்கு வந்து நல்லாசி வழங்குகின்றனர்.



# புண்ணியக்ஷேத்ரம் இராமேஸ்வரத்தில் மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், புரட்டாசி மாத மாளயபக்ஷ அமாவாஸையன்று, சர்வ கோடி லோகங்களிலுமுள்ள மஹரிஷிகள் உட்பட அனைத்து ஜீவன்கள், தேவதைகள் அனைவரும் பூலோகத்திற்கு வந்து புண்ணிய நதிக்கரைகளிலும், சமுத்திரங்களிலும், இராமேஸ்வரம் போன்ற புனிதத் தலங்களிலும் தர்ப்பண பூஜையை மேற்கொள்கின்றனர். வசு, ருத்ர, ஆதித்ய, பித்ரு தேவர்களே இந்நாளில் தர்ப்பணம் இடுகின்றனர் என்றால் மாளயபக்ஷ மஹிமை பெரிதன்றோ? நம் மூதாதையர்களான பித்ருக்கள், தாம் நினைத்தபடியெல்லாம் பூலோகத்திற்கு வர இயலாது. ஆனால், அமாவாஸை, இறந்த திதி, மாதப் பிறப்பு, மாளயபக்ஷ நாட்கள் போன்ற நாட்களில்தான் அவர்கள் பூலோகத்திற்கு வர அனுமதிக்கப்படுகிறார்கள். எனவே அவர்கள் சூட்சும தேகத்தில் பூலோகத்திற்கு வருகின்ற நாட்களில், நாம் பித்ரு தர்ப்பண பூஜைகளை நிறைவேற்றிட, அவர்கள் அவற்றை இங்கு நேரடியாகப் பெற்று ஆசியளிக்கின்றனர்.

மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வது வெகு விசேஷமான தொன்றாகும். அது, தர்ப்பணப் பலன்களைப் பன்மடங்காக நமக்குப் பெற்றுத்தரும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் வேண்டாம். இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர்.

**★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.**

★ சிறியதொகை மற்றும் அரிசி போன்ற உணவு பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும். ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் திருவெண்காடு **டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால்** தயாரிக்கப்பட்டு பூஜையில் வைத்த யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக வழங்கப்படும். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோகக்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம். நேரில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

**நன்கொடை அனுப்பும் அன்பர்கள் GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41 என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.**

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

**M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

**☎: 4900303, 4900603 Fax: (044)4916316 E-mail: gopuradarisanam@yahoo.com**

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து



## சுவடுகள்:36

# ஆர்யா

திருப்பூர் கிருஷ்ணன்

தொலைக்காட்சியிலிருந்து ஒரு சகோதரி ஃபோன் செய்தார் - பாரதி படம் வரைந்த ஓவியர் ஆர்யா முகவரி கேட்டு. (தற்போது ஆங்கிலத்தில் இசைவிமர்சனங்கள் எழுதிவரும் திருமதி சுலோசனா பட்டாபிராமனின் சித்தப்பா தான் அமரர் ஆர்யா) சுதந்திர தினத்தன்று ஆர்யா பேட்டியை ஒளிபரப்ப வேண்டும் என்பது தொலைக்காட்சிச் சகோதரியின் விருப்பம். ஆர்யாவை நான்தான் பேட்டி காண வேண்டும் என்றும் குறிப்பிட்டார். நான் ஆர்யா முகவரியைக் கொடுத்தேன்.

திடீரென்று மனசுக்குள் ஒரு பட்சி குரல் கொடுத்தது. ஏற்கெனவே இன்னோர் எழுத்தாளரின் முகவரியைப் பேட்டிக்காகக் கேட்ட ஓர் இளைஞரிடம் பத்துநாள் முன்னால் நான் கொடுத்ததும் அதனால் நேர்ந்த சங்கடங்களும் மனத்தில் மின்னல் வெட்டின. எனவே அந்த சகோதரியிடம் ஆர்யாவின் சுபாவங்கள் பற்றிக் கோடி காட்டினேன். 'ஆர்யா பணம், பதவி போன்றவற்றால் பெரிய மனிதராக மதிக்கப்படும் வகையைச் சேர்ந்தவர் அல்ல. அவர் உண்மையான பெரிய மனிதர். தகுதியால் பெரிய மனிதர். தன் லட்சியம் தவிர வேறெதையும் லட்சியம் செய்யாத கம்பீரம் நிறைந்தவர். நானும் என் போன்ற சிலரும் அவர் மேல் வைத்திருக்கும் மதிப்பு அளவிட இயலாதது. இதையெல்லாம் சொன்ன நான், அவர் மனம் கோணாமல் அவரிடம் மிகுந்த மரியாதையுடன் பேச வேண்டும் என அறிவுறுத்தினேன். சிரித்தவாறே உடன்பட்ட சகோதரி, 'நானும் அவர் பெருமையை அறிவேன். தொலைக்காட்சிப் பேட்டி என்பது பெரிய வாய்ப்பு இல்லையா! கட்டாயம் அவர் சம்மதிப்பார் என நம்புகிறேன்!' என்று குறிப்பிட்டார். 'நல்லது. பிறகு நிகழ்ச்சியை எனக்கு உறுதி செய்யுங்கள்!' என்று சொல்லிவிட்டுத் தொலைபேசியை வைத்துவிட்டேன்.

> “
>
> நாலாந்தர, எட்டாந்தரத் திரைப் படங்களை மூன்று மணி நேரம் ஒளிபரப்புகிறீர்களே. இளைஞர்களைக் கெடுக்கும் அந்தப் படங்களால் யாருக்கு என்ன லாபம்?
>
> ”

அன்றைக்குப் பத்துநாள் முன்னால் நடந்த சம்பவம் இதுதான். ஓர் இளைஞர், ஒரு வார இதழுக்காக, சி.சு. செல்லப்பாவைப் பேட்டி காண விரும்பினார். செல்லப்பாவின் முகவரி கேட்டு நச்சரித்துக் கொண்டிருந்தார். 'ஆர்வமாகக் கேட்கிறாரே' என்று முகவரியைக் கொடுத்தேன். செல்லப்பா வீடு சென்ற அவர், பேட்டியைப் பின்வரும் உன்னதமான கேள்வியோடு ஆரம்பித்திருக்கிறார். 'நீங்கள் இதுவரை என்னென்ன எழுதியிருக்கிறீர்கள்?!' எரிச்சலடைந்த செல்லப்பா சொன்ன பதில் இதுதான் : 'அதுகூடத் தெரியாமல் நீ எதற்கு என்னைப் பேட்டி காண வருகிறாய்? கையில் காமிரா வேறு. நான் என்ன கவர்ச்சி நடிகையா என் ஃபோட்டோவைப் போட்டுக் கீழே நாலுவரி எழுத? உனக்கு ஒரு வருடம் அவகாசம் தருகிறேன். முதலில் என் புத்தகங்களையெல்லாம் படித்துத் தெரிந்து கொண்டு பிறகு என்னைப் பேட்டி காண வா!'

இளைஞர் ஓடியே வந்துவிட்டார். 'என்ன அவர் இவ்வளவு கோபக்காரராக இருக்கிறார்!' என்றார் என்னிடம். எனக்கு செல்லப்பா கோபத்திலுள்ள நியாயம் நூறு சதவிகிதம் சரியென்று புரிந்தது. 'பெரும் சாதனையாளர் அவர். பேட்டி காணப்

போகும்போது, முன்கூட்டியே அவரைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்து கொண்டு, பிறகு செல்லப்பாவிடம் செல்லப்பா!' என்று அந்த இளைஞருக்கு அறிவுறுத்தினேன்.

செல்லப்பாவும் ஆர்யாவும் நெருங்கிய நண்பர்கள். செல்லப்பாவின் சாகித்ய அகாதமி பரிசு பெற்ற சுதந்திர தாகம் என்ற பிரம்மாண்ட நாவலில் அமரர் ஆர்யா ஒரு பாத்திரமாக வருகிறார்.

சுமார் ஐந்து நாட்கள், ஆர்யாவுடன் ஒரே அறையில் தங்கி உண்டு, உறங்கி வாழ்ந்திருக்கிறேன் நான். அந்த ஐந்து நாளும் அவர் என்னைச் சொந்தத் தம்பிபோல் கருதி அன்பு பாராட்டினார். பொள்ளாச்சி அருகே நடைபெற்ற திருப்பூர் குமரன் சிலை திறப்பு விழாவில் கலந்து கொள்வதற்காக, சென்னையிலிருந்து ரயிலில் நானும் ரகமியுமாக அவருடன்

# என்றோர் ஆச்சரியம்...



• ஆர்யா



• ரகமி

பயணம் செய்தோம். கி. கஸ்தூரிரங்கன் தினமணி கதிர் ஆசிரியராக இருந்த காலத்தில், சுதந்திரத் தியாகிகளைப் பற்றி நிறைய எழுதியவர் ரகமி. சிறந்த தகவல் தொகுப்பாளர். அரிய புகைப்படங்கள் பலவற்றைச் சேகரித்து வைத்திருந்தவர். ரகமி மேல் அன்பு கொண்ட செருப்புத் தொழிலாளர் ஒருவர் சிவப்பு வெல்வெட் செருப்புகளைத் தைத்து அவருக்கு அளித்துவந்தார். அந்தச் செருப்புகளைத் தான் ரகமி அணிவார். அவர் மேல் ஆர்யாவுக்கு நிரம்பப் பிரியம் உண்டு. ஆர்யாவும் நானும் ரகமியுமாக ஒன்றாய்த் தங்கியிருந்தோம்.

ஆர்யாவின் கையைப் பற்றிக் கொண்டு நடந்தபோது நான் அடைந்த பெருமிதம் கொஞ்ச நஞ்சமல்ல. நின்று கொண்டும் நடந்து கொண்டும் உறங்குவதற்கு முன் படுத்துக் கொண்டும் அவர் பேசிய பேச்சுக்கள் காவியங்கள். பகட்டும் போலித்தனமும் ஒட்டாத நிஜமான நேரடி மனிதர் அவர். ஓவியத்திலும், சிற்பத்திலும் இலக்கியத்திலும் மட்டுமல்லாமல் ஆன்மிகத்திலும் அவருக்கு அபார நாட்டமிருந்தது. எல்லோருக்கும் தெரிந்த கோட்டையில் கொடியேற்றிய சம்பவம் முதல் யாருக்குமே இதுவரை தெரியாத அவரது சில சாகசங்கள் வரை எத்தனையோ விஷயங்களை அவர் பகிர்ந்து கொண்டார்.

ஓரிரு நாள் கழித்துத் தொலைக்காட்சிச் சகோதரி மறுபடி ஃபோன் செய்தார். 'என்னம்மா, பேட்டிக்கு ஒப்புக்கொண்டாரா?' எனக் கேட்டேன். அவர் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு நிபந்தனை விதித்தாராம். 'நாலாந்தர, எட்டாந்தரத் திரைப்படங்களை மூன்று மணி நேரம் ஒளிபரப்புகிறீர்களே. இளைஞர்களைக் கெடுக்கும் அந்தப் படங்களால் யாருக்கு என்ன லாபம்? நான் பேட்டிக்குச் சம்மதிக்கிறேன். என்னைப் பற்றிப் பேசமாட்டேன். நான் பழகிய உன்னதமான பல மனிதர்களைப் பற்றிப் பேசுவேன். ஆனால் ஒன்று. திரைப்படத்திற்கு மூன்று மணி நேரம் வழங்குவது மாதிரி என் பேட்டிக்கும் மூன்று மணி நேரம் ஒதுக்க வேண்டும். சம்மதமா?' என்று கேட்டாராம் அவர். 'அதிகபட்சம் அரைமணிக்கு மேல் ஒதுக்க இயலாது' என அந்தச் சகோதரி தயக்கத்தோடு தெரிவித்திருக்கிறார். எந்தத் தயக்கமும் இல்லாமல் பேட்டி வேண்டாம் என்று மறுத்துவிட்டார் ஆர்யா. 'திருப்பூர் கிருஷ்ணனை வரச் சொல்லுங்கள். நான் அவரிடம் தனிப்பட்ட முறையில் மூன்று மணி நேரம் பேசிக் கொள்கிறேன். அதுபோதும் எனக்கு' என்றாராம். 'ஆச்சரியமான மனிதர். பேச்சில் என்ன தெளிவு! என்ன கம்பீரம்! இப்படியும் மனிதர்கள் இருப்பார்களா!' வியந்தார் தொ.கா. சகோதரி. 'இருக்கிறார்களம்மா இன்னும் ஒரு சிலர். அதனால் தான்அவ்வப்போது மழை பெய்கிறது' என்று சொல்லிவிட்டு ஃபோனை வைத்தேன் நான்.

(தொடரும்)



**மா**வட்ட நிர்வாகங்களில் சில சொற்கள் நம் காதுக்குப் புதுசு. பி.எம்.ஆர்.ஒய்., எஸ்.ஜி.எஸ்.ஒய்., எஸ்.எச்.ஜி., பி.எம்.ஜிஎஸ்.ஒய் என்று ஒவ்வொரு திட்டத்துக்கும் ஆங்கில எழுத்துக்கள் நாலைந்தாவது இருக்கும். பி.எம்.என்றால் தெரியும்: பிரதான் மந்த்ரி - அதாவது பிரதம மந்திரி. அப்புறம் சடக் யோஜனா, படக் யோஜனா என்று மண்டையைக் குழப்பும்.

அதல பாதாளத்தில் கிடப்பவர்களை மேலே தூக்கி விடுவது மாதிரி, அடல் பிஹாரி வாஜ்பாயே

# டாப் - 10 கலெக்டர்கள் - 2



வறுமைக்கோட்டுக்குக் கீழே கிடப்பவர்களை மூச்சைப் பிடித்துக் கொண்டு கைதூக்கி விடுவது மாதிரி இருக்கிறது! வறுமை ஒழிப்புத் திட்டம், சாலை மேம்பாட்டுத் திட்டம், வீட்டு வசதித் திட்டம், குடிநீர்த் திட்டம் என்று சுருக்கமாக இருந்தால் போதாதோ?....

சரி அதை விடுங்கள். இனி கோவை மாவட்ட கலெக்டர் என். முருகானந்தம்:

"உருப்படியாக நிறையவே செய்திருக்கிறோம். அத்தனையும் எழுத இடம் இருக்குமா?" என்று புன்முறுவலுடன் கேட்டார் கலெக்டர்.

''கேட்க மகிழ்ச்சியாக இருக்கிறது. தொடங்குங்கள் சாதனைப் பட்டியலை!" என்றோம் உற்சாகத்துடன்.

"வறுமை ஒழிப்புக்கு என்று, ஸ்வர்ண ஜெயந்தி கிராம் ஸ்வரோஜ்கார் யோஜனா என்ற சுதந்தரப் பொன்விழா திட்டத்தில், வறுமைக் கோட்டுக்குக் கீழே இருக்கிற குடும்பங்களைத் தேர்வு செய்கிறோம். அவர்களுள், மகளிர் சுய உதவிக் குழுக்கள் அமைத்து, அவர்களே பொருள்கள் தயாரிக்க மான்யமும், வங்கி மூலமாகக் கடனுதவியும் கொடுத்து, மூன்றே வருடங்களில், மாதம் இரண்டாயிரம் ரூபாய் வரை சம்பாதிக்க வைக்கிறோம். இதில் கோவை மாவட்டம் தமிழ்நாட்டில் முதலிடம் வகிக்கிறது." (இரண்டு வருடங்களுக்கு முன் இரண்டே சுய உதவிக் குழுக்கள்தான் இருந்தன. சென்ற ஆண்டு 21. இந்த ஆண்டு 851 சுய உதவிக் குழுக்களாக, அண்ணாவியின் ஹைஜம்ப் சாதனை மாதிரி செய்திருக்கிறது!)

"இந்தியாவில் மொத்தம் அறுபத்து மூன்று மாவட்டங்களில்தான் ராஜீவ் காந்தி வாட்டர் சப்ளை மிஷன் பணிகள் நடைபெறுகின்றன. இதில் கோவை மாவட்டம் ஒன்று.

**ஒவ்வொரு திட்டத்துக்கும் இத்தனை லட்சம் அல்லது கோடி ஒதுக்கீடு செய்திருப்பார்கள். அதையெல்லாம் மாவட்டங்களில் ஒழுங்காகச் செலவு செய்து திட்டங்களை நிறைவேற்றுகிறார்களா என்பது பொதுமக்களுக்குத் தெரியுமா?**

ஆயிரத்து அறுநூறு கிராமப்புறங்களின் குடிநீர் வசதிக்காக இருபத்தெட்டு கோடி ரூபாய் திட்டம். பத்து சதவிகிதம் நிதி பொது மக்கள் தர வேண்டும். குளம், குட்டைகள் தூர்வாரிச் சீர் செய்ய இன்னொரு இரண்டரை கோடி. மலைவாழ் மக்களின் பாதுகாக்கப்பட்ட குடிநீர்த் திட்டத்துக்கு பத்து சதவிகிதம் அவர்கள் பங்கு நிதி தர இயலாது என்பதால், அதற்கு ஈடாக அவர்களின் உழைப்பைக் கொடுத்து விடுகிறார்கள். முந்நூற்று இருபத்து மூன்று சத்துணவுக் கூடங்களில், நானூற்றி இருபத்தி மூன்று பாலவாடிகளில்; நூற்றி இரண்டு பள்ளிக் கூடங்களில் எல்லாம் பாதுகாக்கப்பட்ட குடிநீர் கொடுக்கப்பட்டு வருகின்றன. இங்கே எல்லாம் பொதுமக்கள் நிதி கொடுத்திருக்கிறார்கள். அதாவது மூன்றரை கோடி ரூபாய்! இந்த விஷயத்தில் கோவை ஒரு 'மாடல் மாவட்டம்'. மற்ற மாநிலங்களில் இருந்தும், மாவட்டங்களிலிருந்தும் இங்கே பார்வையிட வருகிறார்கள்.

"பாலவாடிகளைச் சீரமைக்க, கிராமத் தன்னிறைவுத் திட்டத்தில் எங்கள் பங்கு நிதி எழுபத்தைந்து சதவிகிதம்தான். மீதி இருபத்தைந்து சதவிகிதம் பொது மக்கள் தருகிறார்கள். சுவர் முழுக்க வண்ணப்படங்கள், விளையாட்டுப் பொருட்கள், கட்டடச் சீரமைப்பு என்று பதினாறு லட்ச ரூபாய் செலவழித்திருக்கிறோம். நிதிக்குப் பதிலாகச் சில பொதுமக்கள் பாத்திரங்களாகவே கொடுத்திருக்கிறார்கள். இதிலும், கோவை ஒரு மாடல் டிஸ்ட்ரிக்ட்."

# ஊட்டிக்குப் போட்டி!





• என். முருகானந்தம்

இந்திய தொலைக்காட்சிகளில் முதன் முறையாக என்று டீவியில் வருகிற மாதிரி, கலெக்டர் ஒரு நீண்ட பட்டியலே கைவசம் வைத்திருந்தார்:

"கோவையில் மலைவாழ் பழங்குடியினர் முப்பத்தைந்தாயிரம் பேர், மிக உள்ளே தள்ளியிருக்கும் பகுதிகளில் வாழ்கிறார்கள். அடிப்படை வசதிகளோடு நானூறு வீடுகள் இங்கே கட்டிக் கொடுத்திருக்கிறோம். அத்தனையிலும் சூரிய ஒளி மூலம் மின்சாரம் வழங்கியிருக்கிறோம். சுய உதவிக் குழுக்கள் மூலம் பொருளாதார வளர்ச்சிக்கு வழி செய்து கொடுத்திருக்கிறோம். பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதியும் உண்டு.

இப்போது நான்காயிரத்து ஐந்நூறு சுய உதவிக் குழுக்கள் இருக்கின்றன. சென்ற வருடம் ரிவால்விங் ஃபண்ட் பன்னிரண்டு கோடி ரூபாய் கொடுத்தோம். இதுதான் மாநிலத்திலேயே

அதிகபட்சத் தொகை. எல்லாமே மகளிர் சுய உதவிக் குழுக்கள். இவர்கள் தயாரிக்கும் பல வகைப் பொருட்களைக் கொண்டு வந்து விற்க, இருபத்தெட்டு லட்ச ரூபாய் செலவில் டவுன் ஹாலுக்கு எதிரே ஒரு வளாகம் கட்டிக் கொடுத்திருக்கிறோம். இது மாதிரி வேறு எந்த மாவட்டத்திலும் நீங்கள் பார்க்க முடியாது!"

முருகானந்தத்தின் முகத்தில் முறுவல்.

"பிரதமர் சாலை மேம்பாட்டுத் திட்டத்தின் முன்னேற்றத்திலும் சரி, தரத்திலும் சரி, கோவை நெம்பர் 1. குழந்தைத் தொழிலாளர் ஒழிப்புத் திட்டத்தில் நூறு டிரான்ஸிட் பள்ளிகள். அதில் படித்து முடித்தவுடன் அவர்களை ரெகுலர் ஸ்கூலில் சேர்த்து விடுகிறோம். இரண்டாயிரம் குழந்தைத் தொழிலாளர்கள் பயன் அடைந்திருக்கிறார்கள். 'சைல்டு லைன்' என்ற தொண்டு நிறுவன அமைப்பின் உதவியோடு, பிச்சை எடுக்கும் குழந்தைகளை அகற்றி, அவர்களுக்கு மறுவாழ்வு கொடுத்திருக்கிறோம்."



• பிச்சைக்காரர் மறுவாழ்வுக்காக..

ஒவ்வொரு திட்டத்துக்கும் இத்தனை லட்சம் அல்லது கோடி ஒதுக்கீடு செய்திருப்பார்கள். அதையெல்லாம் மாவட்டங்களில் ஒழுங்காகச் செலவு செய்து திட்டங்களை நிறைவேற்றுகிறார்களா என்பது பொதுமக்களுக்குத் தெரியுமா? ஒரு திட்டத்துக்கான நிதியை இன்னொரு திட்டத்துக்குத் திருப்பி விட்டால் யாருக்குத் தெரியப் போகிறது? ஆனால் எல்லாவற்றுக்கும் தனித் தனியே விரிவான புத்தகங்கள் அச்சிட்டு, வழவழப்பான வண்ணத்தாள் அட்டையோடு வெளியிட்டிருக்கிறார்கள். (இவற்றைப் பற்றிக் கட்டுரைத் தொடரின் முடிவில் நமது கருத்தைத் தெரிவிப்போம்!)

"ரேஷன் ஷாப்புகள் நூற்றுப்பத்தை சுய உதவிக் குழுக்களிடம் நடத்தக் கொடுத்திருக்கிறோம். நன்றாகவே நடத்துகிறார்கள். கிராமப்புறப் பெண்களுக்கு அதிகாரம் வழங்கலின் அடையாளமே இது. பொள்ளாச்சி, கிணத்துக்கடவு பகுதிகளில் கயிறு தயாரித்து, இங்கேயுள்ள விற்பனை வளாகத்தில் விற்கிறார்கள். உடல் ஊனமுற்றோருக்காகவே தனியாக ஒரு சுய உதவிக்குழு அமைத்திருக்கிறோம். ராமகிருஷ்ண வித்யாலயத்திலிருந்து வந்து பயிற்சி கொடுக்கிறார்கள். பழங்குடியினரின் சுய உதவிக்குழு, ஏலத்தில் புளியை வாங்கி, பிராசஸ் செய்து மேற்படி வளாகத்தில் விற்பனை செய்கிறது. ஐந்து மினி பஸ்கள் காரமடை பகுதியில் சுய உதவிக் குழுக்களால் இயக்கப்பட்டு வருகின்றன."

சுய உதவிக் குழுக்கள் செயல்பாட்டில் கோவை மாவட்டம்தான் முன்னணியில் இருக்கிறது என்று நிச்சயமாகத் தெரிகிறது. பாராட்டுக்களைத் தெரிவிக்கையில்,

கலெக்டரின் சாதனைப் பட்டியல் இன்னும் நீளுகிறது:

* ராஜீவ் காந்தி தண்ணீர் விநியோகத் திட்டத்தில் இரண்டரைக் கோடி ரூபாய் ஒதுக்கி, குளங்கள், ஏரிகளைத் தூர் வாரிச் சீராக்கியிருக்கிறார்கள். ஊரக வளர்ச்சித் திட்டத்தில் ஒவ்வொரு பஞ்சாயத்துக்கும் ஒரு குளத்தையாவது சீர்படுத்திக் கொடுத்திருக்கிறார்கள்.

* மகளிர் சுகாதாரத் திட்டத்தில், துவைப்பது, குளிப்பது உட்பட்ட வசதிகளுடன் டாய்லெட்டுகள் கட்டி, சுய உதவிக் குழுக்களே பராமரிக்கக் கொடுத்திருக்கிறார்கள். மாநிலத்தில் அதிகபட்சமாக இப்படிக் கொடுக்கப்பட்டவை

கோவையில்தான்.

* முதியோர், விதவை பென்ஷன் பெற, அவர்களுக்குச் சான்றிதழ்கள் ஒரு பிரச்னையாக இருக்கிறதல்லவா? ஒரு ஸ்பெஷல் முகாம் நடத்தி, எல்லா அதிகாரிகளையும் அங்கேயே வரச் சொல்லி, அந்த இடத்திலேயே சான்றிதழ். (சபாஷ், ஊட்டிக்குச் சரியான போட்டி!)

* பஸ்களில் ஏர்_ஹார்ன் இல்லாத முதல் மாவட்டம் என்ற சாதனைக்கு, அரசு விருது வழங்கியிருக்கிறது.

"புதிய அண்ணா மறுமலர்ச்சித் திட்டத்தின் கீழ், விவசாயம் சார்ந்த தொழில்களுக்காக ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். இருநூற்றி தொண்ணூற்றிரண்டு விண்ணப்பங்கள் வந்து பரிசீலனை முடித்து விட்டோம். இது மாநிலத்திலேயே முதலாவதாகக் கருதப்படுகிறது. கிராமப்புற மேம்பாட்டில், கோவை மாட்டம் இரண்டாவது இடம் வகிக்கிறது."

• கிராமச் சாலை போட்டப்பின்னும், முன்னும்



1. பாராட்டுகிறார், 'வேர்ல்ட் விஷன்' அமைப்பின் டேனியல்:

"தினசரி ஏழை மக்களைப் பார்க்க நேரம் ஒதுக்குகிறார் கலெக்டர். சுய உதவிக் குழுக்களை ரொம்ப நல்லா நடத்தறார். நடுவுல யாருக்கும் பணம் போயிடாம ஒழுங்கா நடத்தறார். ரெவ்யூ மீட்டிங் தவறாம நடத்தறார்."

2. சபாஷ் சொல்லுகிறார் 'சைல்டு லைன்' ஃபாதர் சந்தானம்:

"பிச்சை எடுக்கும் குழந்தைகள், அவர்கள் குடும்பங்களின் மறுவாழ்வுத் திட்டத்துக்கு 'சைல்டு லைன்' உதவுவதற்காக முன் வந்த போது, முருகானந்தம், காவல் துறை துணை ஆணையர் பால சுப்பிரமணியம் உதவியோடு எல்லாவித ஒத்துழைப்பையும் கொடுத்தார். நலத் திட்டங்களில் ஆர்வம் காண்பிக்கிறார். அப்படிச் செய்யும்போது மற்றவர்களையும் மனம் திறந்து பாராட்டுகிறார்."

3. சந்தோஷப்படுகிறார் ராமகிருஷ்ண வித்யாலயா டாக்டர் மணி:

"ஊனமுற்றோர் சுய உதவிக்குழு, வேலை வாய்ப்பு உதவி எல்லாவற்றிலும் எங்களோடு ஒத்துழைக்கிறார் கலெக்டர். மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டு திட்டம் எல்லாம் போட்டு, சிறந்த முறையில் செயல்பட அவர் உதவுவதில் எனக்கு மிகுந்த சந்தோஷம்."

**கா**லை ஒன்பது மணி முதலே நிகழ்ச்சித் தொடர்கள், தம்மைச் சந்திக்கக் காத்திருப்பவர்களிடம் மளமளவென்று உரையாடல்கள், கவர்னர் வருகையை முன்னிட்டு விமான நிலையத்துக்கு விரைதல் என்று படு 'பிஸி'யாக இருந்தும், கொடுத்த நேரத்தில் நம்மைப் பேட்டிக்கு அழைத்து, விவரங்களைத் தரும்போது பரபரப்பு ஏதுமின்றிப் புன்னகை மன்னனாகவே இருந்தார் கலெக்டர் முருகானந்தம்.

— சாருகேசி



• சுகாதார டாய்லெட்கள்



உச்சந்தலையிலிருந்து ஆறடி உயரத்திலிருக்கும் வேப்ப மரக்கிளையில் ஒரு நூல் கயிறை லாவகமாய் வீசி... மறு முனையைத் துணியோடு இறுக்கி... அவிழாத அளவிற்குப் படு முடிச்சுப் போட்டு- ஒரு நிமிஷத்தில் ஒரு தொட்டில் கட்டி விட்டாள் வீரலட்சுமி.

தோளில் கிடந்தவனின் முதுகைத் தாங்கியபடி ஒரு பூவைப் போல அவனைத் தொட்டிலில் கிடத்திவிட்டு அவன் கண் மூடுகிற நிமிஷம் வரை ஆரிரரோ பாடி... அவன் தூங்கிய பின் தோட்டத்துக்குள் இறங்கி மிளகாய்ச் செடிக்குக் களை வெட்டத் தொடங்கினாள்.

களை வெட்டுகிறபோது மட்டும் அவள் மனசு அவளிடம்

# வீர

வே. குருநாதன்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை - 2

இருக்காது. ஊர் சுற்றப் போய்விடும். வெறும் உடலாய் மட்டுமே வளைந்தபடி வெட்டிக் கொண்டிருப்பாள். களை வெட்டுவதற்குப் பதில் செடியை வெட்டிவிட்டு... காலால் மண்ணை இழுத்து அதை மூடுவதற்குள்... பலராம் நாயக்கர் பார்த்துவிடுவார். அவரிடம் வாங்கிக் கட்டிக் கொள்வாள்.

அன்றைக்கும் அப்படித்தான். அவள் மனசு ஓடிப்போன புருஷனிருக்கும் வடமலாபுரம் போயிருந்தது. அந்த ஊர்க்காரி ஆடுகாலி ஆவுடைச்சியிடம்தான் அவள் புருஷன் சிக்கியிருந்தான்.

போய் அவனுக்குப் புத்திமதி சொல்லிக் கூப்பிட்ட நாட்களை நினைத்துக் கொண்டே களைவெட்டினாள். அந்தச் சேட்டைக் காரியின் 'செவேல்' என்ற பாதத்தைத் தன் மடியில் போட்டுக் கொண்டு அவன் கொலுசு மாட்டிய கண்றாவியைக் கண்ணாரக் கண்ட பிறகுதான் காறித்துப்பிவிட்டு வந்தாள்.

"உன்னைக் கை கழுவிட்டேன்டா. சண் டாளா. இனி உன் தெசப்பக்கமே தலவச்சுப் படுக்க மாட்டேன். நாசமாப்போ."

மண்ணை வாரித் தூற்றிவிட்டு வந்து ஆறு மாசம் ஆகிறது. அவனோடு ஒரு வருஷம் வாழ்ந்ததில் இந்தக் கைப்பிள்ளை ஒன்றுதான் மிச்சம். பரவாயில்லை. இவனை வளர்த்து ஆளாக்கும்வரை தன் ஆயுசு இருந்தால் போதும்.

யோசனையை முடித்துவிட்டு தொட்டில் பக்கம் பார்த்தவள் திடுக்கிட்டுப் போனாள்.

வேப்ப மரக்கிளையில் வெறுந் தொட்டில் தான் ஆடியது. பிள்ளையை எங்கே காணோம்? யார் எடுத்திருப்பார்கள்? தன் பிள்ளையை எடுக்கிற அளவுக்கு ஜாதி வசதி இல்லையே தனக்கு?

பயந்து பரிதவித்துப் பதறி ஓடி வந்தாள். பம்புசெட் ரூமுக்குள் எட்டிப் பார்த்தாள். பலராம் நாயக்கர்தான் படுத்திருந்தார்.

"மொதலாளீ.. என் பிள்ளயைக் காணுமே? யார் எடுத்தா?"

"நாந்தான் எடுத்து என் மடியில் போட்டுக் கொஞ்சிக் கிட்டிருந்தேன். இப்பதான் வெளி யில விட்டுட்டு வந்தேன். போடி எண்ணங் கெட்டவளே. உன் பிள்ளைய என்கிட்ட விசா ரிக்கியே. உனக்கு என்னமாவது மண்டையில இருக்கா, இல்லையா? நான் எடுப்பனா?"

சிவப்பு நாயக்கர் சீறியதுமே அந்தக் கறுப்பு மனுஷி கலங்கிப் போனாள்.

பிறகு யார் எடுத்திருப்பார்கள்? அவளது தவிப்புக்குத் தூரத்திலிருந்தே பதில் வந்தது.

"உன் பிள்ளைய சொர்ணம் பிள்ளை மகன் சேதுச்சாமி அவக எடுத்திட்டுப் போறாக. கேட்டுப் பாத்தேன். கொடுக்கல ஓடிப்போயி வாங்கிட்டு வாடீ. வீரலட்சுமீ.. ஓடு.. ஓடு.."

வரும்போதே விரட்டிக் கொண்டு வந்தாள் வள்ளி.

"போ. சீக்கிரம். பெரிய சாமிக்குத் தெரிஞ்சா உன்னைக் கொன்னே போடுவாக. ஊருக்குத் தெரியும் முந்தி உன் பிள்ளைய வாங்கிரு.. ஓடு.. ஓடு.."

வள்ளியின் விரட்டலில் வரப்பில் ஏறியும் இறங்கியும் ஊருக்கு ஓடினாள் வீரலட்சுமி.

ஓட முடியவில்லை. மூச்சிறைக்கிறது. தவிப்பு வருகிறது. ஒரு நிமிஷம் நின்று மூச்சு வாங்கிக் கொண்டு வேகமாய் நடந்தாள்.

தெற்குத் தெருவழியாக ஊருக்குள் நுழைந் தாள். வாசக சாலை முன்னால் அவள் பிள் ளையை வைத்துக் கொண்டு பெரிய சடை நின்றிருந்தான். பக்கத்தில், கக்கத்தில் குடை யோடு கோபமாய் நிற்கிற சொர்ணம்பிள்ளை.

கும்பிட்டாள்.

வந்ததுமே தன்னைக் கும்பிடாமல் ஒரு மனுஷனைக் கும்பிடுகிறாளே என்று அவ ளைக் கோபிக்கவும் இல்லை அங்கிருந்த மரத்தடிப் பிள்ளையார்.

அவள் நிலைமை அவருக்குத் தெரியும். அதனால் பேசாமல் வேடிக்கை பார்த்தார்.

பயந்து நடுங்கிக் கொண்டே பெரிய சடையை நெருங்கி தன் பிள்ளையை வாங்கிக் கொண்டு ஓரமாய் ஒதுங்கி ஒடுங்கி நின்ற அவளை எரித்து விடுவதுபோல வெறித்தார் பிள்ளைவாள்.

"உனக்கு அறிவே இருக்காதா பயபுள்ள சோறுதான திங்கிற? வேறெதையும் திங்கலியே? ஏன் இப்படிச் செய்ற? உன் பிள்ளையக் கொடுத்தனுப்ப உனக்கு வேற ஆளே கிடைக் கலியா? அவன்தான் கிடைச்சானா? அப்புறம் அவனுக்கு ஊர்ல என்ன மரியாதை இருக்கும்? அவனோடவா போயிடும்? கேவலம் எங்களுக் கும் தான். இகழ்ச்சிதான். இழிவுதான். மேல் ஜாதி. கீழ்ஜாதின்னு ஏன்டீ வச்சிருக்கான். ஒதுங்க வேண்டாம்? உதவாக்கரை நாயீ" என்று

# லட்சுமி

அவனை அடிப்பதற்குக் காலில் கிடந்த செருப்பை அவர் கழட்டியபோது... கை பிடித்துத் தடுத்து சமாதானப்படுத்தி. அவரை ஆற வைத்தார் நாட்டாமை.

"ஏ... வீரலட்சுமி. நீ ஒரு எளிய சாதிக்காரி. அந்த எண்ணமே உனக்கு ஏன் வரமாட்டேங்குது; இனி இப்படி ஏதாவது நடந்த துன்னா உன் குடிசையோட உன்னைக் கொளுத்திப் போடுவேன். ஓடு நாயீ... நிக்கக் கூடாது இங்க...!"

இப்போது நாட்டாண்மை அவர் பங்குக்கு அவரது ஜாதிச் செருக்கைப் பிரகடனப்படுத்திக் கொண்டார். அப்புறம் வேடிக்கை பார்த்துக் கூடிக்கிடந்த ஊரும் ஆளாளுக்கு அவனை விரட்டு விரட்டென்று விரட்டிப் பார்த்தது.

வீசுகிற ஜாதிக்காற்று சூறாவளியாய்க் கிளம்பி, தன்னையும் தன் பிள்ளையையும் தூக்கியெறிவதற்குள் அந்த இடத்தைக் காலி செய்வதுதான் உத்தமம் என்று வீரலட்சுமி கைப்பிள்ளையுடன் நகர்ந்தாள். அவள் முதுகை நோக்கியும் கெட்ட வார்த்தைகள் வந்து விழுந்தன.

மீசையை முறுக்கிக் கொண்டு நாட்டாண்மை அந்த வழியாய்ப் போன ஓர் ஆட்டுக்குட்டியை எடுத்து மடியில் வைத்துக் கொண்டார்.

வீட்டிற்கு வந்த வீரலட்சுமி சாணம் மெழுகிய வெறுந்தரையில் படுத்தாள். பிள்ளையைத் தன்னோடு தழுவிக் கொண்டாள். அவன் முகத்தைக் கொஞ்சிக் கொஞ்சி அழுதாள்.

"என் ராசாவைக் கையில எடுத்தாக் கேவலமாமே. என் தங்கக் கட்டியை நானா எடுத்துக் கொடுத்தேன்? அவங்களா வந்து எடுத்திட்டுப் போய்ட்டு இகழ்ச்சியாப் பேசு றாங்க. பேசிட்டுப் போறாங்கடா. அம்மாவத் தான பேச முடியும். உன்னப் பேச விடமாட்டேன் அம்மா. உன்ன ரொம்பப் படிக்கவச்சு பெரிய அதிகாரி ஆக்கி, ஊரே உனக்கு சலாம் போடுறதப் பாத்துட்டுதான் அம்மா சாவேன்டா என் தங்கம்."



மகனைப் புரட்டிப் புரட்டிக் கொஞ்சிய போது அவன் முதுகில் இருந்த பொக்கலத்தைப் பார்த்து பதறிப் போனாள். குபீர் என்று அழுதாள்.

எழுந்து ஓடிப் போய் தீப்புண்ணுக்குத் தடவுகிற தைலத்தை எடுத்து வந்து தடவினாள்.

சிகரெட் நெருப்பு பட்டதினால் ஏற்பட்ட பொக்கலம். பிள்ளை என்னமாய்த் துடித் தானோ?

சேதுப்பிள்ளை செய்கிற காரியம். இன்னைக்கு நேற்றா நடக்கிறது? ஒரு வருஷமாய்த் தொடர்கிற ஓயாத கொடுமை.

சிமெண்ட் ஆலையில் வேலை பார்க்கிற அந்த மனுஷன் குடிபோதையில் காலனிக்கு வருவார். காலனிப் பெண்களிடம் கஞ்சி வாங்கிக் குடிப்பார். பிறகு ஒரு கைப்பிள்ளையை எடுத்துக் கொண்டு ஊருக்குள் அலைவார். குடிபோதையில் மட்டுமே அவர் செய்கிற காரியம் இது.

"நான் மறுபடியும் பிறந்த பாரதிடா.. காலனிக்குப் போய் ஒரு குழந்தையை எடுத்துக் கிட்டு ஊருக்குள்ள நடக்கிற என் மனசு வேற எவனுக்குடா வரும்? ஜாதி வெறி பிடிச்ச நாய்களா? குழந்தைக்கு ஜாதி இல்லடா. கும்பிட வேண்டிய தெய்வங்கள்டா."

நாலா பக்கமும் பார்த்துக் கத்தி முடித்து விட்டுக் குழந்தையைத் தூக்கிப் போட்டுப் பிடிப்பான். சிகரெட் புகையைக் குழந்தையின் முகத்தில் விடுவான். குடி நாற்றம் மாறாத வாயினால் குழந்தையைக் கொஞ்சுவான்.

"அடப் பாவீ. குடிபோதையில நீ விளையாட காலனிப் பிள்ளைதானா கிடச்சது? பாரதி இப்படியா பட்டைச் சாராயம் குடிச்சுப் போட்டுப் பச்சைக் குழந்தையை எடுத்தான். குழந்தையைத் தெய்வமா நீ மதிச்சிருந்தா சிகரெட் புகைய விடுவியாடா பாவீ." இப்படி அவன் சட்டையைப் பிடித்துக் கேட்க ஆள் இல்லை.

"குடி மப்புல காலனிப் பிள்ளைய தோள்ல எடுத்துட்டுப் போறாரே. கேவலம்தான. இவரு ஜாதி என்ன? தகுதி என்ன?"

அப்படிப்பேசி அவரைக் கடைத்தெரு கேலி செய்தது. மக்கட தலையில் அடித்தது. இன்னைக்கும் அந்தக் கொடுமைதான் நடந்திருக்கிறது.

அழுது தீர்த்துவிட்டுத் தூங்கினாள். அவள் வீட்டு நாய் ஆறு குட்டிகளைப் பெற்றிருந்தது. ஆளுக்கொரு குட்டியை எடுத்துக் கொள்ள ஒவ்வொரு ஜாதிக்காரர்கள் வந்திருந்தார்கள்.

"என் பிள்ளைய மட்டும் தூக்கினா

கேவலம். என் வீட்டு நாய்க்குட்டியை எடுத்தா கேவலம் இல்லையா? நாய் உங்க ஜாதியா?"

நாக்கைப் பிடுங்கிக் கொள்கிற மாதிரி கேட்கலாமா? என்று நினைத்தாள். அடங்கிக் கொண்டாள்.

இப்போதெல்லாம் சேதுவிடம் தன் பிள்ளை சிக்கிக் கொள்ளாமல், ஜாக்கிரதையாய் இருந்தாள். சின்னமுத்து மகளிடம் பிள்ளையைக் கொடுத்துவிட்டு வேலைக்குப் போனாள்.

குடிபோதையில் காலனிக்கு வந்த சேதுப் பிள்ளைக்கு ஒரு கைப்பிள்ளை கிடைக்கவில்லை. கண்டபடி திட்டி விட்டுப் போனான். வீரலட்சுமியை வழி மறித்து ஏசினான்.

"உன் பிள்ளைய நாளைக்கு நான் எடுத்துக்கிட்டு ஊருக்குள்ள நடப்பேன். உன்னால தடுக்க முடிஞ்சா தடுத்துப்பாரு."

சொடக்குப் போட்டு சவால் இட்ட சேதுவே மறு நாள் ஜெயித்துக் காட்டினான்.

சின்னமுத்து மகளை ஏமாற்றி, குழந்தையை அவன் எடுத்துக் கொண்டு போன செய்தி வீரலட்சுமியின் காதைத் தொடவே சாயங்காலம் ஆகிப் போனது.

விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தாள்.

"குடிபோதையில அவன் நடக்கிறதே பெரும் பாடா இருக்கு. கீழ விழுந்துருவான் போலிருக்கு. உன் பிள்ளைய எங்க போட்டானோ?"

வடக்குத் தெரு சிரித்தது.

"ஒரு கையில சிகரெட். ஒரு கையில பாட்லு கக்கத்துல உன் பிள்ள சர்க்கஸ் காட்றாரு சேதுப்பிள்ளை. போய்ப் பிள்ளைய வாங்கு... போ."

நடுத்தெரு விரட்டியது.

மேலத்தெருவின் பேச்சில் நையாண்டி மிதந்தது.

தவியாய்த் தவித்தபடி தலையில் அடித்து அழுதபடி கீழத்தெருவிற்கு வந்த வீரலட்சுமி புழுதியில் கிடந்த தன் பிள்ளையைக் கண்டதுமே கத்திக் கதறினாள்.

போதை தெளிந்த நிலையில் மறுபடியும் பிள்ளை கேட்டு கைநீட்டிய சேதுவை எரித்து விடுவதைப் போல பார்த்தாள். காறித்துப்ப நினைத்தாள். மண்ணை வாரித் தூற்ற எண்ணினாள்.

ஆனால்... அதிகாரியாய் இருக்கிற ஒரு பெரிய வீட்டு சேதுப் பிள்ளை, தன் நிலையை மறந்து ஒரு பிச்சைக்காரனைப் போல் பிள்ளை கேட்டு யாசித்தபோது அவளுக்கு ஆத்திரத்தைவிட அனுதாபமே மேலோங்கி நின்றது.

"எந்திரிச்சுப் போங்க சாமி வீட்டுக்கு... எங்க பிள்ளையைத் தொட்டுட்டா உங்க ஜாதிக்கு கேவலம்னு அப்பாரு நினைக்காக. சாராயப் பாட்டிலத் தொட்டா மட்டும் கேவலம் இல்லையா?"



"பத்துப் பேருக்குப் புத்தி சொல்ற ஜாதியில பிறந்துட்டு அந்தப் பத்துப் பேருமே பாத்துச் சிரிக்கவா இந்தப் பாட்டில எடுத்தீக? புழுதியில கிடக்கீக? இந்தப் போதை தேவை தானா?"

"புழுதியில வீசிட்டீக என் பிள்ளைய. அதுக்குக்கூட நான் கவலைப் படல. இந்தா தூக்கி எடுத்து தொடச்சி என் தோளோட சேத்துக்கிட்டேன். புழுதியில கெடக்குதே உங்க குடும்ப கௌரவம், குலப் பெருமை. அதை யார் தூக்கி எடுத்துத் துடைக்க முடியும்?"

"உங்களைத் தூக்கிச் சுமக்கிறதுக்காகவே ஒரு காலம் குடியை நிறுத்தினானாம் என் தகப்பன். இன்னைக்கு என் பிள்ளையத் தொட்டுத் தூக்குறதுக்காகவே நீங்க குடிச்சிட்டு வாறீக. வேண்டாம் சாமீ. நீங்க குடிகாரனாகி என் பிள்ளையத் தொடவே வேண்டாம். உங்க தகப்பனாரைப்போல நீங்களும் தள்ளியே நில்லுங்க, பரவாயில்ல. அவரைப் போல கௌரவமா கண்ணியமா இருங்க போதும். வீட்டுக்கு மூத்த பிள்ளை நீங்க. கொண்டு போய்க் கொட்ட வேண்டாம் அந்த வீட்டுக்கு. சேத்துவச்ச கௌரவத்தையாவது தெருவுல வந்து கொட்டாம இருங்க போதும்."

கும்பிட்டுவிட்டு குழ்ந்தையுடன் இடம் பெயர்ந்த அவளுக்கு ஊரே ஒதுங்கி வழிவிட்டது. தனக்குத் திடீரென்று இவ்வளவு மரியாதையா?

திகைத்துப் போய் நிமிர்ந்தவள் முன்னால் சொர்ணம்பிள்ளை கண்கலங்கி நின்றார்.

என்ன செய்யப்போகிறார் தன்னை? கலக்கத்தோடு அவரைப் பார்த்தாள்.

கையெடுத்து முதன் முதலாய்க் கும்பிட்டார்.

" நீ பேசின ஒவ்வொரு வார்த்தையும் வைரமும் வைடூரியமுமா இருந்ததும்மா. அவன் போதை மட்டுமில்ல, என் போதையும் கூடத் தெளிஞ்சிருச்சு. சனியன் பிடிச்ச ஜாதி போதை"

சட்டென்று அவள் குழந்தையை வாங்கி அதன் கறுப்புக் கன்னத்தில் ஒரு முத்தமிட்ட போது அவர் சட்டைப் பையில் இருந்த நூறு ரூபாய்த்தாளை குழந்தை படீரென்று எடுத்தது. பொக்கை வாய் திறந்து அவர் சிரிக்க, குழந்தையும் தன் சிரிப்பை உதிர்த்தபோது இருவரின் சிரிப்புக்குமே துணைச்சிரிப்பாக நூறு ரூபாய்த் தாளில் இருந்த மகாத்மாவும் சிரித்தார். ●



திரை முழுவதும் இருள். ஷு காலுடன் ஓர் ஆள் நடந்து வரும் ஓசை டக் டக்கென்று பின்னணியில் கேட்கிறது. அந்தக் காலடி ஓசை திரை அருகே நெருங்கி வந்து நிற்கிறது. உடன் சர்ரென்று காகிதம் கிழிக்கப்படும் ஒலி. இப்போது திரையில் முக்கால் பாகம் முழுக்க வெளிச்சம். கேமராவின் மிக அண்மையில் 'டை' கட்டிய ஓர் இளைஞர் நின்று கொண்டிருக்கிறார். அவரது பின்னணியில் ஜிகுஜிகுவென ஜொலித்தபடி ஓர் அறை. "என்னத்தைப் பெருசா கிழிச்சுட்டேன்னு யாரும் என்னைப் பார்த்துக் கேட்க முடியாது" என்று சொல்லியபடி திரையின் எஞ்சிய கால் பாகத்தை மறைத்துக் கொண்டிருக்கும் காகிதத்தையும் கிழித்து விடுகிறார். இப்போது அந்த

# அடடா



"அடுத்தடுத்து அந்த அறைக்கு வரும் முப்பத்து நான்கு பாத்திரங்களுக்கும், அந்தக் கொலைக்கும் சங்கிலித் தொடர்போல தொடர்புகள் தொடர, நாம் இருக்கை நுனிக்கு வந்துவிடுகிறோம்."

அறையின் வாயில், வரவேற்பறை, பால்கனி, ஆடம்பரக் கட்டில், டைனிங் பகுதி, ரீடிங் கார்னர், கழிவறை என எல்லாம் துல்லியமாகத் தெரிகின்றன.

விவரிப்பதைப் பார்த்தால் ஒரு ஐந்து நட்சத்திர விடுதியின் ஆடம்பரமான சூட் மாதிரி இருக்கிறதே என நீங்கள் எண்ணினால் ரொம்பக் கரெக்ட்! அன்று திறப்பு விழா காணும் புத்தம் புது ஐந்து நட்சத்திர ரிசார்ட்டின் ஓர் அறைதான் இது. டை கட்டிய அந்த இளைஞர் அந்த ரிசார்ட்டின் சூபர்வைசர். அவர் கிழித்தெரிந்த காகிதம் அந்த அறையின் புத்தம் புது நிலைக் கண்ணாடியில் ஒட்டி வைக்கப்பட்டிருந்த பார்சல் காகிதம்.

அந்த அறைக்கு முதல் விருந்தாளிகளாக வந்து சேர்கிறார்கள் ஒரு புதுமணத் தம்பதி. முதலிரவு கொண்டாட வந்த அவர்களுக்கு அதுவே கடைசி இரவாகவும்

ஆகிவிடுகிறது. அந்த அறையிலேயே கொலையுண்டு போகிறார்கள். அடுத்தடுத்து அந்த அறைக்கு வரும் முப்பத்து நான்கு பாத்திரங்களுக்கும், அந்தக் கொலைக்கும் சங்கலித் தொடர்போல தொடர்புகள் தொடர, நாம் இருக்கை நுனிக்கு வந்துவிடுகிறோம். ஒரு மணி நாற்பத்தைந்து நிமிடம் படம் ஓடுகிறது என்றாலும் அலுப்போ, சலிப்போ இல்லாமல் நம்மை உட்கார வைத்துவிடுகிறார்கள். இத்தனைக்கும் கேமராவை ஆணியில் அடித்து நிறுத்தியதுபோல, எந்த அசைவும் இல்லாமல் ஒரே கோணத்தில் நிறுத்தி முழுப்படத்தைச் சொல்லியிருக்கிறார்கள். இந்தச் சோதனை முயற்சிப் படத்தின் தலைப்பு 'நிலைக் கண்ணாடி'. அதாவது படத்தின் முழுக்கதையும் ரிசார்ட் அறையில் உள்ள நிலைக் கண்ணாடியின் பார்வையில் சொல்லப்பட்டிருக்கிறது.

கேமராவே நிலைக்கண்ணாடி! அட! இந்தப் புதிய முயற்சியின் பின்னணியில் யார் இருக்கிறார்கள்? அஜித்குமார், சி.பி. சந்திரசேகர் ஆகிய இரண்டு இளைஞர்கள். கோவை யைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டு வரும் 'சசி அட்வர்டைசிங்' நிறுவனத்

# கண்ணாடி!

துடன் கைகோத்துக்கொண்டு கலக்கியதாம் இந்தக் கூட்டணி. "பார்த்திங்களா! பார்த் திங்களா!" "பேஷ்! பேஷ்! ரொம்ப நன்னா இருக்கே!" "கோல்ட் வின்னர் கோல்ட் வின்னர் தான்" என்று நூற்று ஐம்பது சூப்பர்ஹிட் விளம்பரங்களை உருவாக்கிய இவர்கள், ஏ.சி. பிலிம்ஸ் என்ற விளம்பரப்பட நிறுவனத்தைத் தனியே தொடங்கி சாதித்து முடித்த கையோடு சினிமாவில் குதித்துவிட்டார்கள்.

"சினிமாவிற்கு வந்தால் வழக்கமான படமாக இல்லாமல், இதுவரை யாருமே முயற்சி செய்யாத படமாக இருக்க வேண்டும் என முடிவு செய்துகொண்டோம். ஒரே கோணத்தில் கதையைச் சொன்னால் இரண்டாவது காட்சியிலேயே போரடித்து விடும் அபாயம் இருக்கிறது என்று எல்லோரும் எச்சரிக்கை செய்தார்கள். எனவே கோணங்கள், தொழில் நுட்பம், நடிகர்களின் இமேஜ், பாடல்கள் போன்ற கமர்ஷியல் விஷயங்களை வெல்லும்படியான கதை, திரைக்கதை வேண்டும் என உணர்ந்தோம். எனவே ஓராண்டு காலம் மண்டையை உடைத்துகொண்டு நிலைக்கண்ணாடிக்கான கதையை உருவாக்கினோம்" என்கிறார்கள் அஜித்தும் சந்திரசேகரும்.

நாயகன், நாயகி, பாடல்கள் எதுவுமின்றி டிடிஎஸ். ஒலியில் எடுக்கப்பட்டிருக்கும் இந்தப் படத்தின் ஒவ்வொரு காட்சியும் முழு நேர்த்தியோடு இருக்க வேண்டும் என்பதற்காக முப்பத்து ஆறாயிரம் அடி நீளத்துக்குப் படம் பிடித்துத் தள்ளினார்களாம்.



''நிலைக் கண்ணாடியை வியாபார ரீதியாக வெற்றிப்படமாக மாற்றிக் காட்டும் அதே நேரம், உலகின் முதல் முயற்சி என்ற முறையில் கின்னஸில் இடம் பெறவும் ஏற்பாடுகள் செய்து வருகிறோம்'' என்கிறார்கள் இந்தக் கோவை இளைஞர்கள்.

சந்திப்பு: ஸ்ரீ சக்கரம்



**பி**த்த பிரக்ருதிக்காரர்கள் நடுத்தர ஆசாமிகள். சாதாரண உடல்வாகு கொண்டிருப்பார்கள். பசி, தாகம், தீவிரமாக இருக்கும். தலைமுடி மிருதுவாக, செம்பட்டை நிறத்துடன் இருக்கும். பித்த மிகுதியால் விரைவில் நரைத்து விடும்.

பித்த பிரக்ருதி உடையவர்கள், தைரியசாலிகள். படிப்பில் ஆர்வம் உடையவர்கள். அதனால் அறிஞர்களாகவும், தேஜஸ்விகளாகவும் காணப்படுவார்கள். மலம், சிறுநீர், வியர்வை என்ற மும்மலங்கள் அதிக

# கோபம் உண்டு!

## டாக்டர் எல். மகாதேவன்

**பித்த பிரக்ருதிக்காரர்களிடம் அதிகாரத் தன்மை இருக்கும். ஆதலால் இவர்கள் முதலாளிகளாகவோ தலைவர்களாகவோ இருப்பர். பித்தத்தின் கோபத் தன்மையினால் ரஜோ குணத்துடனும் இணைந்து செல்லும் தன்மையினால் சத்துவ குணத்துடனும் காணப்படுவர்.**




அளவில் வெளிப்படும் தன்மை கொண்டவர்கள். ஏ.ஸி அறையில்கூட வியர்ப்பார்கள். சருமத்தில் வியர்வையின் துர்நாற்றம் இருக்கும். மிருதுவான தோல் உடையவர்கள். சுக்ல, தாதுபலம் குறைவாக இருக்கும். எனவே சந்ததிகள் குறைவாகவே அமையும்.

பித்த பிரக்ருதிகாரர்களுக்குத் தேக பலமும் நடுத்தரமாகவே இருக்கும். செல்வம், ஆயுள் போன்றவையும் மத்தியமாகவே அமையும். சுள்ளென்று கோபம் வந்து விடும் இயல்புடையவர்கள். இவர்களது உடம்பும் வெப்பமானதாகவே இருக்கும். ஆதலால், இவர்களுக்கு இரத்தக் கொதிப்பு வரும் வாய்ப்பும் மிக அதிகம்.

பித்த உடம்புக்காரர்களுக்கு நகம் மிருதுவாக இருக்கும். பல் ஈறுகள் சீக்கிரத்தில் ரத்தம் கசியும் தன்மை

**7**

கொண்டவை. உணவுப் பிரியர்கள். அதிகமாகச் சாப்பிடுவார்கள். பெண்களின் மாதவிடாய் சீராகவும், அதிகநாள் நீடிப்பதாகவும் இருக்கும். குளிர்ச்சியான கால நிலையை விரும்புவார்கள். இவர்களது நாடித் துடிப்பு சமமானதாக இருக்கும்.

பித்த பிரக்ருத்திக்காரர்கள் தங்களைச் சார்ந்துள்ளோரிடம் அதிக பாசம் கொண்டவர்களாக இருப்பார்கள். வெகு சீக்கிரம் பழகி விடுவார்கள். தேவைக்கேற்ப பணத்தைச் செலவு செய்வார்கள். இவர்களிடம் அதிகாரத் தன்மை இருக்கும். ஆதலால் இவர்கள் முதலாளிகளாகவோ தலைவர்களாகவோ இருப்பர். பித்தத்தின் கோபத்தன்மையினால் ரஜோகுணத்துடனும் இணைந்து செல்லும் தன்மையினால் சத்துவ குணத்துடனும் காணப்படுவர். எப்போதும் உடலும் மனசும் சுறுசுறுப்பாக

# குணமும் உண்டு!

## தேவமருந்து

இருக்கும். யாராவது மெத்தனமாக வேலை செய்தால் இவர்களுக்குக் கோபம் வந்துவிடும். நன்றாகத் தூங்கும் இயல்புடையவர்கள். ஆனால் வேலை என்று வந்துவிட்டால், இரவு முழுக்க விழித்திருந்து உற்சாகமாக வேலை பார்ப்பார்கள.

உடல், மனம் இரண்டிலும் வேகம் கொண்டவர்கள் என்பதால், விளையாட்டு, நாட்டியம் போன்ற விஷயங்களில் ஆர்வம் அதிகமாக இருக்கும். சீக்கிரமே கோபப்படுவார்கள். ஆனால் அதே வேகத்தில் சாந்தமாகி விடுவார்கள். புலி, கரடி, பூனை, குரங்கு போன்றவைப் பித்தத் தன்மை உடையவை.

பித்த பிரக்ருதியாக நீங்கள் இருந்தால், என்னென்ன ஆகாரம் சாப்பிடலாம், என்னென்ன தவிர்க்கலாம் எனத் தெரிந்து கொள்வது அவசியமாகிறது.

**உண்ணத் தகுந்தவை:** இனிப்பு, துவர்ப்பு, கசப்பு சுவையுள்ள உணவுகள், குளிர்ச்சியான ஆகாரங்கள், சைவ உணவு, அரிசி, கோதுமை, பார்லி, முட்டைக்கோஸ், காரட், பீன்ஸ், காளான், தேங்காய், வெள்ளரி, உருளைக் கிழங்கு, கீரைகள், காலிஃப்ளவர், பீட்ருட், பட்டாணி, சோயா.

ஆப்பிள், தர்ப்பூசணி, மாதுளை, நெல்லிக் காய், பேரீச்சை, திராட்சை, செர்ரி.

பசும்பால், ஆட்டுப்பால், பால் சார்ந்த உணவுகள். பாதாம், தேங்காய் எண்ணெய் (அளவுடன்).

கொத்தமல்லி, கறிவேப்பிலை, கிராம்பு, ஏலக்காய், மஞ்சள் போன்றவற்றை அதிகமாகச் சேர்க்கவும்.

**தவிர்க்க வேண்டியவை:** புளிப்பு, உப்பு, காரச்சுவையுள்ள உணவுகள். பூண்டு, வெங்காயம், தேன், நல்லெண்ணெய், எலுமிச்சை, மாம்பழம் மிதமாகப் பயன் படுத்தலாம்.

வெயிலில் அலைதல், அதிகமாகக் கோபப்படுதல், மதுபானம் போன்றவைக் கூடாது.

பித்த ஆசாமிகளுக்கு எந்தவிதமான நோய்கள் வரும் என பட்டியலிடலாமா?

இரத்தக் கொதிப்பு, சரும நோய்கள், ஈரல் நோய்கள், மஞ்சள் காமாலை, மூலநோய், வாய்ப்புண், மூர்ச்சை போன்றவை வர வாய்ப்புண்டு.

நோயை எப்படித் தவிர்ப்பது?

குளிர்ச்சியான இடங்களில் வசிப்பது, மனத்தை சாந்தமாக வைத்துக்கொள்வது, நீச்சல் பயிற்சி, மிதமான ஆசனம், தியானம், பிரார்த்தனை நன்மை பயக்கும்.

அடுத்த வாரம் கப பிரக்ருதிகளுக்கான விஷயங்கள் வரப்போகின்றன. தயாராக இருங்கள்...



**க**தையை ஹீரோவாக்கி யிருக்கிறார்கள். திரைக்கதை இரண்டாவது ஹீரோ!

ஓட்டை, உடைசல், ஈயம், பித்தளைக்குப் பேரீச்சம்பழம் என்ற நிலையில் ஒரு வாடகைப் பேருந்து. அதன் முதலாளி முரளி, அவரது உதவியாளர் அழகு. இருவருக்கும், இந்தப் பேருந்துதான் அம்மா, அப்பா, வீடு, உலகம் எல்லாம். இந்த நகரும் வீட்டிற்குள் மூன்றாவ

முத்திரைப் பதித்து வரும் இளவரசு, தமக்கு காமெடியிலும் கலக்கத் தெரியும் என்று நிரூபித்திருக்கிறார்.

படத்தில் முரளி மூன்றாவது ஹீரோ. கலை இயக்குனர் மோகன மகேந்திரன் நான்காவது! ஓட்டை உடைசல் பேருந்து கான்செப்டை, கச்சிதமாய் உள்வாங்கிக் கொண்டு 'சுந்தரா டிராவல்ஸுக்கு' உயிர் கொடுத்திருக்கிறார்.

# சுந்தரா டிராவல்ஸ்



தாகத் தஞ்சமடையும் ராதாவும் முரளியும் காதலிக்கிறார்கள். அப்புறம் வில்லன்கள் முளைக்கிறார்கள். கடைசியில் கைப் பிடிக்கிறார்கள் என்பதாக, தொய்வின்றி நகரும் படம் முழுவதும், இயல்பான நகைச்சுவை ஜம்மென்று சவாரி செய்கிறது.

புதுவை அமைச்சரின் மகள் ராதா, வீட்டைவிட்டு வெளியேறியதன் பின்னணியாக, அமைக்கப்பட்டிருக்கும் ப்ளாஷ் பேக் நயம்!

வடிவேலு, வினுசக்கரவர்த்தி இருவரும் காமெடியில் தூள் கிளப்புகிறார்கள் என்றால், குணசித்திர வேடங்களில்

பரணியின் இசை பரவாயில்லை ரகம். தமிழுக்குப் பழகிப் போன க்ளைமாக்ஸ், முரளி - ராதா இடையேயான நட்பும், காதலும் அழுத்தமாகச் சொல்லப்படாததால், ராதா பிரிந்து போகும்போது நமக்கு வருத்தமே வரவில்லை. இக்குறைகளை நீக்கிவிட்டு கதையை நம்பி களத்தில் இறங்கிய தாஹா போன்ற மலையாள இயக்குநர்களை வெற்றிலைப் பாக்கோடு வரவேற்கலாம்.

- விஷுவல்தாசன்

● அபவ் ஆவெரஜ்



# மும்பை மசாலா: மலைக்க

விலாஸ்ராவ் தேஷ்முக்கைப் பதவி நீக்கம் செய்ய மஹாராஷ்ட்ராவிலுள்ள நாலாங்கிளாஸ் குழந்தைகளின் பெற்றோரெல்லாம் ஒட்டு மொத்தமாகத் திரண்டெழுந்துள்ளார்கள். பின்னே, நாலாவது படிக்கும் குழந்தைகளுக்கு போர்ட் எக்ஸாம் என்றால்? இருக்கும் தலைவலிகள் போதாதென்று இது வேறு திருகுவலியா என்று அரண்டு விட்டார்கள். விஷயம் முற்றிப் போய், சோனியா காந்தி தலையிட்டு, விலாஸ்ராவை மறு பரிசீலனை செய்யச் சொல்லியிருக்கிறாரென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். ஏற்கெனவே தேஷ்முக் பதவியிலிருப்பதற்கும் காரணம் TINA தான் என்கிறார்கள் (அதாங்க There is no Alternative) ஆனால் இந்த விஷயத்தில் இது இல்லை என்றால் வேறொன்று



• ஒருவர் மேலே ஒருவர் நின்று...

கிடைக்காமல் போகுமா என்ன? அதாவது நாலாவது போர்ட் எக்ஸாம் இல்லை என்றால் எல்கேஜி குழந்தைகளுக்கு CET (Common Entrance Test) கமாண்டோ ட்ரெயினிங். இப்படி ஏதாவது மாட்டாமலா போகும்? நாளைய திட்டம் என்னவென்று யார் கண்டார்கள்?

கண்டவர்கள் களிப்படைந்தனர்; பார்த்து நின்றவர்கள் பரவசத்தில் நனைந்தனர். "கோவிந்தா" என்றால் உறியடி நடக்கும்தான். கீழேயிருந்து கொஞ்சம் கொஞ்சமாக ஆட்கள் குறைந்து கடைசியில் ஒருவர் மேலே நின்று தயிர்ப்பானையை உடைப்பதுதானே வழக்கம்? இந்தமுறை, தாதரில் நடந்த உறியடியில் இந்த ஒற்றைப்படை வரிசையே நாலு இருந்தது! ஒருவர் மேல் மற்றொருவர், அவர் மேல் இன்னொருவர் என்று! அடி மட்டத்திலோ இருபது முப்பது நபர்கள். நினைத்தாலே குலை

> "ஆமீரும் அவர் மனைவி ரீனாவும் கிட்டத்தட்ட விவாகரத்து வரை போய்த் திரும்பி வந்திருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் மனம் பதைபதைக்கிறதே!"

நடுங்குகிறதா' பார்த்தே சிலர் மயக்கமுற்றனர்; பங்கெடுத்தவர்களில் பலர் முதுகெலும்பில் அடி, கை கால் ஃப்ராக்சர் என்று ஆஸ்பத்திரிகளில். என்ன செய்வது? தயிர்ப்பானைகளில் தயிர் மட்டுமிருந்தால் அந்த கோவிந்தனே இந்த அடி வாங்கியிருக்க மாட்டானே? லட்சக்கணக்கில் பரிசுப் பொருள்கள் 'ஸ்பான்சர்' செய்யப்படுகின்றனவே? இம்முறை சஞ்சய் நிருபம் என்ற சிவ சேனை எம்.பி. தம் சொந்தச் செலவில் ஐம்பத்தைந்தாயிரம் ரூபாய் உறியடிப் பரிசாகக் கொடுத்து, அரசியல் அந்தஸ்தை உயர்த்திக் கொண்டிருக்கிறார். வர வர ஆன்மிகப் படிகள் மூலமாக அரசியல் ஏணிகளில் ஏற நினைப்பவர்கள் ஏராளமாகிக் கொண்டிருக்கின்றனர். கோவிந்தனை அடியொற்றி, இதோ வந்துவிட்டாரே பிள்ளையார்.

பிள்ளையார் பிடிக்கப் போய் சி.எம்.மாக முடிந்த கதைகள், மும்பையில் ஏராளம். கணபதி உற்சவத்தின்போது பணபலத்தையும் (அடி) ஆள் பலத்தையும் பிரகடனப்படுத்தியே பதவியைப்

# வைத்த உரியடி!

பிடித்த பக்த கேடிகளின் கதைகள் தனி 'ராஜ தந்திரக்' கதைகளாக வரலாற்றில் இடம் பெறும். இந்த முறை என்னவோ காவல்துறை கடினமாக இயங்கப் போவதாக பயமுறுத்துகிறார்கள். வருடா வருடம், தக்ஷிணேஷ்வர் கோயில், கன்யாகுமரிக் கோயில், மைசூர் அரண்மனை என்றெல்லாம் உருவாக்கி தடபுடல் படுத்திய செம்பூர் திலக் நகர் பகுதியின் 'ஸஹ்யாத்ரி க்ரீடா மண்டல்'காரர்கள் இம்முறை வாலைச் சுருட்டிக்கொண்டதிலேயே, போலீஸ்காரர்கள் தீர்மானமாக இருக்கிறார்கள் என்பது தெரிகிறது. இம்முறை ஷிர்டி சாயிபாபா கோயிலை, அடக்கமாக, அதிக ஆர்பாட்டமில்லாமல் அமைக்கப் போகிறார்களாம். பல்புத் தோரணங்கள், தெருவடைத்த பந்தல்கள் எதுவுமில்லை. அப்படியே ப்ளாஸ்டர் ஆஃப் பாரீஸ் கணபதி விக்கிரங்களுக்குத் தடை விதித்து மண் பிள்ளையார்களுக்கு வழி வகுத்துக் கொடுத்தால் சுற்றுச் சூழல் பாதுகாப்புக்கு உதவியாயிருக்குமே?

உதவியாயிருக்குமே என்றுதான் ஆரம்பித்தார் பரமேஷ்வர் கோத்ரெஜ் - அதாவது, தாம் ஒருபைசா வாங்கிக் கொள்ளாமல் ராகேஷ் ரோஷனின் ஜுஹூ வீட்டைப் புதிதாக இன்டீரியர் டிசைனிங் செய்து மாற்றியமைத்தால், தாம் செய்யும் நற்பணிகளுக்கு ஹ்ருத்திக்கின் அங்கீகாரம் இலவசமாகக் கிடைக்குமே என்றுதான், அவர்களின் வீட்டைப் புதுப்பிக்க ஆரம்பித்து, தொண்ணூறு சதவிகிதம் முடித்தும் விட்டார். திடீரென்று ஏதோ பத்திரிகையில், ஹ்ருத்திக், 'எங்கள் வீட்டுக்குப் புதிதாக இன் டீரியர் செய்திருப்பது பரமேஷ்வர் கோத்ரெஜும் என் மனைவி ஸுசேனும்' என்று பேட்டி கொடுத்திருந்ததைப் படித்து, கொதித்து விட்டார். ஸுசேனுக்கு இதில் எந்தப் பங்குமே இல்லை என்ற உண்மை வெளியாகும்வரை வேலையைத் தொடர மாட்டேன் என்று விட்டார்! விஷயமென்னவென்றால், ஸுசேனின் அம்மாவும் இன்டீரியர் டிசைனராம்; தனக்குச் சம்பந்தி காண்ட்ராக்டைத் தரவில்லையே என்று அவர்தான் பெண்ணைத் தூண்டி விட்டதாக... சரி சரி... நமக்கெதற்குப் பெரிய இடத்து கசமுசவெல்லாம்?



கசமுசவெல்லாம் உப்புச் சப்பில்லாதது என்று ஒதுக்கிவிட முடியுமா? அதுவும் ஆமீர்கானுக்கும் ப்ரீத்தி ஜிண்டாவுக்கும் ஏதோ லல்லல்லா என்றால் ஆமீரும் அவர் மனைவி ரீனாவும் கிட்டத்தட்ட விவாகரத்து வரை போய்த் திரும்பி வந்திருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் மனம் பதைபதைக்கிறதே! ஆனால் அப்படி எதுவுமேயில்லை என்று சத்தியம் செய்கிறார் ப்ரீத்தி. 'நான் கல்யாணமானவர்களை, அதுவும் சினிமாக்காரர்களைத் தேர்ந்தெடுக்கவே மாட்டேன் என்று திட்டவட்டமாக அறிவித்து விட்டார்! ஜிண்டா ஜிந்தாபாத்!

– ஜெயஸ்ரீ ராஜ்


• சாந்தி வனம்

• வித்யாகர்

"கண்ணே கலைமானே கன்னிமயிலெனக் கண்டேன் உனை நானே..." சோக ரசம் தோய்ந்த சினிமா பாடலை பாவம் துளியும் குறையாமல் பாடிக் கொண்டிருக்கிறார் பத்மப்ரியா. இவரது பாட்டு இங்கே பலருக்கும் தாலாட்டு. வீதியோரங்களில் மரணத்தை வேதனையோடு எதிர்நோக்கிக் கொண்டிருந்த மூதாட்டிகள், இங்கே மீட்டுவரப்பட்ட பிறகு, அவர்களைத் தூக்கியெடுத்து, நீராட்டி, உணவை ஊட்டி, தாலாட்டுப்பாடி உறங்க வைப்பதுவரை, எல்லாவற்றையும் சிரித்த முகத்தோடு செய்கிறார் இந்த முப்பது வயதுப் பெண்மணி. இவர் ஒரு எச்.ஐ.வி. பாசிட்டிவ்.



# கைவிட்ட சமூகம் காப்பாற்றுகிறது!

மனநலம் முற்றிலுமாகச் சிதைந்து சென்னைத் தெருக்களில் சுற்றிக் கொண்டிருந்த பத்மப்ரியாவை எட்டு ஆண்டுகளுக்கு முன்பு இங்கே அழைத்து வந்தபோது எடுக்கப்பட்ட புகைப்படத்தைப் பார்க்கிற யாரும் ஒரு கணம் அதிர்ந்துதான் போவார்கள். இனி உதவமாட்டார் என்று தெரிந்தபிறகு மும்பை சிவப்பு விளக்குப் பகுதியிலிருந்து சென்னை ரயிலில் ஏற்றிவிடப்பட்ட பத்மப்ரியாவின் மனச் சிதைவு நோய் இப்போது முற்றிலுமாக குணமடைந்துவிட்டது என்றாலும் எச்.ஐ.வி. வைரஸ் அவரை ஒவ்வொரு நாளும் மிரட்டிக் கொண்டிருக்கின்றது. "இங்கே இருக்கிறவரை எனக்கு எதுவும் ஆகாது. 'பப்பா' என்னைச் சாகவிடமாட்டார்" என்று நம்பிக்கையோடு சொல்கிறார் இந்த பத்மப்ரியா. இவரைப் போன்று, நம்பிக்கையோடு நூற்றுக்கும் அதிகமான பெண்கள் இங்கே உண்டு. எச்.ஐ.வி.யின் இறுதி நிலையில் இன்றோ, நாளையோ என நாட்களை எண்ணிக் கொண்டிருக்கும் மாலா போன்றவர்களும் இங்கே பாதுகாப்போடு இருக்கிறார்கள்.

ரோகிணிக்கு ஐந்து வயதாகிவிட்டது. இரண்டு கைகளும் இன்றிப் பிறந்த இந்த அழகுக் குழந்தையை, தனியார் மருத்துவமனையிலேயே விட்டுவிட்டுப் போய் விட்டார்கள், பட்டம் படித்து நல்ல உத்தியோகத்தில் இருக்கும் பெற்றோர். இன்று ரோகிணி சாப்பிடுவது முதல் எழுதுவது வரை எல்லாவற்றையும் தனது கால்களால் செய்யப் பழகிக் கொண்டிருக்கிறாள். கைகள் இல்லை என்ற குறை கூட அவளின் நினைவுக்கு வந்துவிடக்

* ராமகிருஷ்ணா வித்யா நிகேதன்



* நைட்டிங்கேல்



* ரோகிணி

கூடாதென்று. ரோகிணிக்குக் கைகொடுக்க இங்கே நிறையப் பேர் இருக்கிறார்கள்.

பிறந்த இரண்டு தினங்களே ஆன குழந்தையாக நைட்டிங்கேலை திருவனந்தபுரம் மெயிலில் விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். மெலனின் குறைபாட்டால் தேகம் முழுவதும் வெண்ணிறமாகப் போய்விட்டது என்ற ஒரே காரணத்திற்காக அநாதையாகப்பட்ட இந்தச் சிறுமிக்கு இங்கே நிறபேதமற்ற உறவுகள் நிறைய.

பசவராஜுக்குச் சொந்த ஊர் பெங்களூர். தீவிர மன நோயாளி என்று குடும்பத்தாரால் புறக்கணிக்கப்பட்டவர். பதினைந்து ஆண்டுக் காலம் இரும்புச் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு கொடுமைப்படுத்தப் பட்டவர். இங்கே வந்தபிறகு இவர் புதிதாய்ப் பிறப்பெடுத்திருக்கிறார். மனநலம், உடல்நலம் தெளிந்து புதுமனிதனாகிவிட்டார். தம்மைப் போல இங்கே வந்து சேர்ந்த பலருக்கும் அவர்களின் துணிகளைத் துவைத்துத் தருவதில் இவருக்கு அப்படியொரு இஷ்டம்!

இவர்களைப் போன்று ஒட்டுமொத்தமாய்க் கைவிடப்பட்ட இரண்டாயிரத்து ஐந்நூறு பேரை, தனது கைகளில் தாங்கி புனர்வாழ்வு எனும் புதிய திசைவழியைக் காட்டி வருகிறது உதவும் கரங்கள் அமைப்பு. கடந்த ஐந்தாண்டு காலமாக உதவும் கரங்கள் பற்றி எந்தச் செய்தியும் இல்லையே என்று எண்ணிக்கொண்டிருக்கும்போது நடப்பாண்டிற்கான 'சிறந்த சமூகசேவை நிறுவனம்' என்ற தமிழக அரசின் விருதைப் பெற்றிருக்கிறது.

1982ல் தொடங்கப்பட்டு 'உதவும் கரங்கள்' என பாரபட்சம் இல்லாமல் எல்லா உதடுகளையும் உச்சரிக்க வைத்ததன் பின்னணியில், வித்யாகர் என்ற தாயுள்ளம் கொண்ட தனிமனிதனின் உழைப்பு இருந்தது. இருக்கிறது.

சிறந்த சமூகசேவை நிறுவனம் என்ற அரசு விருதைப் பெற இருபது ஆண்டுகள் ஆகியிருக்கும் நிலையில், இப்போது எப்படியிருக்கிறது உதவும் கரங்கள்?

சென்னை அண்ணா நகர் வரவேற்பு வளைவு அருகே உதவும் கரங்கள் அலுவலகம். 'எங்களின் உடனடித் தேவை

* மாலா





* சாப்பிடலாம் வாங்க



* நர்சரித் தோட்டம் இங்கே சிகிச்சை

அரிசி' என்று கதவில் ஓர் அறிவிப்பு. அதைக் கடந்து முன்னறிவிப்பு எதுவுமில்லாமல் உள்ளே நுழைகிறோம்; நாம் நுழைந்த அதே நேரம் ஐம்பது வயது மதிக்கத் தக்க ஒருவர் சுமார் முப் பது கிலோ எடையுள்ள மூட்டையொன்றை ஆட் டோவிலிருந்து இறக்கினார். "உதவும் கரங்கள் ஆபீஸ் இதுதானே?" என்று கேட்டு உறுதிப் படுத்திக் கொண்டார்.

"எங்க வீட்டுக் கல்யாண ரிசப்ஷனில் மிஞ்சிய அரிசியும், பருப்பும் இதுலே இருக்கு" என்று சொல்லி மூட்டையைத் தர, "ரொம்ப நன்றி" என்று சொல்லியபடி வாங்கிக் கொள் கிறார் வித்யாகர். "இந்த மாதிரி உள்ளங்கள் இருக்கிறதுனாலதான் நாங்கள் உதவும் கரங்களா இருக்கோம். ஒரு மாதத்திற்கு நூற்றுநாற்பது மூட்டை அரிசி தேவைப்படு கிறது" என்றபடி வரவேற்றார் வித்யாகர்.

அங்கிருந்து ஆம்புலன்ஸ் வண்டியில் மதுரவாயில் நோக்கிப் புறப்படுகிறோம். அங்கதோன் உதவும் கரங்களின் கருணை இல்லம் இருக்கிறது. பிள்ளைகளை ஹாஸ்ட லில் சேர்த்துவிடுவதுபோல, வயதான பெற் றோர்களையும் சேர்த்துவிட, தெருவுக்கொரு முதியோர் இல்லம் வந்துவிட்டது. ஆனால் இங்கேயிருக்கும் மூதாட்டிகளோ தெருக்களில், குளிரில் மழையில், பட்டினியில் சாகக் கிடந் தவர்கள். இப்போது பசுமையான மரங்கள், செடிகள் நிறைந்த இனிய சூழல் நடுவில் விசாலமான ஹால்கள், தனித்தனிக் கட்டில் கள். மின்விசிறி, தொலைக்காட்சி, உயர்தர உணவு, கனிவாக கவனித்துக்கொள்ள பெண் கள், என்று சந்தோஷமாய் இருக்கிறார்கள். ஒவ்வொருத்தரிடமும் நிரந்தரமாய்த் தங்கிவிட்ட ஒரு கண்ணீர்க் கதை இருக்கிறது. வித்யாகரைக் கண்டதும் 'பப்பா' (அப்பா) என்று பாசமாய்க் கட்டிக் கொள்கிறார்கள். கருணை இல்லத்தில் மூதாட்டிகள் தவிர, அபலைப் பெண்கள், மனநலம் குன்றியவர்கள், எச்.ஐ.வி. பாசிட்டிவ் பெண்கள் என தனித்தனி இல்லங்களில் தங்கியிருக்கிறார்கள்.

அங்கிருந்து திருவேற்காடு செல் லும் வழியில் வேலப்பன் சாவடியில் மலர்வனம். இது ஆண்களுக்கான இல்லம். இங்கேயும் அதே தரமான சூழல். கைவிடப்பட்ட முதியவர்கள், ஆண்கள், சிறுவர்கள் என்று ஐந் நூறுக்கும் அதிகமாய் இருக் கிறார்கள். தொலைந்து போன வாழ்க்கை திரும்பக் கிடைத்துவிட்ட நிம்மதி இவர்களிடம்.

மலர்வனத்தைக் கடந்து திருவேற்காடு செல் கிறோம். இங்கேதான் சாந்திவனம். உள்ளே நுழைந்தால் பூக்களின் இதமான வாசனை, இத யம் வருட, காணும் இடமெல்லாம் பசுமை. எங்கும் எதிலும் கலா ரசனையோடு உருவாக் கப்பட்டுள்ள லேண்ட் ஸ்கேப் தோட்டங்கள். இந்தத் தூய்மையான பின்னணியில் கட்டி டங்கள். வளாகத்தின் நடுநாயகமாக அம்மன் கோவிலும், தேவாலயமும் காட்சி தருகின்றன.

அது மதிய உணவு வேளை. 'ஆகாரம்' என்று எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட ஹாலுக்கு நுழைகிறோம். ஐந்து வயதைக் கூட எட்டாத சிறார்கள். அத்தனைபேரும் அன்னை, தந்தை இருவரையும் அடையாளம் காணும் முன்பு, அவர்களாலேயே அநாதை யாக்கப்பட்டவர்கள். சாப்பிடும் முன் இந்தக் குழந்தைகள் கரம் குவித்துப் பிரார்த்தனை செய்துவிட்டு நம்மையும் "சாப்பிட வாங்க" என அழைக்கையில் உள்ளம் உருகிப் போகிறது.

சாந்தி வனத்தின் உள்ளே இந்தச் சிறார்கள் தவிர, தற்போது சுமார் இரண்டாயிரம் பெண்கள், சிறுமிகள், மனநலம் பாதிக்கப் பட்டவர்கள் புதிய வாழ்க்கையைக் கண் டெடுத்திருக்கிறார்கள்.

சாந்தி வனத்தையொட்டி உதவும் கரங் களின் ராமகிருஷ்ணா வித்யாநிகேதன் மேல்நிலைப்பள்ளி. திருவேற்காட்டைச் சுற்றி யுள்ள முப்பத்திரண்டு கிராமங்களைச் சேர்ந்த ஏழை மாணவர்களும், சாந்திவனத்தில் வாழும் சிறுவர், சிறுமியரும் பயிலும் உயர்தரப் பள்ளி. தமிழ், ஆங்கிலம் மீடியம்களில் பயிற்றுவிக்கப் படும் இந்தப் பள்ளி கடந்த 1995ம் ஆண்டு தொடங்கப்பட்டு விரைவாக வளர்ந்திருக்கிறது. இந்தப் பள்ளியை ஒட்டியே இருக்கிறது காயத்ரி நர்ஸரி அண்ட் லேண்ட் ஸ்கேப். உதவும் கரங்களுக்குச் சொந்தமான இந்த



நிறுவனத்தின் உதவியால்தான் எங்கும் எதிலும் பசுமை. "மனநலம் பாதிக்கப்பட்டு கைவிடப் பட்டவர்களை, மீட்டு இங்கே அடைக்கலம் தந்த பிறகு அவர்களை அடைத்து வைக்காமல், காயத்ரி நர்சரியில் செடிகளைப் பயிரிட கற்றுத் தருகிறோம். இதுவே அவர்களுக்கு நல்ல சிகிச்சையாகிவிடுகிறது. தவிர எங்களை அணுகினால் நவீன முறையில் வீட்டுத் தோட்டம் அமைத்துத் தருகிறோம். அதேபோல உதவும் கரங்களில் பூஞ்செடிகள் வாங்குவதில் மனநிறைவு கொள்கிறார்கள்" என்கிறார் காயத்ரி நர்சரியை நிர்வகித்துவரும் முழு நேரத் தன்னார்வத் தொண்டரான ரெங்கநாதன்.

சாந்தி வனத்தின் மற்றொரு பகுதியாக இருக்கிறது கோகுலம் சில்ரன் வில்லேஜ். நவீன வசதியோடு வளரும் சிறுமியருக்கான தங்கும் இல்லங்கள். இரண்டு தளங்களைக் கொண்ட இந்தத் தொகுப்பு இல்லங்களில் ஒரு தளத்திற்குப் பத்து சிறுமியர் வீதம் வசிக்கிறார்கள். இதைப் போலவே பத்துவயதைத் தொடும் சிறுவர்கள் தனியே பிரிக்கப்பட்டு பாய்ஸ் டவுனில் இதே போன்ற நவீன இல்லங்களில் வசிக்கிறார்கள்.

"நாங்கள் கைவிடப்பட்டவர்கள், அநாதைகள் என்ற எண்ணம் மனத்தளவில்கூட எங்களுக்கு வருவதில்லை. 'உங்களுக்கு அப்பா - அம்மாவை என்னால் தர முடியாது. ஆனால் நல்ல வாழ்க்கையையும் எதிர் காலத்தையும் அமைத்துத் தர முடியும் என்று எங்கள் பப்பா சொல்லிக் கொண்டேயிருப்பார். அதைச் செய்து கொண்டிருக்கிறார்' என்று கண்ணீர் மல்க கூறிய ராணி வளர்ந்தது இங்கே தான். இவர் படித்திருப்பது பி.எஸ்சி. நர்சிங். மாநில அளவில் முதல் மாணவியாக வந்து, உதவும் கரங்களைப் பெருமைப்படுத்தியிருக்கிறாராம் இவர்.



• பத்மப்ரியா

சாந்திவனத்தையொட்டியிருந்த மற்றொரு இல்லம், மனநலம் பாதிக்கப்பட்ட ஆண்களுக்கென்று இயங்கிவரும் டிக்னிட்டி ஹோம். மதுரவாயல், வேலப்பன்சாவடி, திருவேற்காடு தவிர தற்போது கோவையிலும் விழுது பரப்பி நிற்கிறது உதவும் கரங்கள் அமைப்பு.

"இருபது ஆண்டுகள் கழித்து விருது பெற்றிருப்பதற்காக நான் வருந்தவில்லை. என்னைப் பொருத்தவரை இதுதான் சரி" என்கிறார் வித்யாகர். "கடந்த ஐந்து ஆண்டுகளில் இங்கே அடைக்கலமானவர்களின் எண்ணிக்கை பெருகியிருப்பதுபோல உதவிகள் பெருகவில்லை. பிள்ளைகள் வளர வளர சவால்கள் அதிகரித்துக் கொண்டே இருக்கின்றன" என்னும் வித்யாகர் "எங்களைக் கைவிட்ட அதே சமூகம் தான் காப்பாற்றுகிறது என் பதில் ஆறுதல் கொள்கிறோம்" என்கிறார். இங்கேயிருக்கும் பச்சிளம் குழந்தை தொடங்கி, குடுகுடு பாட்டிவரை எல்லோரது பெயருக்கும் முன்னால் போடப்படும் இனிஷியல் 'வி'. இங்கிருக்கும் அத்தனைபேருக்கும் வித்யாகர் தான் அப்பா. தென்னகத்தின் தெரசா என்றாலும் மிகையில்லை.

விசிட் : ஜெ.ஜே

படங்கள் : ராஜன்

# சிவகாமியின் சபதம்

ஐந்தாம் அத்தியாயம்

## காஞ்சி ஒற்றன்

வாதாபிச் சக்கர வர்த்தி, குண்டோதரன் விஷயத்தில் நன்கு கவனம் செலுத்தாமலே, "இவனை யானையின் காலால் இடறச் செய்யுங்கள்!" என்று கட்டளையிட்ட போது அருகிலிருந்த வாதாபியின் ஒற்றர் தலைவன் மிக்க பணிவோடு, "அரசே! இவனைக் கொஞ்சம் விசாரணை செய்து விட்டுப் பிறகு தண்டனை நிறைவேற்றுவது நலம்!" என்று தெரிவித்துக்கொண்டான்.

"ஆம், ஆம், ஏதோ ஞாபகமாகச் சொல்லிவிட்டேன். அவனை இப்படி அருகில் கொண்டு வாருங்கள்" என்று புலிகேசி கட்டளையிடவும், குண்டோதரன் அருகில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான்.

"அடே, நீ யார்? என்ன வேலையாகப் புறப்பட்டாய்? உண்மையைச் சொல்!" என்று கேட்போர் உள்ளம் நடுங்கும் அதிகாரத் தொனியில் புலிகேசி வினவினான்.

வாதாபி மன்னன், சென்ற பதினெட்டு மாத காலத்தில் தமிழ் மொழியை நன்றாய்ப் பேசவும், பேசியதைத் தெரிந்து கொள்ளவும் பயின்றிருந்தான் என்பதை இந்த இடத்தில் நாம் குறிப்பிட வேண்டும். ஏற்கெனவே வாதாபி ராஜ்யத்தில் வழங்கிய பாஷையானது பாதித் தமிழ்ச் சொற்களைக் கொண்டிருந்தபடியால், தமிழ் மொழியைப் பயிலுவதில் புலிகேசிக்கு அதிகச் சிரமம் ஏற்படவில்லை. புலிகேசி கேட்ட கேள்விக்கு விடையாகக் குண்டோதரன், "ஐயா! நான் என் தாயாருடைய மகன். கொள்ளிடத்துக்கு அக்கரையில் திருவெண்காட்டுக்குப் போகலாமென்று கிளம்

**அமரர் கல்கி**

பினேன். திருவெண்காட்டு வைத்தியரிடமிருந்து மருந்து வாங்கிக் கொண்டு வருவதற்காகப் போகிறேன்'' என்றான்.

''எதற்காகடா மருந்து! உனக்கு என்ன கேடு வந்துவிட்டது?'' என்று புலிகேசி கேட்டதும், குண்டோதரன் பயத்தினால் நடுங்கியவன் போலப் பாசாங்கு செய்து, "எனக்காக இல்லை, ஐயா! அம்மாவுக்கு மருந்து. என் தாயார் அவல் இடிக்கும்போது உரலை விழுங்கிவிட்டாள், அதற்காக!'' என்றான்.

இந்த விடை அங்கிருந்தவர்கள் சிலருக்குச் சிரிப்பை உண்டாக்கிற்று. புலிகேசியின் முகத்திலும் இலேசான புன்னகை தோன்றியது.

''என்னடா உளறுகிறாய்? உன் அம்மா உரலை விழுங்கினாளா?'' என்று அதட்டிக் கேட்டான்.

"இல்லை, உரலை விழுங்கவில்லை, உலக்கையைத்தான் விழுங்கினாள்!'' என்றான் அதிக நடுக்கத்துடன் குண்டோதரன்.

''உரலை விழுங்கினாளா, உலக்கையை விழுங்கினாளா? நிஜத்தைச் சொல்!" என்று கோபமான குரலில் கர்ஜித்தான் புலிகேசி.

"இல்லை, இல்லை! என் அம்மாவை உரல் விழுங்கிவிட்டது!'' என்றான் குண்டோதரன்.

''அடே, என்னிடம் விளையாடுகிறாயா? - உன்னை என்ன செய்வேன், தெரியுமா?"

''ஐயா! மன்னிக்க வேண்டும். உங்களை எல்லாம் பார்த்தால் எனக்கு மிகவும் பயமாய் இருக்கிறது. அதனால் மனத்திலே ஒன்று இருக்க, நாக்கு எதையோ சொல்கிறது."

''இப்போது பயம் இல்லாமல் நிதானமாக யோசித்து உள்ளதை உள்ளபடி சொல்லு!''

"என் தாயார் அவல் இடித்தபோது உலக்கை தவறிக் கையில் விழுந்து விட்டது. அதனால் அம்மாவின் கையில் காயமாகி விட்டது. காயத்துக்கு மருந்து வாங்குவதற்காகத் திருவெண்காட்டு நமச்சிவாய வைத்தியரிடம் போகிறேன்."

''இவ்வளவுதானே, வேறு ஒன்றும் இல்லையே? சத்தியமாய்ச் சொல்!'' என்று புலிகேசி கர்ஜித்தான்.

''ஆம், ஐயா! சத்தியமாகச் சொல்லுகிறேன். உலக்கைக்குத்தான் காயம் பட்டது!'' என்று குண்டோதரன் உளறினான்.

வாதாபிச் சக்கரவர்த்திக்குத் திடீரென்று சிரிப்பு பீறிக் கொண்டு வந்தது. சற்று நேரம் விழுந்து விழுந்து சிரித்துவிட்டு, பக்கத்திலிருந்த ஒற்றர் தலைவனைப் பார்த்து, "இந்தப் பைத்தியக்காரனை என்ன செய்கிறது?" என்று கேட்டான்.

''சக்கரவர்த்தி! இவன் பைத்தியக்காரன் அல்ல. காரியப் பைத்தியமாகத் தோன்றுகிறது. மிக்க நெஞ்சழுத்தமுள்ளவனாகக் காணுகிறான். இவனை வேறு விதத்தில் பரிசோதிக்க வேண்டும்'' என்றான் வாதாபியின் ஒற்றர் தலைவன்.

குண்டோதரனைப் பிடித்துக் கொண்டு வந்திருந்த வீரர்களின் தலைவன் சக்கரவர்த்தியின் அருகில் நெருங்கி, "பிரபு! இதோ இந்த ஓலை இவனைச் சோதித்தபோது அகப்பட்டது'' என்பதாகச் சொல்லிவிட்டுக் கொடுத்தான்.

புலிகேசி அதை வாங்கி முன் போலவே அங்கிருந்த விகிதனிடம் கொடுக்க, அவன் ஓலையைப் படிக்கலானான்:

"மீனக் கொடியோனுக்கு ரிஷபக் கொடியோன் விடுத்த நிருபம். வட தேசத்துக் கடுவாய் உம்மைக் காண்பதற்காகக் கொள்ளிட நதிக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. புலியின் ஆசை வார்த்தைகளில் மயங்கி விட வேண்டாம். சேற்றில் அகப்பட்டுக் கொண்ட

புலி பிராமணனைத் தோத்திரம் செய்து ஏமாற்றிய கதை ஞாபகம் இருக்கட்டும். காஞ்சி ரிஷபத்தை வாதாபிப் புலியினால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை உறுதியாக நம்பவும். புலி சேற்றிலேயே கிடந்து பட்டினியால் செத்த பிறகு காஞ்சி ரிஷபத்துக்கும் மதுரையின் பெண் மானுக்கும் நீடித்த உறவு ஏற்பட இடம் இருக்கிறது. ஆனால், புலியின் பசியைத் தீர்க்க உதவி செய்தால் அது மதுரையின் மானுக்குத்தான் முடிவில் ஆபத்தாக முடியும். இதையும் மனத்தில் வைத்துக்கொண்டு உசிதப்படி நடந்து கொள்ளவும்."


தை விகிதன் படித்து வரும்போதே வாதாபிச் சக்கரவர்த்திக்கு அதன் உட்கருத்து இன்னதென்று விளங்கிவிட்டது. கோபத்தினால் அவனுடைய உடம்பெல்லாம் நடுங்கிற்று. பற்களை அவன் நறநற வென்று கடித்துக் கொண்ட சப்தம் அருகில் இருந்தவர்கள் எல்லாரையும் நடுங்கச் செய்தது.

குண்டோதரன், சற்று முன்னால் பயந்தவன் போல நடித்து 'உரல் உலக்கை' என்றெல்லாம் பேசியதையும், அதைக் கேட்டுத்தான் சிரித்ததையும் நினைத்தபோது உண்டான அவமான உணர்ச்சியானது புலிகேசியின் கோபத்திற்கு இன்னும் தூபம் போட்டது.

"அடே ஒற்றா! வாதாபிப் புலிகேசியுடனா விளையாடத் துணிந்தாய்? கொண்டு போங்கள் இவனை. இவனுடைய கண்களைப் பிடுங்கிவிட்டு, கழுத்தை வெட்டிக் கழுகுக்குப் போடுங்கள்!" என்று கர்ஜித்தான்.

இப்படிக் குரூரமான ஆக்ஞையிட்ட போது, புலிகேசியின் கழல் போலச் சிவந்த கண்கள் குண்டோதரனை உற்று நோக்கின. அவ்விதம் நோக்கிய கண்களில் திடீரென கோபம் தணிந்து, அளவில்லா ஆச்சரியத்தின் அறிகுறி தென்பட்டது.

ஏனெனில், குண்டோதரனை வீரர்கள் இழுத்துக்கொண்டு போக முயன்றபோது, அவனுடைய தலையானது விசித்திரமான சில சமிக்ஞைகளைச் செய்தது. உற்றுக் கவனித்த புலிகேசிக்கு, அந்தச் சமிக்ஞைகள் ஸ்வஸ்திகச் * சின்னத்தின் கோலமாக அமைந்தன என்பது தெரிய வந்தது. அதனாலேதான் அவனுடைய கண்களில் அத்தகைய வியப்புக் குறி தோன்றியது.

"நில்லுங்கள்!" என்று புலிகேசி மறுபடியும் கூவினான். "இந்த ஒற்றனிடம் நான் இன்னும் சில விஷயங்கள் கேட்க வேண்டும். இவனை இங்கேயே தனியாக விட்டு விட்டு மற்றவர்கள் கூடாரத்துக்கு வெளியே போங்கள்" என்று கட்டளையிட்டான்.

## ஆறாம் அத்தியாயம்

## பிக்ஷுவின் செய்தி


க்கரவர்த்தியின் கட்டளையைக் கேட்டதும் கூடாரத்திலிருந்த பலர் உடனே வெளியேறினார்கள். ஒற்றர் தலைவனும் இன்னும் சிலரும் வெளியேறுவதற்குத் தயங்கியபோது புலிகேசி அவர்களைக் கோபத்துடன் பார்த்து, "போங்கள்!" என்று கர்ஜனை செய்யவே அவர்களும் போய்விட்டார்கள்.

தனித்து நின்ற குண்டோதரனைப் பார்த்து, புலிகேசி சாந்தமான குரலில், "அப்பா நீ யார்? யாரிடமிருந்து வந்தாய்? அந்தரங்கச் செய்தி ஏதேனும் கொண்டு வந்திருக்கிறாயா?" என்று

* ஸ்வஸ்திகச் சின்னம் என்றதும், வாசகர்களுக்கு ஜெர்மனியில் நாஸிக் கட்சியின் சின்னமாக அது விளங்குவது ஞாபகம் வரும். ஆனால், ஹிட்லரைப் பார்த்துப் பூர்வீக இந்தியர்கள் காப்பியடிக்கவில்லை; அந்த நாளில் புத்தர்களும் ஜைனர்களும் சில சமயங்களில் ஸ்வஸ்திகச் சின்னத்தை உபயோகப்படுத்தினார்கள் என்பது சரித்திர ஆதாரம் பெற்ற விஷயம்.

கேட்டான்.

"ஆம், மகாப் பிரபு! பிக்ஷுவிட மிருந்துதான் வந்தேன். சேதி கொண்டு வந்திருக்கிறேன்" என்றான் குண்டோ தரன்.

"அப்படியா! என்ன செய்தி கொண்டு வந்தாய்?" என்று பரபரப் புடன் சொல்லிக் கொண்டே புலிகேசி சிம்மாசனத்திலிருந்து துள்ளிக் குதித்து எழுந்தான்:

"சீக்கிரம் சொல்லு! பிக்ஷு எங்கே இருக்கிறார்? சௌக்கியமாய் இருக் கிறாரா? ஏன் இத்தனை நாளாகச் செய்தி ஒன்றும் அனுப்பவில்லை? உன் னிடம் என்ன சொல்லி அனுப் பினார்?" என்று புலிகேசி சரமாரி யாய்க் கேள்விகளை அடுக்கினான்.

குண்டோதரனுடைய கண்களில் திடீரென்று கண்ணீர் பெருகிற்று. விம்முகின்ற குரலில் "சத்யாச்ரயா! என் குருநாதர் காஞ்சியில் பாஷாண்டிப் பல்லவனுடைய சிறையில் இருக் கிறார்!" என்றதும், புலிகேசி "ஆஹா! நான் உயிரோடிருக்கும்போது பிக்ஷு சிறையில் இருப்பதா? என்ன அவ மானம்! காவித் துணி அணிந்த பிக்ஷுவைச் சிறையில் இடும் அளவுக்கு மகேந்திர பல்லவன் அவ்வளவு நீச னாகி விட்டானா!" என்று சீறி னான்.

பிறகு, "எல்லாவற்றையும் விவர மாகச் சொல்லு! பிக்ஷு எப்படிச் சிறைப்பட்டார்? நீ எப்போது அவரைப் பார்த்தாய்? என்ன செய்தி சொல்லி யனுப்பினார்?" என்று கேட்டான்.

குண்டோதரன் சொன்னான்: "ஏழு நாளைக்கு முன்பு சென்ற வெள்ளிக் கிழமையன்றுதான் அவரைப் பார்த் தேன். மதத் துரோகியும், குருத் துரோ கியும், பாஷாண்டியுமான மகேந்திர பல்லவன் தனது இராஜ்யத்திலுள்ள புத்த பிக்ஷுக்களையெல்லாம் பிடித்து அடைத்து வைத்திருக்கும் சுரங்க மண்டபத்துக்குள்ளே பிக்ஷுவைப் பார்த்தேன். மன்னர் மன்னா! முதலில் புத்த பிக்ஷு சொல்லியனுப்பிய செய்தியைத் தங்களிடம் சொல்லி விடுகிறேன். அதுவரையில் இந்தப் பாழும் உயிருக்கு எதுவும் வந்து விடக் கூடாதே என்று எவ்வளவோ கவ லைப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆகா! சென்ற ஏழு நாட்களில் இந்த ஏழைக்கு எவ்வளவு ஆபத்துக்கள் வந்தன? என் குருநாதருடைய செய்தியைத் தங் களிடம் சொல்லி விட்டேனானால், அப்புறம் இந்த அற்ப உயிருக்கு என்ன நேர்ந்தாலும் கவலைப்பட மாட்டேன். தங்களை எப்படியாவது நேருக்கு நேர் தரிசித்து விட வேண்டுமென்று என்ன வெல்லாமோ யுக்தி செய்தேன். தங் களைத் தரிசிக்க வேறுவிதமாய் முடி யாதென்று எண்ணிக் காஞ்சியிலிருந்து வந்த நமது வீரர்களிடம் வேண்டு மென்றே அகப்பட்டுக் கொண்டேன். பிரபு! பிக்ஷு தங்களிடம் சொல்லும் படியாக முக்கியமாக நாலு செய்தி களைச் சொல்லியிருக்கிறார். அவற் றைக் கேளுங்கள்!" இத்தகைய பூர்வ பீடிகையுடன் குண்டோதரன் புத்த பிக்ஷுவின் நாலு செய்திகளையும் வரிசைக் கிரமமாகச் சொல்லத் தொடங்கினான்.

முதலாவது செய்தி, மதுரைப் பாண் டியனை நம்ப வேண்டாம் - என்பது. இந்த ஜயந்தவர்ம பாண்டியன்தான் பிக்ஷுவை மதுரையில் சிறைப்பிடித்து வைத்திருந்தவன். அச்சமயம் மகேந்திர பல்லவனுக்கும் ஜயந்தவர்மனுக்கும் ஏதேதோ அந்தரங்க ஓலைப் போக்கு வரவு நடந்தது. அவர்கள் இரண்டு பேரும் சேர்ந்து ஏதோ துரோகமாகச் சூழ்ச்சி செய்திருக்க வேண்டுமென்று பிக்ஷு கருதுகிறபடியால் பாண்டி யனிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டியது. அவனை முழுவதும் நம்பி எந்தக் காரியத்திலும் இறங்கிவிடக் கூடாது.

இரண்டாவது செய்தி, கங்க நாட்டுத் துர்விநீதன்தான் பிக்ஷுவை மகேந்திர பல்லவனுக்குக் காட்டிக் கொடுத்து,

காஞ்சியில் அவர் சிறைப்படுமாறு செய்தவன். புலிகேசியின் கண்ணில் மண்ணைத் தூவுவதற்காகப் பல்லவனுடன் சண்டை போடுவது போல் போட்டுவிட்டு, சைனியத்தோடு ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறான். புலிகேசி வாதாபிக்குத் திரும்பிப் போகாதபடி செய்துவிட்டால், தன்னுடைய மருமகன் விஷ்ணுவர்த்தனன் சளுக்க சாம்ராஜ்யத்தின் ஏக சக்கராதிபதியாகி விடுவான் என்று கங்க நாட்டான் அந்தரங்க ஆசை கொண்டிருக்கிறான். சமயம் நேர்ந்தால் துரோகி துர்வினீதனுக்குத் தக்க தண்டனை விதிக்க வேண்டும்.

மூன்றாவது முக்கியமான விஷயம் பிக்ஷு தெரிவிக்கச் சொன்னது என்னவென்றால், மகேந்திர பல்லவன் ஹர்ஷவர்த்தனச் சக்கரவர்த்திக்கு ஏதோ இல்லாததும் பொல்லாததும் எழுதி ஓலை அனுப்பியிருப்பதாகத் தெரிய வருகிறது. அதைப் பற்றிய உண்மையை தீர விசாரித்து உசிதப்படி செய்ய வேண்டும். மகேந்திர பல்லவன் குறைந்தது இன்னும் ஒரு வருஷத்துக்குக் கோட்டைக்குள்ளேயே கஷ்டமில்லாமல் இருக்க முடியும்; அவ்வளவு உணவுப் பொருள் சேகரித்து வைத்திருக்கிறான். இந்த நிலைமையில், காஞ்சி முற்றுகை மேலும் நீடித்துக் கொண்டிருப்பது உசிதமா, அல்லது மீண்டும் ஒரு தடவை கோட்டையைக் கைப்பற்ற முயல்வது நல்லதா என்று யோசித்துத் தீர்மானிக்க வேண்டும்.

நாலாவது எல்லாவற்றிலும் முக்கியமாகப் புத்த பிக்ஷு சொல்லியனுப்பிய விஷயம் இது! உத்தராபதத்துச் சக்கரவர்த்தி ஹர்ஷவர்த்தனர் சிற்பங்கள், சித்திரங்கள் முதலிய கலைகளில் அதிகப் பற்றுள்ளவர். தென் பல்லவ ராஜ்யத்தில் அநேக இடங்களில் சிற்ப சித்திரக் கலை மண்டபங்கள் இருக்கின்றன. மாமல்லபுரத்தில் மகேந்திர பல்லவன் ஹர்ஷவர்த்தனரை அழைத்துக் காட்டுவதற்காகவே அற்புத சிற்ப வேலைகளைச் செய்திருக்கிறான். இந்தச் சிற்ப வேலைகளுக்கு ஏதாவது சளுக்க வீரர்களால் கெடுதல் நேர்ந்ததாகத் தெரிந்தால், அதை மகேந்திர பல்லவன் தனக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்வான். ஹர்ஷவர்த்தனருடைய விரோதத்துக்குச் சளுக்கர் குலம் ஆளாக வேண்டி நேரும். ஆகையால், பல்லவ நாட்டுச் சிற்பங்களுக்கோ சிற்பிகளுக்கோ சளுக்க வீரர்களால் எவ்விதக் கெடுதலும் நேராதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

மேற்கூறிய நாலு செய்திகளையும் தட்டுத் தடுமாறிச் சொல்லிவிட்டு, "என் குருநாதருக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றிவிட்டேன். இனிமேல் என் உயிரைப் பற்றிக் கொஞ்சமும் கவலை இல்லை!" என்று கூறி, குண்டோதரன் விம்மி அழத் தொடங்கினான்.

"அடே! நீ என்னத்திற்காக அழுகிறாய்?" என்று புலிகேசி கேட்டபோது, குண்டோதரன், "ஐயா! சளுக்கர் சைனியம் என்றைக்குக் காஞ்சிக் கோட்டை மதிலைத் தாண்டி உள்ளே பிரவேசிக்கிறதோ, அன்றைக்கே சிறைப்பட்டிருக்கும் புத்த பிக்ஷுக்கள் எல்லோரையும்



கழுவில் ஏற்றி விடுவதாக மகேந்திர பல்லவன் சொல்லியிருக் கிறானாம். இதைத் தங்களிடம் சொல்ல வேண்டா மென்று பிக்ஷு சொன்னார். ஆனாலும், தங்களிடம் சொல்லாமலிருக்க எனது மனம் கேட்கவில்லை. என் குருநாதர் நான் பிறந்து வளர்ந்த காஞ்சி நகரின் நாற்சந்தியில் கழுவில் ஏற்றப்பட்டு காக்கை கழுகுகளால் கொத்தப்படுவார் என்பதை நினைக்கும் போது, எனக்குத் தாங்க முடியாமல் அழுகை வருகிறது!'' என்றான்.

சற்று நேரம் ஆழ்ந்த சிந்தனையில் இருந்து விட்டுப் புலிகேசி குண்டோதரனைப் பார்த்து, "நீ எப்படிப் பிக்ஷுவைச் சந்தித்தாய்? எப்படிக் கோட்டைக்கு வெளியே வந்தாய்?'' என்று கேட்க, குண்டோதரன் திருப்திகரமான மறுமொழி அளித்தான். பிக்ஷுவின் யோசனைப்படி தான் பல்லவ ஒற்றர் படையில் சேர்ந்திருப்பதாகவும், அதனால் காஞ்சிக் காராக்கிருகத்தில் அடைக்கப்பட்டிருக்கும் புத்த பிக்ஷுக்களுடன் பேசித் துப்பு அறிவதற்காகத் தன்னை நியமித்திருந்ததாகவும், அதிர்ஷ்டவசமாகப் பாண்டியனுக்கு ஓலை கொண்டு வரும் வேலை தனக்குக் கிடைத்ததென்றும், கோட்டைக்கு வெளியே வருவதற்கு இரகசியச் சுரங்க வழி இருக்கிறதென்றும், அந்த வழியாகத்தான் வந்ததாகவும், பாண்டியனிடம் ஓலையைச் சேர்ப்பிக்கும் எண்ணமே தனக்குக் கிடையாதென்றும் கூறினான்.

அதன்மேல் புலிகேசி, ''திரும்பப் பிக்ஷுவிடம் போய்ச் செய்தி சொல்ல உன்னால் முடியுமா?'' என்று கேட்டான்.

"பிரபு! திரும்பிச் செல்வது என் உயிருக்கு அபாயம். இருந்தாலும் இந்த உயிரைப் பற்றி இனிமேல் எனக்கு என்ன கவலை? தாங்கள் போகச் சொன்னால் போகிறேன்'' என்றான் குண்டோதரன்.

''ஆம், அப்பா! நீ கட்டாயம் திரும்பிப் போக வேண்டும். போய் பிக்ஷுவிடம் இன்னும் பத்து நாளைக்குள் காஞ்சிமா நகரில் அவரை நானே நேரில் பார்ப்பதாகச் சொல்ல வேண்டும். எது நேர்ந்தாலும் என்ன கேள்விப்பட்டாலும் அவர் கொஞ்சமும் கலங்க வேண்டாமென்றும், எல்லா விவரங்களையும் நேரில் சொல்லுவதாகவும் கூற வேண்டும். உன்னால் முடியுமா?'' என்று புலிகேசி கேட்டான்.

பிக்ஷுவைப் பத்து நாளில் நேரில் பார்க்கப் போவதாகப் புலிகேசி சொன்னவுடன், குண்டோதரனுக்கே உண்மையில் தூக்கி வாரிப் போட்டது. அவன் முகத்திலும் கண்களிலும் என்றும் கண்டிராத ஆச்சரியத்தின் அறிகுறி காணப்பட்டது!

மேற்கூறிய சம்பாஷணை நடந்து ஒரு வாரத்திற்குப் பிறகு காஞ்சிமா நகரின் தெற்குக் கோட்டை வாசலையும் மதிலையும் காவல் புரிந்த வீரர்கள் எல்லாம் குண்டோதரனைப் போலவே ஆச்சரியக் கடலில் மூழ்கினார்கள். ஏனெனில், அந்தக் கோட்டை வாசலுக்கு எதிரே அகழிக்கு அக் கரையில், வராகக் கொடி பிடித்த தூதர்கள் இருவர் குதிரை மேல் நிராயுத பாணிகளாக வந்து நின்று, தாங்கள் கொண்டு வந்திருந்த கொம்பை வாயிலே வைத்து, 'பூம், 'பூம்', 'பூம்' என்று ஊதினார்கள். அவர்களுடைய தோற்றமும், அந்தக் கொம்பின் முழக்கமும் அவர்கள் சமாதானத்தை நாடி வந்திருக்கும் புலிகேசியின் தூதர்கள் என்பதை எடுத்துக் காட்டின.

''ஆஹா! இதென்ன விந்தை! வாதாபிச் சக்கரவர்த்தியா சமாதானத்

# அருள்வாக்கு

கோயில்களின் சூழ்நிலை அமைதியாக, தூய்மையாக இருக்க வேண்டும். பகவத் ஸ்மரணை தவிர மற்ற நினைவுகள் மறந்து விடும்படியாக இருக்க வேண்டும். ஆனால் இப்போது என்ன பார்க்கிறோம்? பெரும்பாலான க்ஷேத்திரங்களில் கோயிலைச் சுற்றி ஏகப்பட்ட கடைகள் வந்துவிட்டன. டீக்கடை, சிகரெட் கடை எதுவுமே பாக்கியில்லை. கோயில் அதிகாரிகளே கோயிலுக்கு வருமானம் கிடைக்கிறது என்பதால் இந்த இடங்களை வாடகைக்குக் கொடுக்கிறார்கள். அதாவது, அநேகமாக ஸ்வாமியைத் தவிர கோயிலையே வாடகைக்குக் கொடுத்திருப் பதாகச் சொல்லலாம். இம் மாதிரியான சூழ்நிலையில் தெய்வ சாந்நித்தியத்தை நாம் கிரகித்துக் கொள்கிற சக்தி குறைகிறது. நம் பக்தி சுற்றுச் சூழலால் குறைகிறது.



ஆபீஸ் கட்டடங்கள், 'காட்டேஜ்'கள் எல்லாம் இப்போது பல க்ஷேத்திரங்களில் ஏராளமாக முளைத்துவிட்டன. அங்கெல்லாம் தெய்வ சம்பந்தமற்ற காரியங்கள் நிறைய நடக்கின்றன. இது சாந்நித்தியத்தைப் பாதிக்கிறது. ஏதோ எட்டாக் கையில் இருக்கிற கோயில்களில்தான் விச்ராந்தியான சூழல் இருக்கிறது. அபிவிருத்தி என்ற பெயரில் இவற்றிலும் அதிகாரிகள் அநாசாரத்தைப் புகுத்தி விடப் போகிறார்களே என்று பயமாக இருக்கிறது.

இப்போது கோயில்களுக்குத் தனித்தனி நிர்வாகம் இல்லாமல் ஒரே சர்க்கார் நிர்வாகத்தில் இருப்பதால் அவர்களுக்குப் பொதுஜனங்கள் எடுத்துச் சொல்ல வேண்டும். துரதிருஷ்டவசமாக, ஆலய ஆபீசர்கள் ஏதாவதொரு நல்ல காரியத்தை ஆரம்பித்து முடிக்குமுன்பே வேறு ஊருக்கு மாறறப்பட்டு விடுகிறார்கள். 'செய்கிற காரியத்தைப் பூர்த்தி செய்து பலனைப் பார்க்கலாம்' என்கிற உற்சாகம் இருந்தால்தான் அதிகாரிகளிடமிருந்து சிறப்பான பணியை எதிர்பார்க்க முடியும்.

ஆலயங்களின் உட்புறமும், சூழ்நிலையும் சுத்தமாக இல்லாத வரையில் ஆஸ்திக காரியம் எத்தனைதான் நடந்தாலும், எத்தனை கும்பாபிஷேகங்கள் நடந்தாலும், நாம் திருப்திப்படுவதற்கில்லை. கும்பாபிஷேகத்துக்கு அப்புறம் சாந்நித்யம் நிலைத்திருக்க வழி பண்ணாவிட்டால் என்ன பிரயோஜனம்? பிரஜைகள் இவ் விஷயத்தில் தீவிரமான கவனம் செலுத்தினால், அதிகாரிகளுக்கும் சர்க்காருக்கும் பொறுப்புணர்ச்சி அதிகரித்து ஆவன செய்வார்கள். பொதுமக்களின் ஏகோபித்த அபிப்பிராயத்துக்கு (Public opinion) அதிக சக்தி உண்டு.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

தூது அனுப்பியிருக்கிறார்? இது கனவா, நனவா?'' என்று காஞ்சிக் கோட்டையைக் காவல் புரிந்த பல்லவ வீரர்கள் அளவில்லா வியப்பை அடைந்தார்கள். நம்ப முடியாத அந்த அதிசயச் செய்தியானது, அதி சீக்கிரத்தில், மந்திராலோசனை மண்டபத்தில் இருந்த மகேந்திர பல்லவரைச் சென்றடைந்தது.

(தொடரும்)

★ "சில அமைச்சர்களின் செயல்பாடுகள் திருப்திகரமாக இல்லை" என்று ஜெயலலிதா வெளிப்படையாகச் சொன்ன பிறகு பல சீனியர் அமைச்சர்களுக்கும் வயிற்றில் புளியைக் கரைத்திருக் கிறது. பொன்னையன், தம்பிதுரை, ஜெயக்குமார் போன்றவர்கள் கூட தங்கள் பதவிகள் ஆட்டம் காணுமோ என்று அஞ்சிக் கொண் டிருக்கிறார்களாம்! இந்தச் சந்தர்ப்பத்தில் காளிமுத்து 'உள்ளே' வருவதற்கான வாய்ப்பும் அதிகரித்திருக்கிறதாம். பொன்னையன் சபாநாயகராக பொறுப்பேற்கக் கூடும் என்கிறார்கள்.



★ சோனியாவை எதிர்த்துப் பாரதிய ஜனதா அல்லாத மற்றும்

# அம்மாவோடு அட்ஜஸ்ட்மெண்ட்!



காங்கிரஸ் அல்லாத அரசை மத்தியில் அமைக் கப் பாடுபடப் போவதாக ஜெயலலிதா சொன்னது மாநிலத்தில் உள்ள மூத்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகளிடை யேயும் பதற்றத்தை ஏற் படுத்தியுள்ளது. "முதல் வருடைய அரசியல் ஆசை மிகவும் பெரியதாக இருக் கலாம். ஆனால் ஒரே சம யத்தில் ஏகப்பட்ட எதிர்ப் புக்களை உண்டாக்கிக் கொள்கிறாரே" என்று ஆதங்கப்படுகிறார்கள்.

★ சோனியா, ஜெய லலிதா கலாட்டா ஒரு புறம் இருக்க, தமிழகத்தில் நன்றாகக் காலூன்றிக் கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிறது பா.ஜ.க. தமிழ்நாட்டில் சமீபத்தில் பல மாவட்டங்களில் ஊழியர்களுக்கு இரண்டு நாள் பயிற்சி முகாம் நடந்தது. அந்த முகாம்களில் மிகக் கடுமையான கட்டுப்பாடுகள். ஒருமுறை உள்ளே சென்றவர்கள் மீண்டும் வெளிவர முடியாது. செல்போன் பயன்படுத்தக் கூடாது. 'பாடத்திட்டத்தில் தமிழ் இலக்கியத்தில் தேசியம்' என்பதும் உண்டு. இந்தப் பயிற்சி முகாம்களில் சொல்லப்பட்ட ஒரு செய்தி : கூடிய மட்டும் லோக் கல் அ.தி.மு.க. பிரமுகர்களை அனுசரித்துப் போகவும்.

• திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலின் முன் உயர்கம்ப ஒளி விளக்குகள் அமைக்கப்பட்டன. சட்ட மன்ற உறுப்பினர் தொகுதி மேம்பாட்டு நிதியிலிருந்து இதற்குப் பணம் செலவு செய்யப் பட்டுள்ளது. 'தான் வராமல் விளக்கு களை இயக்கி வைக் கக் கூடாது' என்று துணை மேயர் பயமுறுத்தியும் எது வேண்டுமானாலும் நடக்கட்டும் என்று தைரியமாக எம்.எல்.ஏ. உசேன் அதனை இயக்கி வைத்தார். இதில் ஆச்சரியம் என்ன வென்றால் ஒளி விளக்கை நிர் மாணித்த ஒப்பந் தக்காரரை, அந்த நிகழ்ச்சியில் தான் உசேன் சந்தித்தார். நிதியை ஒதுக்கி விட்டு ஒதுங்கி விட்டார் உசேன். சபாஷ்!

— சஞ்சயன்



விழுந்தவை

# சிலைவலி தலைவலி!







கண்ணகி சிலையை, தேனாம்பேட்டையில் வைக்கப் போவதாகக் கலைஞர் அறிவித்திருக்கிறார். தமிழ்நாட்டு அரசியல் புள்ளிகளின் கருத்து என்ன என்று கற்பனையிலாவது பார்க்க வேண்டாமா?







கண்ணகி சிலையை இப்போது
ஜெயலலிதாவின் போயஸ் தோட்ட
வீட்டு வாசல் முன்னால் வைப்பதுதான்
பொருத்தமாக இருக்கும். தினமும்
அதைப் பார்த்தாவது நியாய -
அநியாயம் எது என்று புரிந்து
கொண்டு முதல்வர் பேசுவார்.


கையில் சிலம்பு
வைத்திருப்பவர் எல்லாம்
கண்ணகி ஆகிவிட முடியாது.
காலில் செருப்புப் போட்டவர் எல்லாம்
காமராஜர் ஆகிவிட முடியாது.
கண்ணகி சிலை, கண்ணகியைப்
பார்த்து வடித்ததுதானா என்று நிச்சய
மாகத் தெரியாத போது, அவரிட
மிருந்தோ, அவர் கணவர்
கோவலனிடமிருந்தோ எழுத்து
மூலமாகக் கடிதம் வந்த பிறகே
என் முடிவை அறிவிக்க
முடியும்.


யாரோ ஒரு கண்ணகிக்குப்
போய்ச் சிலை வைக்க, ஏன் இத்தனை
அவசரப்படுகிறார்கள் என்று எனக்குப்
புரியவில்லை. அதனால் பிரபாகரனைப்
பிடித்து வர முடியும் என்றால்,
ஜனதா கட்சியின் லட்சக் கணக்கான
உறுப்பினர்கள் அதை
ஆதரிப்பார்கள்.


இந்தச் சிலை வைக்கிற
விவகாரமே எனக்கு உடன்பாடு இல்லே.
இப்போ இருக்கறபடி மியூசியத்துலயே
இருந்துட்டா, என்ன குடிமுழுகிடும்?

கற்பனை : சித்தார்த்



• கன்னட நாடக உலகின் பிதா மகர் என அழைக்கப்படும் 74 வயதான பி.வி. காரந்த் அண்மையில் காலமானார். கான்ஸரினால் ஒரு சில வருடங்கள் அவதியுற்று பத்து நாட்களுக்கு முன்னால் மிகவும் மோசமான நிலையில் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். பல விருதுகள், கௌரவங்களைப் பெற்றவர். பத்மஸ்ரீ, காளிதாஸ் சம்மான், சங்கீத நாடக அகாதமி விருது, குப்பி வீரண்ணா விருது... என கணக்கிலடங்கா விருதுகளைப் பெற்றவர். கன்னடம், ஹிந்தி, இன்னபிற மொழிகளிலும் நாடகங்களைத் தயாரித்து அளித்தவர்.

இவருடைய மனைவி ப்ரேமா காரந்தும் சினிமா நாடக தயாரிப்பாளர். காரந்த் பாடிய 'கஜவதனா ஹேரம்பா' என்ற பாடலுக்கு இன்றளவும் விசிறிகள். இன்றைக்கும் ஒவ்வொரு நாடகம் தொடங்கும் முன் இப்பாட்டை முதலில் பாடி விட்டுத்தான் ஆரம்பிக்கிறார்கள்.

கடைசிவரை நாடகத்திற்கெனவே பாடுபட்ட காரந்தை நாடக உலகம் என்றுமே மறக்காது!

# போலீஸ்காரர்களைப் புரட்டிய அம்மணி!



• ஸ்வேதா

• மாடல் ஸ்வேதா ஜெய்சங்கருக்கும் டென்னிஸ் வீரர் மகேஷ் பூபதிக்கும் 'லவ்-ஆல்' என்பது உலகம் அறிந்த சங்கதி. நவம்பர் - 24ல் திருமணம் செய்து கொள்ளப்போகிறது இந்த லவ் ஜோடி. ஷாப்பிங் மும்முரமாக நடந்து கொண்டிருக்கிறது. "எங்கள் ஐயர் சம்பிரதாயப்படி அரக்கு கலர் ஒன்பது கஜப் புடைவை நல்லியில் வாங்கியிருக்கிறேன். பெங்களூரில் சர்ச்சில் திருமணம் நடக்கவிருப்பதால் கவுனும் வாங்கியிருக்கேன். மகேஷ் கிறிஸ்துவரல்லவா" என்கிறார் ஸ்வேதா. கவுனை டிஸைன் பண்ணியிருப்பவர் பிரபல ஃபேஷன் டிஸைனர் ஹேமந்த் திரிவேதி. "என் மாடல் உலகத் தோழிகள், பலர் கலந்து கொள்ள இருக்கிறார்கள். பார்ட்டி, டான்ஸ், பாட்டு என கலக்கப் போகிறார்கள்...'' என உற்சாகம் கொப்பளிக்கச் சொல்கிறார் மணமகள் ஸ்வேதா. அட்வான்ஸ் வாழ்த்துகள் ஸ்வேதா!

• முன்னாள் மத்திய அமைச்சர் பாபாகௌடா பாட்டீலின் மனைவி சுமித்ரா பாட்டீல் என்றாலே இனி போலீஸ் கான்ஸ்டபிள்கள் நடுங்கப் போகிறார்கள். மாண்புமிகுவின் மனைவி பெல்காமில் நூற்றுக்கணக்கான பேருக்கு எதிரே இரு கான்ஸ்டபிள்களை தம் கால்களில் விழுந்து மன்னிப்பு கேட்க வைத்திருக்கிறார். அவர்களுடைய தவறு என்னவென்றால் வாலிபால் மாட்சில் மந்திரி குமாரனை அடித்துவிட்டதுதான்! முதலில் அமைச்சர் சம்சாரம் சரமாரியாக குத்துகள் விட்டாராம். பிறகு மன்னிப்பு கேட்டு காலில் விழுமாறு வற்புறுத்தினராம். வாலிபால் மாட்சுக்கு இளவல் பார்வத கௌடா பாட்டீல் போயிருக்கிறார். அங்கு இரண்டு அணிகளுக்கிடையே தகராறு. அதில் சண்டையை அடக்குவதற்கு கான்ஸ்டபிள்கள் பார்வத கௌடாவைத் தட்டியிருக்கிறார்கள். விஷயம் தெரிந்து தாயுள்ளம் தவித்து, கூடவே ஐந்தாறு பெண்மணிகளையும் அழைத்துக்கொண்டு சம்பந்தப்பட்ட கான்ஸ்டபிள்களைப் புரட்டி எடுத்து விட்டாராம் சுமித்ரா பாட்டீல். விஜயசாந்தி சினிமா நிறைய பார்ப்பாரோ?

— லதா சேகர்,
பெங்களூர்.

• நாயர்



ஒரு பெண்ணின் சோகக் கதை என்றால் என்னவெல்லாம் இருக்க வேண்டும்?

முதலில் அந்தப் பெண்ணுக்கு அப்பா இருக்கக் கூடாது; அடுத்து, அம்மா படுத்த படுக்கையாய், ப்ளட் கான்சர் போன்ற கொடிய நோயால் அவதிப்பட வேண்டும்; கஷ்டப்பட்டு இரண்டு, மூன்று பெண்களுக்குத் திருமணம் செய்திருக்க வேண்டும்; ஒரே அண்ணன், வியாபாரம் படுத்து, எழுவதற்கே திண்டாட வேண்டும்; குட்டித் தம்பி, டாக்டர், என்ஜினியர் கனவுகளுடன் வளைய வர வேண்டும்... சரிதானே?

# கொதிக்கிறார்



• மனிஷா

“இதில் தரக்குறைவாக எதுவுமில்லை; கதையை ஒட்டியே சம்பவங்கள் நிகழ்கின்றன; எதுவும் திணிக்கப்படவில்லை; சென்சார் ஓகே என்ற பிறகு வாதத்திற்கே இடமில்லை”

அத்தனையும் ஓகே; அப்படியே பொருந்தியிருக்கிறது ஜெஸிகா சோக்ஸுக்கு. இன்று வீரப்பனால் கடத்தப்பட்ட நாகப்பனின் சோகக் கதையைக் காட்டிலும், மனிஷா கொய்ராலாவால் வஞ்சிக்கப்பட்ட இந்த ஜெஸிகாவின் கண்ணீர்க் கதைதான் மும்பையில் பிரபலம்!

ஜெஸிகா என்றாலே நடுக்கமாகத்தானிருக்கிறது; முன்பு டில்லியில் நடந்த ஜெஸிகாலால் கொலை வழக்கில், ஃபாஷன் வர்ல்ட்டின் பிரபலங்களெல்லாம் மாட்டிக்கொண்டு தவித்தனர். இன்று இந்த ஜெஸிகா சோக்ஸியின் வழக்கில் பாலிவுட் பிரபலங்கள் தவிக்கின்றனர்.

ஒன்றுமில்லை, ‘ஏக் சோடீஸி லவ் ஸ்டோரி’ எனும் இந்தித் திரைப்படத்தை சஷிலால் நாயர் தயாரித்தார். அதில் மனிஷாதான் கதாநாயகி; சில இன்றியமையாத அந்தரங்க காட்சிகளை (அஃப் கோர்ஸ்... கலையழகுடனில்லாமலிருக்குமா?) மனிஷாவின்

ஒப்புதலுடன், ஜெஸிகாவை வைத்து 'ஷுட்' செய்திருக்கிறார் நாயர். படத்தை சென்சார் போர்டு க்ளியர் செய்துவிட்டது. படம் வெளி வரும் தருவாயில் மனிஷா குய்யோமுய்யோ என்று குதித்தார்.

"டூப் போட்டு எடுத்துள்ள காட்சிகள் தரமற்றவை; அவை என் புகழுக்கு இழிவைத் தேடித் தரும்; உடனடியாக அக் காட்சிகளை நீக்க வேண்டும்" என்று வழக்குத் தொடுத்தார். இடையே சஷிலால் நாயர், "மனிஷா மிகவும் குண்டாகிவிட்டதால் சில காட்சிகளில் ஜெஸிகாவைப் பயன்படுத்த வேண்டி இருந்தது. அவர் இருமுறை படத்தைப் பார்த்து ஓ.கே செய்தபின்தான் நான் சென்சாருக்கே அனுப்பினேன்" என்று கூறியது மனிஷாவை மிகவும் வேதனைப்படுத்தியது.

"தோல்விக்கு மேல் தோல்வி என்று துவண்டு போய்க் கிடந்தார் இந்த மனிதர்;

# மனிஷா!

நட்புக்காக, காசு கூட வாங்கிக் கொள்ளாமல், படம் நன்றாக ஓடினால் பணம் தாருங்கள் என்று தாராள மனத்துடன் நடித்துக் கொடுத்தேன்; என்னை 'குண்டு' என்று சொல்ல இவர் யார்? வேண்டுமென்றே என்னை வம்புக்கிழுக்கிறார்கள்" என்று கொதித்தார். கோர்ட்டுக்குப் போனார்.

ஜஸ்டிஸ் ரிபெல்லோ இந்தப் படத்தை ஒருமுறை, லிபர்டி மினி தியேட்டரில் திரையிடச் செய்து, ஸ்பெஷலாகப் பார்வையிட்டார். பார்த்தவர், "இதில் தரக்குறைவாக எதுவுமில்லை; கதையை ஒட்டியே சம்பவங்கள் நிகழ்கின்றன; எதுவும் திணிக்கப்படவில்லை; சென்சார் ஓகே என்ற பிறகு வாதத்திற்கே இடமில்லை" என்று விட்டார். மனமுடைந்த மனீஷா, "சுப்ரீம் கோர்ட் வரை செல்வேன்" என்றார். இப்போது தாக்கரேவிடம் முறையிட்டிருக்கிறார்.

இதற்கிடையில் ஜெஸிகாவின் சோகக் கதைகளைப் பத்திரிகைகள் வெளியிட்டன. "என் அம்மாவின் மருந்து செலவுகளைச் சமாளிக்கவே நான் இப்படி நடிக்க ஒப்புக் கொண்டேன்; இரண்டு மணி நேரத்துக்குப் பன்னிரண்டாயிரம் தந்தார்கள்; நான் மாடலிங் செய்து கொண்டும், டீவி சீரியல்களில் நடித்துக் கொண்டும்தான் காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தேன். ஆனால் இந்த வாய்ப்பைத் தட்ட முடியாமல் வறுமை வாட்டியது; அப்படி ஒன்றும் மனிஷா குற்றம் சாட்டுவதுபோல் காட்சிகள் படுமோசமாக இல்லை; என்னாலும் முன்னுக்கு வந்து காட்ட முடியும்! இந்த விஷயம் வெளியே தெரிந்து விட்டதால் எத்தனை நெகடிவ் பப்ளிசிடி! முதலில் குன்றிப் போய்விட்டேன். ஆனால் இப்போது தெளிந்து விட்டேன்; நான் எந்தப் பாபமும் செய்யவில்லை; என் பாய்ஃப்ரண்ட் அதைப் புரிந்து கொண்டிருக்கிறான்" என்கிறாள் இந்த பதினெட்டு வயது காலேஜ் ட்ராப் அவுட்.

மனிஷா கொய்ராலாவுக்கு ஆதரவாக பாலிவுட் நட்சத்திரங்கள் குரல் கொடுக்க, கடைசியில் நாயரும், கொய்ராலாவிடம் மன்னிப்பு கோரியிருக்கிறார்.

— ஜெ. ஆர்.

• ஜெஸிகா





* அவசரத்தை ஏற்காமல்...

● வி. இலக்குவன், கும்பகோணம்

? குஜராத் தேர்தல் விஷயத்தில் தேர்தல் கமிஷனுக்கு எதிராக வாஜ்பாய் செயல்படுவது சரியா...?

! சரியல்ல என்று உச்சநீதிமன்றமே தீர்ப்பளித்து வரலாறு படைத்துவிட்டது. வரவேற்க வேண்டிய தீர்ப்பு. இனியாவது மோடியை வீட்டுக்கு அனுப்பி, ஜனாதிபதி ஆட்சியை மத்திய அரசு பிறப்பிக்கட்டும்.

● கு. கணேசன், பனங்கோட்டூர்

? பதினாறு மாதங்களில் பதினேழு மந்திரிகளை மாற்றியுள்ள ஜெயலலிதாவின் சாதனை குறித்து...?

# ~~கா~~ தமிழ்நாட்டுக்கு

## நீங்கள் கேட்டவை -துராசு

● எஸ்.கோவிந்தராஜன், கோவை - 9

? எதிரிகளை எப்படியாவது ஒடுக்குவதில் காட்டும் அக்கறையை, நிதிநிலையைச் சீர்செய்வதிலும் மக்களின் துன்பத்தை நீக்குவதிலும் சிறிதளவுகூட ஜெயலலிதா காட்டுவதில்லையே?

! ரொம்பப் படித்திருந்தும்கூட governing என்பது வேறு politics என்பது வேறு என்பதை அவர் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. பதவியில் அமர்ந்த பிறகு அரசியல் பண்ணாமல் ஆட்சி பண்ணினால்தான் நிலைமை சீராகும்.

● து. ஆனந்திராஜா, மணப்பாறை

? அறிவுள்ளவர்களுக்கு மட்டுமே பாபா படம் பிடிக்கும் என்ற தோரணையில் விமர்சனம் செய்கிறார்கள் 'சன்' டி.வி.யில். உங்களுக்கு ஏதாவது புரிகிறதா...?

! அட விடுங்க சார்! யானைக்கும் அடி சறுக்கும். இன்னொன்று கவனித்தீர்களா..? பாபா பிரமாத ஹோஹோ வெற்றி அடைந்திருந்தால், ரஜினி ரிடயர் ஆகியிருக்கலாம். இப்போது முடியாது பாருங்கள்! எனவே அவர் ரசிகர்கள் மகிழலாம்.



* படித்தும் புரியாமல்...

! ஏதோ இந்த சாதனையாவது இருக்கிறதே என்று ஆறுதல் அடையவும். தகுதியைத் தவிர வேறு காரணங்களுக்காக மந்திரி பதவிகள் தரப்படும்போது இதை எதிர்பார்க்க வேண்டியதுதான்.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21

? 29.08.02 அன்று சென்னை மாநகராட்சி கூட்டத்தில் நடந்த ரணகளத்தின் இடையே நாற்பது தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டிருப்பது எதைக் காட்டுகிறது?

! ஜனநாயக மரபுகள் மட்டுமின்றி ஜனநாயக உணர்வுகளே செத்து விட்டதை!



* 'அரசை நம்பாமல்...!'

● கோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை

? தேர்தல் சீர்திருத்த அவசர சட்டத்திற்கு ஜனாதிபதி ஒப்புதல் அளித்திருப்பது சரியா? தவறா?

! அவர் எங்கே ஒப்புதல் அளித்தார். திருப்பியல்லவா அனுப்பினார். அதற்கு மேல் செய்ய அவருக்கு அதிகாரமில்லை. அரசுதான் நாட்டின் முதல்குடிமகன் ஆட்சேபிக்கிறாரே என்று யோசித்து மறுபரிசீலனை செய்ய வேண்டும். ஆனால் ஊழலை வாழவைக்கிற சட்டத்தை அப்படியெல்லாம் மறுபரிசீலனைக்கு உட்படுத்த நம் அரசியல்வாதிகளுக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது?

● வி. ரூபஸ், கோவை

? காவிரி ஆணையக் கூட்டத்திலிருந்து ஜெயலலிதாவின்

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
எஸ். கோவிந்தராஜன், கோவை - 9

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
புலவர் கணேசன்,பொறையாறு - 609 307

*வெளிநடப்பு பற்றி...?*

! அவர் கோபம் நியாயமானதுதான். காவிரி ஆணையக் கூட்டத்தில் தமக்கு நியாயம் கிடைக்காது என்று அவர் எண்ணியது மெய்யாகியது. அடுத்து, உச்சநீதிமன்றம் காவிரி நதிநீரை ஒரு நாளைக்கு 1.25 டி.எம்.சி. வீதம் தமிழகத்துக்குத் திறந்து விடுமாறு ஆணை பிறப்பித்தது, அதை மேலும் உறுதி செய்கிறது. ஆனபோதிலும்கூட, பிரதமர் பங்கேற்கும் ஒரு கூட்டத்தில் முதல்வர் இன்னும் சற்று பண்போடு நடந்து கொண்டிருக்கலாம் என்பதையும் மறுப்பதற்கில்லை.

**● புலவர் கணேசன், பொறையாறு ★**

***? காங்கிரஸ் கட்சியில் தலைவர்களுக்கும் கோஷ்டிகளுக்கும் பஞ்சமில்லை; ஆனால் தொண்டர்களுக்குத்தான் பஞ்சம் என்ற நிலை எப்போது மாறும்?***

# வீரப்பனை முதல்வராக்கலாமா?

! உறுப்பினர் அட்டைகள் சீராக வழங்கி, உட்கட்சித் தேர்தல்கள் நடத்தப்படும்போது.

**● ஜி.ஜி. சரவணன், மயிலாடுதுறை**

***? மக்களால் பெரிதும் மதிக்கவும் போற்றவும் படுகின்ற ஆன்மிகம், ஒரு மந்திரி பதவி இழக்கக் காரணமானது குறித்து என்ன நினைகிறீர்கள்?***

! ஆன்மிகம் என்பது, பரம்பொருளிடத்தில் வைக்கும் ஆழ்ந்த நம்பிக்கை. அமைச்சரைப் பதவியிழக்கச் செய்தது ஆன்மிகம் அல்ல; அபாயமான, அபத்தமான சடங்குகளில் ஈடுபடச் செய்கிற மூட நம்பிக்கை.

**● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

***? அரசு இயந்திரம் என்பது செக்குமாடு போன்றது. அதை நம்பினால் மக்களுக்கு ஒரு நன்மையும் கிடைக்காது என்று காளிமுத்து கூறியது சரியா சார்...?***

! காளிமுத்துவின் கருத்து சரியானது. எல்லாவற்றுக்கும் அரசாங்கத்தையே நம்பிக் கொண்டிராமல் மக்கள் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதுதான் நல்லது. அரசாங்கத்தின் பொறுப்பும் செயல்பாடுகளும் அடிப்படை வசதிகளையும் உரிமைகளையும் அளிப்பதோடு நிற்க வேண்டும். ஆனால், அ.தி.மு.க. உள்பட எந்த அரசுமே அப்படி நடந்து கொள்ளாமல், மக்களின் எதிர்பார்ப்பை ரொம்ப வளர்த்து விட்டார்களே. இப்போது பின்வாங்க முடியாத நிலை உருவாகிவிட்டதே!



**● டி. ஜெய்சிங், கோவை**

***? தமிழ்நாட்டிலுள்ள காட்டுப் பகுதியைத் தனியாக்கி, அதன் முதல்வராக சந்தன வீரப்பனை நியமித்தால், அரசுக்குத் தொந்தரவு குறையுமல்லவா?***

! கொஞ்சம் இருங்க; ராமதாஸைக் கேட்டுச் சொல்லறேன்!

**● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.**

***? கருணாநிதிக்கும் வீரப்பன் கும்பலுக்கும் உள்ள மர்ம உறவுகள் குறித்த உண்மை விரைவில் வெளியாகும் என முதல்வர் ஜெயலலிதா அறிக்கை விடுத்துள்ளது பற்றி...?***

! கருணாநிதி பெங்களூர் சென்றதும் கோவா போனதும் வீரப்பன் கும்பலுடன் பேசத்தான் என்று வேறு சரடு விட்டிருக்கிறார்! நிஜமாக இருக்குமாயின் ஆதாரங்களோடு நிரூபித்து நல்ல பெயர் வாங்கிக் கொள்ளலாமே! ஆனால், அவ்வப்போது மிரட்டி, அரசியல் ஆதாயம் தேடிக் கொள்வதுதான் ஜெ. பாணி.



• இனியேனும் தாமதியாமல்...

• தோற்றும் துவளாமல்...



ஏதோ ஒரு ஜென்மத்தில் ஒரு காலிழந்த பிச்சைக்காரனுக்கு நான் கால் ரூபாய் தருமம் பண்ணியிருக்க வேண்டும். அந்தப் புண்ணியத்தில் ரயிலில் ஜன்னலோரமாய் ஒரு சீட், எந்த ஆக்கிரமிப்புக்கும் உட்படாமல் கிடைத்துவிட்டது. அப்போதும் நம்ப முடியாதவனாய், பக்கத்தில் இருந்தவரிடம் சந்தேகமாய் விசாரித்தேன், 'யாராவது வர்றாங்களா சார்?'

"யாரும் வரலை; உட்கார்ந்துக்கோங்க" என்று சொல்லிவிட்டு வள்ளல் போல் சிரித்தார். தொப்பென்று என்னுடைய பையை அந்த இடத்தில் போட்டேன். கடவுளுக்கு நன்றி!

பெட்டிக்குள் நுழைவதற்கு நாயாய், பேயாய் அடித்துக் கொண்ட கூட்டம் முழுக்க அங்கங்கே கமுகமாய் உட்கார்ந்திருந்தது. நிற்பவர்

# கப்

**என்.சொக்கன்**

"
கவர்ன்மென்ட்டுக்காரன்
தர்ற
சம்பளத்தையெல்லாம்
என்னதாண்டா
பண்ணறீங்கன்னு
இவனுங்க
சட்டையைப் பிடிச்சு
உலுக்கணும்ன்னு
எனக்கு அடிக்கடி
தோணும் ஸார்.
"

கள் யாரும் தென்படவில்லை என்றாலும், அடுத்த ஸ்டேஷனில் ஏறப் போகிறவர்களை நினைக்கக் கவலையாய் இருந்தது.

எப்போதும் போல் இருபது நிமிடம் தாமதமாய் ரயில் சப்தமிட்டுக் கொண்டு புறப்பட்டது. எதிர் இருக்கையில் ஒருவர் வார இதழைப் படிக்கத் தொடங்க, ஓர் அம்மா உட்கார்ந்த நிலையில் தூங்குவதற்கு வசதி பார்த்துக் கொண்டிருந்தார். ரயிலில் தூங்கப் பழகாததற்காக என்னையே திட்டிக் கொண்டு, ஏதேனும் புத்தகம் படிக்கலாமா என்று யோசித்தேன். அதைவிட பாட்டுக் கேட்பது உத்தமம். பையிலிருந்து வாக்மேனை எடுத்து போர்வீரன்போல் இடுப்பிலும், காதிலும் மாட்டிக் கொண்டு இளையராஜாவைக் காதோரமாய் வழிய விட்டேன். தூளி ஆட்டுவது போல் ரயில் அசைந்து அசைந்து போனது.

ஒசூரில் ரயில் நின்று கிளம்பி அரைமணி நேரம் கழிந்திருக்கும். மரத்துப் போன கால்களுக்கு மாறுதல் கொடுப்பதற்காக எழுந்து மெல்ல நடக்க ஆரம்பித்தேன். பெட்டியின் வாயிலுக்கு

# ளி ங்



வந்தேன்.

எதிர்திசைக் கதவைத் தள்ளிக் கொண்டு அவன் உள்ளே நுழைந்தான். "ஏ _ ஏய், யாரப்பா நீ?" அதிர்ச்சியில் என் குரல் உயர்ந்தது. ஓடுகிற ரயிலில் ஒருவன் சட்டென்று கதவைத் திறந்து கொண்டு வந்தால் என்ன அர்த்தம்?

அவன் சிரித்தபடி கையிலிருந்த பாத்திரத்தை உயர்த்திக் காட்டினான். "காப்பி" என்றான் விற்பனையாளனின் வழக்கமான குரலில்."

"எப்படிய்யா வந்தே நீ?"

"கப்ளிங் சார்" அவன் சிரிப்பு மாறவே இல்லை, "கம்பி இருக்கும்ன்னு நினைச்சு வந்துட்டேன் சார், பார்த்தா இந்தப் பெட்டியில மட்டும் எலக்ட்ரிக் பாக்ஸ் வெச்சிருக்கானுங்க", எழுதத்தகாத ஒரு கெட்ட வார்த்தையை உச்சரித்தான் அவன். "ரெண்டு நிமிஷம் அப்படியே நடுவில உட்கார்ந்துட்டேன் தெரியுமா? த பாரு, கையெல்லாம் இன்னும் நடுங்குது" இலேசாய் வியர்த்திருந்த கரத்தை நீட்டினான் அவன். அவன் கை நடுங்குவதைப் பரிசோதிக்க முடியாத அளவுக்கு என் உடம்பெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது. "என்னய்யா சொல்றே நீ?"

அவன் என்னை விநோதமாய்ப் பார்த்து, "காப்பி வேணுமா?' என்றான். நான் தலையாட்டினேன். "காப்பி, காப்பி" தூங்கிக் கொண்டிருந்தவர்களையும் தட்டி எழுப்புகிற கம்பீரமான குரலோடு ஒரு கையில் காப்பிப் பாத்திரமும், இன்னொரு கையில் பிளாஸ்டிக் கோப்பைகளுமாய் அவன் போனான்.

நான் புரியாமல் நின்றிருப்பதைப் பார்த்து, எதிரில் உட்கார்ந்திருந்தவர், "அடுத்த பெட்டியில் இருந்து இங்க வந்திருக்கான் சார், இத்தா பெரிய பாத்திரத்தைத் தூக்கிகிட்டு" என்றார்.

என்னால் அதை நம்பவே முடியவில்லை. வெளியே பார்த்தபோது, அதுவரை சுகந்தமாய்த் தெரிந்த மலைகளும், மரங்களும் அசுர வேகத்தில் ரயிலைவிட்டுத் தூரத்தில் போய்க் கொண்டிருந்தன. இந்த வேகத்தில் விரைகிற ரயிலில், கையில் இத்தனைப் பெரிய, சூடான பாத்திரத்தோடு எந்தப் பாதுகாப்பும் இல்லாமல் பெட்டி மாறி வந்திருக்கிறான் இவன். இரண்டு பெட்டிகளுக்கு இடையிலிருக்கிற சொற்ப இடத்தில், கையில் பெரிய பாத்திரத்தோடு நான் நிற்பதாய்க் கற்பனைச் செய்து பார்த்தேன், மயக்கம் வரும்போல் ஆகிவிட்டது.

அவனுடைய காப்பிக்குரல் எங்கோ தேய்ந்து மறைந்திருந்தது. ஆனால் அவன் இன்னும் என் முன்னே நிற்பதைப் போலவே இருந்தது. அவனிடம்

காப்பி வாங்காததற்காக மிகவும் வருத்தம் கொண்டேன்.

என் எதிரில் இருந்த ரயில்வே ஊழியர், இது போன்ற காப்பி விற்கும் பயல்களை அவர் தினமும் பார்ப்பதாகவும், இதெல்லாம் சாதாரணம் என்பதுபோலவும் பேசிக் கொண்டே போனார்.

**கா**ல் மணி நேரம் பொறுத்து அவன் மீண்டும் வந்தான். நீல நிறத்தில் மேல்கோட்டும், உள்ளே வெள்ளைச் சட்டையும், மங்கிய நிறத்தில் பேன்ட்டும் அணிந்திருந்தான். கோட்டின் பைகள் இரண்டும் மிகப் பெரிதாய் இருந்தன, அவற்றுள் சில்லறை நிரம்பித் ததும்பிக் கொண்டிருக்க, யாராவது ரூபாய் நோட்டுத் தந்தால் அதைச் சட்டையினுள் பத்திரப்படுத்தினான்.

என்னருகில் வந்ததும் அவன் பழகிய புன்னகையைச் சிந்தினான், நானும் என்னெதிரில் இருந்தவரும் ஆளுக்கொரு காப்பி வாங்கிக் கொண்டோம். "என்னப்பா, அடுத்த பெட்டியா?" என்றார் அவர் சிரிப்போடு. அவனும் அரைக் கோப்பையில் காப்பி ஊற்றிக் கொண்டு உறிஞ்சினபடி, "இல்லை சார், இதுதான் லாஸ்ட், அடுத்த ஸ்டேஷன்ல இறங்கிட வேண்டியதுதான்" என்றான். ஆங்கில எழுத்து 'எஸ்' வடிவில் இருந்த ஒரு கம்பியை ஜன்னலில் மாட்டி, அதில் காப்பிப் பாத்திரத்தைத் தொங்கவிட்டான். ஒரே விழுங்கில் காப்பியைக் காலி செய்து கோப்பையை வீசிவிட்டு, மீதமிருந்த பிளாஸ்டிக் கப்களை பைக்குள் போட்டு காப்பிப் பாத்திரத்திலேயே முடிச்சிட்டான்.

அவர் தொடர்ந்து விசாரித்தார். "தர்மபுரிதானா சொந்த ஊர்?"

"இல்ல சார், ரிடர்ன் போகணும், பன்னிரண்டுக்கு ஒரு வண்டி இருக்கு. அதில ஏறினா ஒண்ணரைக்கு ஓசூர், அப்புறம் வீட்டுக்குப் போயிருவேன்" என்றபோது அவன் முகத்தின் சிரிப்பை மறைக்க முயலவில்லை.

"அப்போ இன்னொரு ட்ரிப் பொட்டிப் பெட்டியா சுத்தணும்ன்னு சொல்லு" என்றார் அவர் அக்கறையோடு.

"ஆமா சார், அதையேன் கேட்கறீங்க?' கொரங்கு மாதிரி ஆச்சு சார் நம்ம பொழப்பு, பகல் நேரம்ன்னாலும் பரவாயில்லை, ராத்திரியில கை வழுக்குது, கண்ணு சரியாத் தெரியறதில்லை, தூக்கக் கலக்கம்வேற, ஒவ்வொரு வாட்டி கப்ளிங் அடிக்கும்போதும் மறுபொறப்பு மாதிரிதான்" என்று பெருமூச்சோடு சொன்னான். கப்ளிங் என்பது பெட்டித் தாவுவதற்கு அவர்கள் வைத்திருக்கிற பெயர் என்று புரிந்து கொண்டேன்.

"நீங்கல்லாம் எப்படி காண்ட்ராக்ட் மாதிரியா?" என்றார் அவர்."

"காண்ட்ராக்ட்தான் சார், ஆனா கீழே விழுந்து கை, கால் போச்சுன்னா, இல்லை ஆளே போயிட்டாக்கூட, கவர்ன்மெண்ட்காரன் ஒண்ணும் தரப்போறதில்லை" என்றான் அவன்.

"காசு விஷயமெல்லாம் எப்படி?"

"ஒரு நாளைக்கு இத்தனை ரூபாய்னு இருக்கு சார், காப்பி விக்குதோ இல்லையோ, அந்தப் பணத்தை அவங்களுக்குக் கட்டியே ஆகணும், அதுக்குமேலே நாம் எவ்வளவு வித்தாலும் அது நம்ம சாமர்த்தியம். பால், சர்க்கரை, காப்பிப் பொடி இதெல்லாம் நம்ம செலவு, அதுக்கு மேல நூறு ரூபாயோ, ஆயிரம் ரூபாயோ, அது நம்மளைப் பொறுத்து. சரி, அப்படியாச்சும், நீ சம்பாதிக்கிறதைச் சம்பாதிச்சுக்கோன்னு சும்மா விட்டுடறானுங்களா? அதுவும் இல்லை, இந்த ரயில் போற ரூட்ல நாலு ஸ்டேஷன் இருக்கு ஸார், ஒவ்வொருத்தனுக்கும் மாசத்துக்கு ரெண்டு கேஸ் தந்தாகணும், எட்டு கேஸுக்குத் தண்டம் கட்டறது ஆச்சா, அதுபோக இந்த போலீஸ்காரனுங்க, ஆஃபீஸருங்க கண்ணுல படும் போதெல்லாம் காப்பி, டீ, சிகரெட் – எத்தினி செலவு தெரியுமா சார்! கவர்ன்மெண்ட்டுக்காரன் தர்ற சம்பளத்தையெல்லாம் என்ன தாண்டா பண்ணறீங்கன்னு இவனுங்க சட்டையைப் பிடிச்சு உலுக்கணும்ன்னு எனக்கு அடிக்கடி தோணும் ஸார்" என்றான் அவன்.

> "பெண்ணுக்குச் சமைக்கத் தெரியுமான்னு கேட்டதுக்கு 'Known is a drop! Unknown is an Ocean'ன்னு சொல்லுதே... அதுக்கென்னய்யா அர்த்தம்?"
>
> "கற்றது கஞ்சியளவு... கல்லாதது பிரியாணி அளவாம்!"
>
> — ஜி. வினோத்

நாங்கள் ஏதும் பேசத் தோன்றாமல் அமர்ந்திருந்தோம். மறுஜன்னல் ஓரமாய் உட்கார்ந்திருந்த ஒருவர் காப்பி கேட்டார், "ரெண்டு காப்பி கொடப்பா!"

அவன் கொடுத்தான். அவர் கொடுத்த பத்து ரூபாயை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு எங்களிடம் நிறைவோடு சிரித்தான். "இனிமே அடுத்த ஸ்டேஷன்ல இறங்கி கீபுல் பண்ணிக்கணும்" என்றான்.

அதற்குள் ஜன்னல் பக்கமிருந்து சத்தம் வந்தது, "பாக்கி சில்லறை?"

"பத்து ரூபாதானே சார் கொடுத்தே?"

"ஆமா, நாலு ரூபாதானே ஒரு காப்பி?"

"அஞ்சு ரூபா சார்!" சொல்லிவிட்டு அவன் சட்டென்று தலையை எங்கள் பக்கம் திருப்பிக் கொண்டான்.

அங்கே உட்கார்ந்திருந்தவர் எதிரில் இருந்தவரிடம் ஏதோ விசாரித்தார், அவரும் ஆமோதிப்பாய்த் தலையாட்டியதும், "நாலு ரூபாய்க்குத்தாம்பா காப்பி வாங்கிச் சாப்பிட்டோம், இதே ரயில்ல!" என்றார் அவனிடம்.

அவன் விடாமல், "எந்த ஸ்டேஷன்ல வாங்கினீங்க?"

"பெங்களூர்ல."



அவன் சிறிது நேரம் யோசனையாய் இருந்தான். பிறகு சட்டென்று, "பெங்களூர்ல கொடுப்பாங்க, இங்க கட்டுப்படியாவாது சார்" என்றான்.

"எல்லாம் ஒரே காப்பிதானேய்யா?"

"அதெப்படி சார், பவுடர் பாலுக்கும், இந்தப் பாலுக்கும் வித்தியாசம் இல்லையா?"

"ஏன்யா, பசுமாட்டைப் பிடிச்சு பால் கறந்து காப்பி போட்டுக் கொடுன்னு நான் உன்கிட்டே கேட்டேனா? நாலு ரூபா காப்பியை அஞ்சு ரூபாய்ன்னு சொல்லி ஏன்யா இப்படிக் கொள்ளையடிக்கறீங்க?" அவர் சப்தமாய்ப் பேசிக் கொண்டே எழுந்தார்.

அவன் அலட்சியம் குறையாத அதே குரலில் அவரைச் சமாதானப்படுத்த முயன்றான். "சார், ரயில் அங்க இங்க ஸ்டேஷன்ல நிக்கும்போது நாலணா, எட்டணா குறைச்சு விக்கறதுதான் சார், மத்தபடி ஓடற ரயில்ல காப்பி அஞ்சு ரூபாதான் சார்." _ அவன் சொன்னது எனக்கு நியாயமாகவே தோன்றியது.

காப்பி வாங்கியவர் அதை ஏற்பதாய் இல்லை. "நீ என்ன கான்ட்ராக்ட்காரனா, இல்லை எல்லா ரயில்லயும் பாத்திரத்தைத் தூக்கிக்கிட்டு ஏறிடுவியா? சொல்லு, உன்மேல ரிப்போர்ட் பண்ணப்போறேன் நான்."

அவன் சிறிது நேரம் அவரைப் பார்த்தான், பிறகு அழுத்தமாய், 'போய்யா' என்றான் கைகளை ஆவேசமாய் உதறி. அதன் பின் அவரிடம் பேசுவது அவசியமில்லை என்பது போல் சட்டென்று எங்கள் பக்கம் திரும்பிக் கொண்டான்.

சண்டைக்காரர் திகைத்துப்போய் அவனையும், மற்றவர்களையும் பரிதாபமாய்ப் பார்த்தார், 'எதுக்கு சார் இவனோட சண்டை' என்று எதிர் சீட்டில் இருந்தவர் அவன் கையைப் பிடித்து இழுத்து உட்காரவைத்தார். "அவன் தண்ணியடிச்சிருக்கான்போல, கண்ணைப் பார்த்தாலே தெரியலையா?"

நான் இலேசாய் முன்னே நகர்ந்து வாசம் பிடித்தேன், ஆல்கஹால் வாசம் வந்தது, 'இது வேறயா?' என்றேன் அனிச்சையாய்.

அவன் என்னைப் புரியாமல் பார்த்ததும், "தண்ணியடிச்சுட்டு இப்படி ஓடற வண்டியில பெட்டி மாறறது ரிஸ்க் இல்லையா?" தயங்கித் தயங்கி சொன்னேன்.

அவன் பெரிதாய்ச் சிரித்தான், "இது உள்ளே போனாதான் சார் சுப்ளிங் அடிக்கறதுக்குத் தைரியமே வரும்!" என் எதிரில் இருந்தவர் தலையாட்டி அவனை ஆமோதித்தார்.

மூவரும் பேசாமல் ரயிலுக்கு வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தோம். திடீரென்று ஞாபகம் வந்ததுபோல் அவர், "இந்த ரயில்ல கிருஷ்ணன்னு ஒருத்தர் முன்னே கான்ட்ராக்ட் எடுத்திருந்திருந்தாரே, அவர் இப்போ வர்றதில்லையா?"

காப்பிக்காரன் முகத்தில் உடனடியாய் ஒரு சிரிப்பு மலர்ந்தது. "அவருக்குத்தான் சார் நான் வேலை பார்க்கறேன், உங்களுக்கு அவரைத் தெரியுமா?"

ரயில்வே ஊழியரின் முகத்திலும் சந்தோஷம் பொங்கி வழிந்தது. "ரொம்ப நாள் முன்னாடி பழக்கம், அவருக்கு என்னை ஞாபகம் இருக்காது!"

"நல்ல மனுஷன் சார்!" நாங்க எந்த ஸ்டேஷன் கேஸ்ல மாட்டிக்கிட்டாலும் ஒரு மணி நேரத்தில் பணத்தைத் தூக்கிக்கிட்டு ஓடி வந்துடுவார், கலெக்ஷன் போகுது, காசு போகுது எதைப்பத்தியும் கவலைப்பட மாட்டார். ஸ்டேஷன்னா ஸ்டேஷன், கோர்ட்டுன்னா கோர்ட்டு. நம்ம கூடவே வந்து நம்மளை வெளிய கொண்டு வந்துட்டுதான் அடுத்த வேலை!"

ஏதோ ஞாபகத்தில் சட்டென்று சிரித்துக் கொண்டான் அவன், "அவரும் சுப்ளிங்கெல்லாம் அடிக்கிறதுதான், இப்போதான் ஒரு நாலஞ்சு வருஷமா முடியறதில்லை, கேட்டா கம்பி புடுங்கிடுமோன்னு பயமா இருக்குங்கறாரு." எங்களையும் சிரிக்க எதிர்பார்த்தான்

போல, நாங்கள் பேசாமல் இருந்ததும் தன்னுடைய சிரிப்பை நியாயப்படுத்துவது போல் தொடர்ந்து பேசினான், "எத்தினி வெல்டிங், எத்தினி கனெக்ஷன் கொடுத்திருக்கு, அதெப்படி சார் கம்பி புடுங்கும்?" சிரிப்பும், இருமலும் ஒன்றாய்ப் பொங்கிவந்தது அவனுக்கு. "அவருக்கு வெயிட் கூடிப் போச்சு சார், எங்கனா விழுந்துடுவோமேன்னு பயப்படறார்'' என்றான். நான் மீண்டும் ஆழ்ந்த அதிர்ச்சிக்குள் மூழ்கிப் போனேன். வெளியே ரயிலின் வேகம் மிகக் கூடியிருந்தது.

"இந்த பாத்ரூம் பைப்பெல்லாம் தண்ணி போய்ப் போய் துருப்பிடிச்சுக் கெடக்கு சார், கால் வெச்சா சில சமயம் படார்ன்னு உடைஞ்சுருது. ரெண்டு தடவை எனக்கே அப்படி ஆகிருக்கு" என்றான் சாதாரணமாய்.

"நல்ல தொழில்தான் சார் இது. ஒரு ரயிலுக்கு ஒரு ஃபுல் காபி, நூறு பாக்கெட் டிஃபன் போட்டா போதும், சரசரன்னு ஓடிரும், நல்ல காசு, ஆனா நாய்ப் பொழப்பு சார்!"

அவர் பக்கம் புரட்டினபடி ஆமோதித்தார்.

ரயில் எங்கோ ஒரு சிறு ஸ்டேஷனில் நிற்கப் பார்த்தது. மீண்டும் சோம்பலாய் நகர ஆரம்பித்ததும் நான் அவனிடம் கேட்டேன், 'இப்போ ஒன்பதேகால்தான் ஆவுது. பன்னண்டு மணி வரைக்கும் என்ன பண்ணுவீங்க தர்மபுரி ஸ்டேஷன்ல?'

''ட்ரெயின் கரெக்ட் டைமுக்குப் போயிட்டா ஃப்ளிம் போயிடுவேன் சார்.'' இதைச் சொன்னபோது அவன் முகத்தில் தெரிந்த குதூகலம் அளவிட முடியாததாய் இருந்தது.

''காப்பியெல்லாம் எங்க ஃபில் பண்ணிக்கறது?'' அவர் கேட்டார்.

"அதுக்கெல்லாம் அங்கங்க ஸ்டாக் இருக்கு சார்'' என்று அவன் கர்வமாய்ச் சிரித்தான். 'ஸ்டேஷன் பக்கத்திலயே ஒரு டீக்கடை இருக்கு. அங்கேபோய் நானே காப்பி போட்டுடுவேன்". சிரிப்பு கொஞ்சம் மறைந்து, "அதுக்கு அவனுக்குத் தனியா முப்பது ரூவா கொடுக்கறேன் சார்" என்றான்.

ரயிலுக்கு வெளியே போர்த்தியிருந்த இருட்டுப் போர்வை மெல்லமாய் விலகி அங்கங்கே வெளிச்சப் பொட்டுகள் தென்பட ஆரம்பித்தன, தண்டவாளத்தை ஒட்டிச் சென்ற சிறு பாதையில் அந்த இருட்டிலும் ஒரு சிறுவன் ரயிலோடு கூடவே ஓடிவந்து, 'ஓஓஓஓ' என்று கத்தினான், காப்பிக்காரன் வெளியே எட்டிப் பார்த்து அவனுக்கு உற்சாகமாய்க் கையசைத்தான்.

ஸ்டேஷன் நெருங்கிவிட்டதற்கான அடையாளங்களாய் மஞ்சள் நிறத்தில் உயரமான அரசாங்கக் கட்டிடங்கள் எட்டிப் பார்த்தன, அவன் ஜன்னலில் மாட்டியிருந்த பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டான், நெற்றியின் வியர்வையை வழித்துப் போட்டுவிட்டு, "அப்போ நான் வரேன் சார்'' என்றான்.

"மறுபடி கப்ளிங்கா?'' என்று சிரித்தார் அவர்.

"ஆமா சார், அந்த ரயில் கரிக்ட்டா வந்தா தான் ஒண்ணே முக்காலுக்கு நான் ஊருக்குப் போய் தூங்க முடியும்'' என்று அவனும் சிநேகமாய்ச் சிரித்தான். நானும் அவர்கள் சிரிப்பில் கலந்து கொண்டேன், இறங்கப் போகிறவர்கள் வாசலுக்கு அருகே வந்து நெரிக்க ஆரம்பித்திருக்க, நாங்கள் பின்னால் நகர்ந்து கொண்டோம்.

ரயில் பிளாட்ஃபாரத்தினுள் நுழைந்து நின்றது. எல்லோரையும் இறங்கவிட்டுக் கடைசியாய்த்தான் அவன் இறங்கினான். உள்ளே ஒருமுறை எதையோ தேடுபவன்போல் பார்த்துக் கொண்டு, ''எல்லாம் கிடைச்ச இடத்தில் படுத்துத் தூங்குங்க சார், எதுக்கு ராத்திரியில தூக்கம் முழிக்கறீங்க?'' என்று சொல்லிவிட்டு சட்டென்று இறங்கிப் போனான்.

அவனுடைய ஃப்லிம் இன்னும் ஆரம்பிக்காமல் இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். ○

மனிதன்தான் மதத்தை உண்டு பண்ணுகிறான்; மதம் மனிதனை உண்டு பண்ணவில்லை. மதம் என்பது ஒடுக்கப்பட்ட ஒரு பிராணியின் புலம்பல். மனமில்லாத ஓர் உலகத்தின் உணர்ச்சி, உயிரில்லாத நிலைமைகளின் உயிர். அது ஜனங்களுக்கு அபினி. ஜனங்களுக்கு சந்தோஷத்தை அளிப்பதாக பிரமை காட்டுகிற மதத்தை ஒழிக்க வேண்டுமென்று கோருவது ஜனங்களுடைய உண்மையான சந்தோஷத்தைக் கோருவதாகும்.



— காரல் மார்க்ஸ்

# காவேரி

- செருமடார் பண்ணைக்கென்றாலும்
  சேரித்தெரு அப்பாவு
  அள்ளி விசிறிடும்
  கைராசியில் முளைக்கின்றன
  சொத்தையின்றி அத்தனை விதைகளும்

- கல்யாணம், காதுகுத்து
  கருமாதிவரையிலும்
  அரவாணி சண்முகத்தின்
  அசைவச் சமையலென்றால்
  குளுவாய்க் கூடிடும்
  சுற்றமும் நட்பும்

- மீன் விற்கிறாள்
  எனத் தெரிந்தும்
  மாலையில் அவளிடம்
  பூவாங்கவே செய்யும்
  மாமிகள் இருக்கிறார்கள்
  அக்கிரஹாரத்தின்
  ஒவ்வோர் அகத்திலும்

- பகந்தயிர் பிசைந்த
  பழைய சோறே நைவேத்யமாய்
  கள்ளிப்பூக்களையும்
  கழுத்தில் ஏற்கும்
  நாகலிங்க சிவனுண்டு
  ஊரின் நடுவே

- இருந்தும்
  கர்ப்பம் தரித்த
  நெற்பயிர்களை
  கருக விடுகிறாள்
  அல்லது மூழ்கவிடுகிறாள்
  காவேரி.

ஆர்.சி.ஜெயந்தன்



# வன்முறைக்கான வித்து!

அண்மையில், வன்முறைப் போக்குக்கான மூல விதை எங்கிருக்கிறது என்பது பற்றி ஆராய்ந்து சொல்லியிருக்கிறார்கள், லண்டனிலுள்ள 'கிங்ஸ்' கல்லூரியின் மனநோய் மருத்துவ நிறுவனத்தைச் சேர்ந்த டெர்ரீ மோஃப் பிட் என்பவரும் அவருடைய குழுவினரும். இந்த வன்முறைப் போக்குக்கான காரணம், மனித உடலில் ஒருவகை மரபணுக்கள் குறைவாக இருப்பதோ, இல்லாமலே இருப்பதோதான் என்று கண்டறிந்திருக்கிறார்கள். MAOA மரபணு (மனோமைன் ஆக்ஸிடேஸ் - ஏ) என்பது ஒரு வகையான 'என்ஸைம்'. நரம்பு செல்களுக்கு இடையே சமிக்ஞைகளை எடுத்துச் செல்லும் மூலக் கூறுகளைச் செயலிழக்கச் செய்யக் கூடியது. இந்த மூலக் கூறுகள் (நியூரோட்ரான்ஸ்மிட்டர்கள்) பல விதமானவை. இவை அனைத்துமே ஒரு மனிதனின் மன நிலை மாறுபாடுகளைச் சமநிலைப்படுத்துகின்றன என்கிறார்கள்.



இந்த MAOA மரபணு அளவைக் குறைவு படுத்துவதன் மூலம் வன்முறை உணர்வுகள் அதிகமாவது பற்றிய பல சோதனைகளை நிகழ்த்தி, இந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள். சிறு வயதில் இந்த மரபணுக்கள் குறைவாக இருந்து, வளர்ந்த பிறகு சீராக ஆனாலும் கூடச் சிறுவயதில் ஏற்பட்டிருக்கக் கூடிய வன்முறை உணர்வு பாதகமான விளைவுகளை உண்டாக்குமாம்.

ஒரு டச்சுக் குடும்பமே இந்த ஆய்வில் கவனிக்கப்பட்டிருக்கிறது. மிக அரிதானதொரு இயல்பாக இவர்களில் யாருக்கும் இந்த MAOA மரபணு அறவே இல்லை. இவர்கள் வன்முறை நடவடிக்கைகளில் மிகவும் பிரபலமாக இருந்திருக்கிறார்கள்.

இன்னொரு ஆய்வில், இந்த மரபணுக் குறைவுடைய ஐந்நூறு பேர்களைப் பிறப்பு முதல் இருபது வயது வரை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு கவனித்திருக்கிறார்கள்.

ஆய்வு முடிவில், குழந்தைப் பருவத்தில் கொடுமைகளில் ஈடுபட்டோருள் 12 சதவிகிதப் பேரிடம் MAOA மரபணுக்குறைவும் காணப்பட்டிருக்கிறது. இருப்பினும் வன்முறைக் குற்றங்களுக்காகத் தண்டனையடைந்தவர்கள் இந்த எண்ணிக்கையில் பாதிக்கும் குறைவாகவே இருந்திருக்கிறார்களாம். சமூக விரோதச் செயல்களில் ஈடுபடுகிறவர்கள் இந்தப் பன்னிரண்டு சதவிகிதத்தில் முக்கால் வாசிக்குமேல் இருக்கிறார்களாம்.

— சுப்ர.பாலன்



# வாஸந்தி

# 23

அன்று பார்த்தத் திரைப்படம் இன்னமும் மனத்தைத் துன்புறுத்திற்று. மெமென்டோ. ஞாபகப்படுத்தும் சின்னம். அடையாளம் நழுவிப் போகும் தனது நினைவுகளை மனத்தில் நிறுத்த அடையாளங்களைத் தேடிய அந்தக் கதாநாயகன், ராஜாவின் கண்களிலிருந்து அகலமறுத்தான். கார் நம்பரையும், தனது பெயரையும் விலாசத்தையும் இன்னும் எவ்வளவோ தகவல்களை உடம்பு பூராவும் பச்சைக் குத்திக் கொண்டு நின்றான். தன் மனைவிக்கு நேர்ந்த அநீதிக்காகப் பழிவாங்கும் தவிப்புடன் சதா நேரமும் ராஜாவின் எதிரில் நின்று வதைத்தான். பழி வாங்கினானா அவனது ஐயங்களே பிரமையா என்று புரியாத குழப்பத்தைப் படம் ஏற்படுத்தினாலும் ராஜாவை ஒரு விஷயம் தாக்கிற்று. இழந்துபோன நினைவை மீட்க அவன் தவிக்கும் தவிப்பு. அதற்காக அவன் செய்யும் யத்தனங்கள். அதைப் பார்த்ததிலிருந்து ஒரு குற்ற உணர்வு அவனை ஆட்கொண்டது. அவனுடைய நிலை அந்தக் கதாநாயகனைப் போல பயங்கரமானது அல்ல என்று படம் பார்த்த அன்று சமாதான மேற்பட்டிருந்தது. ஆனால் மறந்துபோன அந்த ஆண்டுகளை மீட்க, தான் எந்த முயற்சியும் எடுக்கவில்லை என்று உறுத்திற்று.

> “
>
> **ராஜா உறைந்து போனான். மண்டை முழுவதும் புகை மூட்டம் சூழ்வது போலிருந்தது. ‘இதையே நானும் செஞ்சிருக்கேன்’ என்று மனசு இரைந்தது.**
>
> ”

‘என்னையும் குழந்தையையும் விட்டுட்டு நீ போயிட்டியானா எங்களைப் பத்தி உனக்கு நினைவு எப்படித் திரும்பும்?’ என்ற துக்கத்தில் உடைந்து கண்ணீரில் சிக்கிய கேள்வி எதிர்பாராத நேரத்தில் கொக்கிப் போட்டு இழுத்தது. அப்பாவும் அம்மாவும் அங்கு வந்து, ‘நம்ம வீட்டுக்குப் போயிறலாம்’ என்று சென்னை வீட்டைக் குறிப்பிட்ட போது ஏதோ பாதுகாப்பு கிடைத்தது போல கிளம்பிவிட்டது அப்பட்ட சுயநலம் என்று குற்றம்

சாட்டியது.

அந்த நினைவுகளை எப்படி மீட்பது? மீட்பது அவசியமில்லை என்று அப்பாவும் அம்மாவும் கருதுவது மிகத் தெளிவாகத் தெரிந்தது. அப்படித்தான் அன்று அந்தக் கல்யாணத்தில் எதிர்பாராமல் ஒரு பெண்ணைக் கொண்டு வந்து அவன் எதிரில் நிறுத்தினார்கள். அப்பாவும் அம்மாவும் இப்படி இணைந்து ஒரு காரியத்தில் இறங்குவது அவனுக்கு அதிசயமாக இருந்தது. சபாபதி மாமாவும் கமலம் மாமியும் அப்பாவும் அம்மாவும் ஏதோ பெரிய திட்டம் போடுபவர்கள் போல முகத்தில் பெரிய புன்னகையுடன் நிற்பது முதலில் வேடிக்கையாக இருந்தது.

"ராஜா இவங்கதான் ரத்னம், சபாபதியுடைய சம்பந்தி" என்று ஒரு பெரியவரை அப்பா அறிமுகம் செய்தார். கூடவே கூப்பிட்டு வந்ததுபோல ஒரு பெண் பட்டும் வைரமுமாக வந்து நின்றாள். "இது அவங்க மக ரேவதி. எம்.ஏ. படிச்சிருக்கா."

ராஜா கூச்சத்துடன் அவளைப் பார்த்துக் கைகூப்பினான், எதற்கு இந்த அறிமுகம் என்று

# பொய்யில் பூத்த நிஜம்



புரியாமல். அந்தப் பெண்ணும் சற்று நேரத்திற்கு நெளிந்து கொண்டு நின்றது.

"உக்காரும்மா கூச்சப்படாதே" என்று அவளை உற்சாகப்படுத்தி அமர்த்தினார் சபாபதி மாமா. 'நா அமெரிக்கா போறதுக்குள்ளே நல்ல சேதி சொன்னேன்னா சந்தோஷமா கிளம்புவேன் சரவணன்' என்று அவர் சொன்னபோதுதான் இது ஏதோ திட்டமிட்ட செயல் என்று அவனுக்குப் புரிந்தது. தன்னுள் ஏற்பட்ட எரிச்சலை சிரமப்பட்டு அடக்க வேண்டியிருந்து. அம்மா அவன் அருகிலேயே வராமல் நழுவினாள். அந்தப் பெண்ணுடன் என்ன பேசுவது என்று புரியாமல் அவன் தவிக்க அந்தப் பெண்ணும் அதே போன்ற அவஸ்தையை அனுபவிப்பவள் போலிருந்தது. வீட்டிற்குச் சென்றதும் அவன் வெடித்தான்.

"என்னம்மா இதெல்லாம்?"

"எதெல்லாம் கண்ணு?"

"அந்தப் பெண்ணை எதுக்காக அப்படிக் கூப்பிட்டு உட்கார்த்தி வெச்சீங்க?"

அம்மா சுரணையில்லாதவள் போலச் சிரித்தாள்.

"நல்லாயிருக்கே நீ எம்பேரிலே பழியைப் போடறது? பெண்ணைப் பெத்தவங்களையில்லே நீ போய்க் கேக்கணும், ஏன் இப்படி அனாவசியமா கவலைப்படறீங்க? வயசானா ஆயிட்டுப் போவுதுன்னு?"

"அவங்களுக்கு நீங்க போய்ச் சொன்னீங்களா உங்க பிள்ளை கல்யாணத்துக்கு இருக்கான்னு?"

'அட, இவனைப் பாருடா எம்மேலேயே தப்பு சொல்றதை!' என்றாள் அம்மா கோபமில்லாமல். "குதிராட்டம் எதிர நிக்கறே. நா சொல்லணுமா வேற? அவங்க ஆசைப்படறதை நா தடுக்க முடியுமா சொல்லு!"

"அம்மா, அவங்க ஆசைப்பட்டா அவங்க பாடு. ஒப்புக்கறேன். நீங்க ஆசைப்படாதீங்க."

அம்மா பதிலே பேசாமல் உள்ளே சென்றாள். அப்பா எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு உள்ளே அமர்ந்திருந்தார், உடுப்பை மாற்றும் பாவனையில்.

அவன் தன் அறைக்குச் சென்று எரிச்சல் குறையாமல் உடுப்பை மாற்றிக் கொண்டான். அதன் தொடர்ச்சிபோல ஹாங்கரில் ஷர்ட்டை மாட்டும்போது சகுந்தலாவின் நினைவு வந்தது. அவனுடைய உடுப்புகளையெல்லாம் சகுந்தலா அழகாகப் பாக் செய்து தில்லி கெஸ்ட் ஹவுசுக்கு அனுப்பியபோது அன்று சங்கடப்பட்டது இப்பவும் பசுமையாக இருந்தது. அவன் அவளுடன் வசித்ததற்கான நிரூபணம் அது. அவளுடன் வாழ்ந்தது மட்டும் நினைவு வராமல் போவது என்ன சோதனை! சேர்ந்து வாழ நினைத்தது ஏன்? அவளைப் பலாத்காரப்படுத்தியிருப்பேனோ? அதன் பிறகு கோழைத்தனத்தினால் சேர்ந்து வாழ முடிவு செய்தேனோ? அப்படிப்பட்டக் கயமை தனக்கு இருந்திருக்குமா என்று அவனுக்குச் சங்கடமேற்பட்டது. நான் அவளை நிர்பந்தித்ததாக அவள் சொல்லவில்லை. அதைக் கயமை என்று நிச்சயமாக அவள் கருதவில்லை. பாதுகாப்பு என்று நினைக்கப்படும் ஸ்தாபனங்களை எதிர்க்கும் அளவுக்குத் தனக்குக் கோபமோ வெறுப்போ இருந்திருக்க வேண்டும். 'ரொம்ப முற்போக்கு எண்ணங்கள் இருந்தது எனக்கு. சேர்ந்து வாழணும்ங்கறது உன் முடிவு. நீ என்னைக் கட்டாயப்படுத்தினதா நான் சொல்ல மாட்டேன். உன் மேல எனக்கு இருந்த ப்ரியத்தினாலே 'அவள் பிராமணத் தமிழ் பேசினது நினைவுக்கு வந்தது. அவள் ஒரு அநாதை என்று விவேக் சொன்னதாக அப்பா சொன்னார் பேச்சுவாக்கில். படித்தவள், புத்திசாலி என்பதிலும் குழந்தையைக் காப்பாற்றும் அளவுக்குச் சம்பளம் வாங்கும் உத்யோகம் பார்ப்பவள் என்பதிலும் சந்தேகமில்லை. புகைமூட்டமாகவேனும் ஏதாவது நினைவலைகளை உசுப்ப முடிந்தால் —

**கா**மாட்சி அறையில் ஓசைப்படாமல் வந்து நிற்பதை உணர்ந்து அவன் திரும்பினான்.

"உங்கிட்ட கொஞ்சம் பேசலாம்னு வந்தேன்."

"பேசலாமே, என் கல்யாணத்தைப் பத்திய அசட்டுப் பிசட்டுப் பேச்சைத் தவிர."

"அசட்டுப் பிசட்டுப் பேச்சில்லே ராஜா அது; நான் ஆசைப்படறது தப்புங்கறியா?"

"ஆசைப்படுங்களேன்! ஆசைப் படறதெல்லாம் நடந்துடணும்னு மட்டும் எதிர்பார்க்காதீங்க." நா இன்னும் நார்மல் ஆகல்லே. இங்கே வேலைக்குப் போறேன், தொந்திரவில்லாம வளைய வரேன் என்கிறதனாலே நான் நார்மலாயிட்டேன்னு நினைக்கல்லே. பெரிய குழப்பம் என்னை இன்னும் வாட்டுதுன்னு நீங்க புரிஞ்சுக்கணும்."

"அதைத்தான் நீ தெளிய வெச்சுக்கணும். ஆண்டவனே உனக்கு அந்த உறவு லாயக்கில்லேன்னுதான் இந்த மறதியைக் கொடுத்தார்னு நீ நினைக்கணும்."

"இப்படிப்பட்ட விளக்கத்தையெல்லாம் நான் நம்பல்லே."

"நா நம்பறேண்டா கண்ணு."

காமாட்சியின் குரல் உடைந்தது. கண்களிலிருந்து சரம் சரமாக நீர் வழிந்தது.

அவளுடைய கண்ணீர் வழக்கம்போல் அவனைப் பலவீனப்படுத்திற்று.

"அம்மா, ப்ளீஸ் இப்ப அழாதீங்க. அஞ்சு வருஷ ஞாபகங்களை, மறந்து போறது சாதாரண விஷயமில்லே எனக்கு. உங்களுக்குச் சாதகமா இருக்கிறதனாலே எல்லாப் பிரச்னையும் எளிமையாத் தீந்து போச்சுன்னு நினைக்கிறீங்க. உங்களுக்குக் கருணை காட்டணும்னு இன்னொருத்தருக்குத் தண்டனை கொடுக்கிறவனா உங்க ஆண்டவன்?"

அம்மா கண்ணைத் துடைத்துக் கொண்டு ஆவேசத்துடன் சொன்னாள்.

"தப்பு செஞ்சா தண்டனை கிடைக்கத்தான் கிடைக்கும். ஆம்பிளைங்க தெரிஞ்சும் தெரியாமையும் உறவு வெச்சுக்கறதைப் பார்த்திருக்கேன். உங்க தாத்தாவே அப்படி ஒரு பொம்பளையோட இருந்தாரு. யாரும் அந்த மாதிரி பொம்பளைங்களை மதிச்சதில்லே. அந்த உறவு முறிஞ்சா பெரிசா நினைக்கறதுமில்லே."

"அம்மா அந்தப் பெண்ணைப் பத்தி உங்களுக்கு ஒண்ணுமே தெரியாது."

"உனக்கு மட்டும் இப்ப என்ன தெரியும்? சுத்தமா நினைவில்லே. எனக்குத் தெரியாட்டி என்ன, இப்படி ஒரு பொம்பளை இருக்க எப்பத் துணிஞ்சானோ, அவளை நான் எப்படி மதிக்க முடியும்?"

"நானும் அதுக்கு உடந்தைன்னு ஞாபகம் வெச்சுக்க, நானே அவளை அப்படி இருக்கச் சொல்லியிருக்கலாம்."

"அதுதான் சொன்னேனே. ஆம்பிளை சொல்றது ஒண்ணும் அதிசயமில்லே. நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பொண்ணா இருந்தா கல்யாணமில்லாம இருக்க சம்மதிச்சிருப்பாளா? பிள்ளையை வேற பெத்துக்குவாளா? அதுக்கு

---

"அந்தப் பா.ம.க. கட்சிக்காரர் தன் பொண்ணைப் போட்டு அடிக்கிறாரே ஏன்?"

"அந்தப் பொண்ணு 'பாபா பிளாக் ஷீப்' பாட்டு படிச்சுதாம்!"

— நெல்லையப்பபுரம் செல்வன்

---



முந்தி எத்தனை பேரோட படுத்தவளோ?"

அவன் திடுக்கிட்டு நிமிர்ந்தான். அம்மாவைக் கட்டுப்படுத்த முடியாது போலிருந்தது.

"அம்மா! தயவு செய்து இனிமே இதைப் பத்தியெல்லாம் பேச வேண்டாம். என்னை இதெல்லாம் சந்தோஷப்படுத்தும்னு நினைக்காதீங்க."

"காமாட்சி!" என்று உள்ளேயிருந்து சரவணன் அதட்டினார். "நானும் பாத்துக்கிட்டே இருக்கேன், அவனை ரெஸ்ட் எடுக்க விடாம என்ன தொணதொணத்துக்கிட்டே இருக்கே?"

காமாட்சி மறுபடி கண்ணீர் பெருக்கினாள்.

"அந்த ஏழுமலையான்தான் எல்லாருக்கும் புத்தி கொடுக்கணும்" என்று கண்ணைக் கசக்கியபடி வெளியேறியபோது அவனுக்கு அம்மா மாறவேயில்லை என்று தோன்றிற்று. சுதாகரிடம் இதைச் சொன்னபோது, "பெரியவங்க செஞ்சு வெக்கிற கல்யாணமெல்லாம் என் அபிப்பிராயப்படி முக்கால்வாசி இப்படித்தான் முடியும்" என்றான் சுதாகர். "இரண்டு பேரும் அதிர்ஷ்டவசமா ஒத்துப் போகலைன்னா வாழ்நாள் முழுவதும் தண்டனைதான். காதலிச்சுக் கல்யாணம் செய்துக்கறதெல்லாம் சொர்க்க வாசமான்னு கேக்காதே. அதிலேயும் தோத்துப் போகிற கேஸ் உண்டு. ஆனா அப்படிப்பட்ட கேசும் கொஞ்ச காலத்துக்காகவாவது காதல் வாழ்க்கை வாழ்ந்திருக்கும்."

அப்படிப்பட்ட ஒரு வாழ்க்கை சகுந்தலாவுடன் அவன் வாழ்ந்தானா என்று புரியவில்லை. இப்போது அவள் ஓர் அந்நியனின் மனைவி என்பது போன்ற கூச்சம் ஏற்பட்டது...

"நீ காதலிச்சுப் பண்ணிக்கிட்டியா?"

சுதாகரின் முகத்தில் மென்மையான புன்னகை விரிந்தது. "ஆமாம். என் காலேஜ் மேட். நல்ல வேளை. என் அப்பா அம்மாவுக்கும் ராதாவுடைய குடும்பம் புடிச்சுப் போச்சு. ஏத்துக்கிட்டாங்க. இல்லேன்னா அதுவும் பெரிய பிரச்னை ஆயிருக்கும் தெரியுமோ!"

இன்று சனிக்கிழமை. அலுவலகம் பாதி நாள்தான் இயங்கும். மாலை எங்கு செல்வது என்கிற யோசனையுடன் அவன் தன் வேலை முடிந்ததும் கம்ப்யூட்டரை மூடிவிட்டு ஹிந்து பேப்பரின் எங்கேஜ்மெண்ட் பகுதியை ஆராய்ந்தான்.

"ஹலோ!" என்ற குரல் கேட்டு நிமிர்ந்தான். சிக்கென்று ஒரு பெண் நின்றிருந்தாள். பிரகாசமான முகம். பனிச்சென்ற புன்னகை. கல்லூரி மாணவி போலத் தெரிந்தாள். ஜீன்ஸ், டீ ஷர்ட்டில் மொழுமொழு வென்ற உடம்பு.

அவன் தயக்கத்துடன் 'ஹலோ!' என்றான்.

"எம் பேரு மீரா. சுதாகருடைய தங்கை!"

"ஓ!" என்று அவன் சினேகிதத்துடன் சிரித்தான். "ஃபிலிம் இன்ஸ்டிட்யூட்லே படிக்கறவங்க தானே?"

"ஆமாம். இங்கே இல்லே, புனேயிலே!"

"அப்படியா? இங்கதான்னு நினைச்சேன். இப்ப லீவா?"

"ஆமாம். சுதாகர் உங்களைப் பத்தி அடிக்கடிச் சொல்வான். உங்களுடைய ரொம்ப அதிசயமான அம்னீஷியா பத்தி. மெமெண்டோ படம் பார்த்ததும் அதை நீங்க பார்க்கணும்னு கொடுத்தனுப்பிச்சேன். பார்த்தீங்களா?"

"ஓ, யெஸ், தாங்க்ஸ். பார்த்தேன்."

"அது உங்களை டிஸ்டர்ப் செய்திருக்கும்" என்றாள் அவள் மன்னிப்பு கேட்கும் தொனியில்.

"ஒரு வகையில், ஆமாம்" என்று அவன் ஒப்புக் கொண்டான். "ஆனால் அந்த ஹீரோவுடைய தவிப்போடு என்னை ஐக்கியப்படுத்திக்க முடிஞ்சுது."

"படம் புரிஞ்சுதோ?"

"அது சந்தேகந்தான். உங்களுக்குப் புரிஞ்சுதுன்னு சொன்னா நீங்க மேதாவியாயிருக்கணும்."

"எனக்கும் புரியல்லே, கவலைப்படாதீங்க. ஆனா ஒரு நூதன டைரக்ஷன் அது. ரொம்ப அனுபவிச்சு ஏற்படுத்தின சிக்கல் அது. நீங்க அந்த மாதிரி ஏதாவது உடம்பிலே எழுதி வெச்சிருக்கீங்களா?"

அவன் சிரித்தான்.

"இல்லே. அவனுடைய பிரச்னை எனக்கு இல்லே நல்லவேளை. கடந்த அஞ்சு வருஷத்தை மறந்துட்டேன், அவ்வளவுதான்."

"என்ன அவ்வளவுதான்?" என்றாள் அவள் வியப்புடன். "அஞ்சு வருஷத்திலே என்னவெல்லாம் நடக்கலாம்! புரட்சி வெடிக்கலாம். நீங்களே வித்தியாசமான ஆளா மாறிப் போகலாம்."

அவன் மெல்லிய வியப்புடன் அவளைப் பார்த்தான். ஒரு நடிகைபோல விநாடிக்கு விநாடி முக பாவனைகள் மாறின.

"உண்மைதான்" என்றான் மெல்ல. "நா எப்படியிருந்தேன்னு நினைவில்லே. அந்த அஞ்சு வருஷத்திலே நா பழகினவங்களோடு என்னால



## தாண்டவம்!

அதிகாரம் என்பது போதை. அதைப் பருகப் பருக இனிக்கும். பழகப் பழக அதில் சொக்கி விழாதவர்கள் வெகு சிலரே. அதிலும் அரசியல் அதிகாரம் அதிகமான போதை தருவது. அதைப் பருகுவோர் பரமானந்தமடைந்து கால்கள் பூமியில் பதியாமல் தாண்டவமாடுகிறார்கள்.

— அண்ணா

இப்ப தொடர்பு கொள்ள முடியல்லே. அதனாலதான் டில்லியிலேந்து எனக்கு ஞாபகம் இருக்கிற சூழலுக்கு வந்தேன்."

"குட்!" என்று அவள் சிரித்தாள். 'ஆழமான உறவு அந்த அஞ்சு வருஷத்திலே ஏற்பட்டிருந்தாதான் பிரச்னை. இல்லேன்னா சமாளிச்சுக்கலாம்."

அவன் பதிலேதும் சொல்லவில்லை. இவள் தன்னை ஆழம் பார்க்கிறாளோ என்று சந்தேகம் வந்தது. நல்ல வேளையாக சுதாகர் வந்து சேர்ந்தான்.

"இன்னிக்கு ஏதாவது நல்ல ப்ரோக்ராம் இருந்தா சொல்லேன்" என்றான் ராஜா. "இப்பவே வீட்டுக்குப் போய் என்ன செய்யறது?"

"என் வீட்டுக்கு வா. அங்கிருந்து ராதாவையும் அழைச்சிட்டு நம்ம நாலு பேரும் சினிமா பார்க்கலாம்" என்று சுதாகர் சொன்னதும்,

"குட் ஐடியா!" என்று மீரா முந்திக் கொண்டாள். 'எந்த குப்பைப் படத்தையும் நான் பார்க்கிற மூட்லே இருக்கேன். நீங்க?" என்றாள் ராஜாவைப் பார்த்து.

"ரெடி" என்று ராஜா சிரித்தான். அவளுடைய உற்சாகம் தொத்திக் கொள்வதாக இருந்தது. பழனியிடம் நண்பர்களுடன் தான் வெளியில் போவதாகவும் இரவு தாமதமாக வீட்டுக்குத் திரும்புவதாகவும் சொல்லி வண்டியை வீட்டுக்கு அனுப்பினான். சுதாகரின் வண்டியில் பயணிக்கும் போது, சள சளவென்று மீரா நூறாயிரம் விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டு போனாள்.

"மீரா கிட்ட ஒரு நல்ல குணம். அவ பேசிக்கிட்டே இருப்பா. பதிலை எதிர்பார்க்க மாட்டா. அதனால நீ தூங்கினாலும் கவலைப் படமாட்டா."

**வீ**ட்டைச் சென்று அடையும்வரை அண்ணனும் தங்கையும் கேலி பேசி ஒருவரையொருவர் சீண்டிக் கொண்டது ராஜாவுக்கு வெகுநாள் கழித்து உற்சாகமானவர்கள் மத்தியில் இருக்கும் நிம்மதியை அளித்தது.

சுதாகரின் வீட்டில் அவனுடைய பெற்றோர்களும் இருந்தார்கள். வீட்டிற்குள் நுழையும்போதே "ராதா!" என்று சுதாகர் சப்தமாக அழைத்தான்.

"குழந்தையைக் குளிப்பாட்டிக் கிட்டிருக்காடா அவ" என்றார் அவனுடைய அம்மா.

"ஓ, சரிதான். அம்மா, இவன் தான் ராஜமோஹன். என்னோடு வேலை செய்யறான். காபி டிபன் ஏதாவது கிடைக்குமா?"

"ஓ கண்டிப்பா" என்று சிரித்தபடி அந்தம்மாள் எழுந்து சென்றாள். மீரா அதற்குள் கோக் பாட்டிலைத் திறந்து கிளாஸ்களில் ஊற்றிக் கொண்டு வந்தாள். சுதாகரின் தந்தை அங்கே வர, அவருக்கு ராஜாவை சுதாகர் அறிமுகம் செய்து வைத்தான். 'ராதா என்ன செய்யறான்னு பார்க்கறேன்' என்று சுதாகர் எழுந்து சென்றான். ராஜா உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து அவன் திறந்து சென்ற அறை நன்றாகத் தெரிந்தது. இரட்டைக் கட்டிலை ஒட்டி ஒரு குழந்தைக் கட்டில் இருந்தது. இரட்டைக் கட்டிலின் மையத்தில் ஒரு வயது இருக்கக் கூடிய ஒரு குழந்தை, கையில் பொம்மையுடன் உட்கார்ந்திருந்தது. அதற்கு ஒரு பெண், அது ராதாவாக இருக்க வேண்டும் பேசி சிரித்தபடி பவுடர் போட்டுக் கொண்டிருந்தாள். சுதாகர் உள்ளே நுழைவதைப் பார்த்து, "வந்தாச்சா பவுடர் போட?" என்று சிரித்தாள். "அப்பா தானே உனக்குப் பவுடர் போடணும்?" என்று கொஞ்சியபடி சுதாகர் பவுடரைக் குழந்தையின் உடம்பில் பூச ஆரம்பித்தான்.

ராஜா உறைந்து போனான். மண்டை முழுவதும் புகை மூட்டம் சூழ்வது போலிருந்தது. 'இதையே நானும் செஞ்சிருக்கேன்' என்று மனசு இரைந்தது.

"உங்களுக்குக் கல்யாணம் ஆகியிருக்கா" என்று சுதாகரின் அப்பா கேட்டார்.

"ஏம்பா, உங்களுக்கு வேற ஒண்ணும் பேச விஷயமில்லையா?" என்றாள் மீரா.

குழந்தை தொம் தொம்மென்று கைக்கு அடங்காமல் அரிசிப் பல்லைக் காட்டிச் சிரித்தபடி குதித்தது. விநாடிக்கு விநாடி என்ன நடக்கும் என்று அறிந்தவன் போல் ராஜா பார்த்தான். அவன் பிடித்துக் கொள்ள, அவள் ஜட்டி போடுவாள். போட்டாள். அவனும் அவளுமாக சட்டையை மாட்டுவார்கள், அசகாய சூரத்தனத்துடன் மாட்டினார்கள். 'சமத்து' என்று முத்தம் கொடுப்பார்கள். கொடுத்தார்கள். 'எனக்கு?' என்று அவன் கன்னத்தைக் காட்டுவான் — காட்டினான். ராஜா கண்களை மூடிக் கொண்டான். மேக மூட்டம் சூழ்ந்தது, திரை விழுந்தது போல.

"ராஜா, இதுதான் ராதா. இது அஜித்" என்று எதிரில் சுதாகர் நின்றான்.

(தொடரும்)

சினி'பூ'

# ரசிக பொறுப்பூ! – மாதவன்

ரசிகர்களுக்கு இருக்க வேண்டிய 'பொறுப்பு' பற்றிச் சொல்கிறார் சாக்லேட் சிரிப்பு மாதவன்.

"கட்அவுட்டிற்குப் பாலபிஷேகம் பண்ணுவது, கோயில் கட்டுவது, தனக்குப் பிடித்த நடிகனுக்கோ நடிகைக்கோ ஏதாவது நடந்துவிட்டால் தற்கொலை செய்து கொள்வது போன்ற அபத்தமான காரியங்களில் ஈடுபடும் ரசிகர்கள் எனக்குத் தேவையில்லை. இந்த அளவுக்குத் தவறான தாக்கத்தை உண்டு பண்ணும் நடிகனாக நான் இருக்க விரும்பவில்லை. எனக்குத் தினசரி மூவாயிரம் மின் அஞ்சல்கள் வருகின்றன. பதினான்காயிரத்து எண்பத்தெட்டு ரசிகர் மன்றங்கள் இருக்கின்றன. நல்லவேளையாக எனது ரசிகர்களில் ஒருவர்கூட இத்தனை இழிவான காரியங்களில் ஈடுபடவில்லை. சமீபத்தில் எனது மன்ற நிர்வாகிகளையெல்லாம் சந்தித்தேன். அப்போது அவர்களிடம் எடுத்துச் சொன்னது இதைத்தான். நடிப்பதற்காக எனக்குப் பணம் வருகிறது. நீங்கள் டிக்கெட் வாங்கிக் கொண்டு படம் பார்க்க வருகிறீர்கள். அதற்காக உங்களைச் சந்தோஷப்படுத்துகிறேன். அந்தவகையில் நான் ஒரு என்டெர்டெயினர் அவ்வளவுதான். இதைத்தாண்டி என்மீது அன்பு காட்ட விரும்பினால், படம் வெளியான முதல் வாரமே என் படத்தைத் தியேட்டரில் போய்ப் பாருங்கள். பிறகு உங்கள் வேலையைப் போய்ப் பாருங்கள். உழைத்து பணம் சம்பாதிப்பதே இன்று பெரிய சவாலாகிவிட்டது. தமிழ்நாட்டில் ஐம்பதாயிரம் பொறியியல் படிப்புகளுக்கான இடங்கள் காலியாக இருக்கின்றன. தொழில்நுட்பம் படிக்கிறவர்களுக்கே வேலை இல்லை. இப்படிப்பட்ட நிலையில் என்னைப் போன்ற நடிகர்கள் பின்னால் ஏன் அலைகிறீர்கள்? வேலை தேடி அலையுங்கள். அல்லது வேலையை உருவாக்கிக் கொள்ளுங்கள். உங்கள் வீட்டை, வீட்டில் இருப்பவர்களையும் ரசிக்க கற்றுக் கொள்ளுங்கள். பிறகு உங்களைவிட சிறந்த ரசிகர் யாராகவும் இருக்க முடியாது."



– ஜெய்



க்ரீன் ஹவுஸ் எஃபக்ட் இன்று உலகளாவிய சுற்றுச் சூழல் பிரச்னை. தொழிற்சாலைகள் வெளிப்படுத்தும் கார்பன் வாயுக்கள், வான மண்டலத்தை ஆக்கிரமிக்க பூமிக்கு ஜுரம் கண்டு அதன் வெப்பநிலை அதிகரித்து வருகிறது.

ஆனால் அந்தப் பிரச்னையின் தீவிரத்தை உலகம் இன்னும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. அந்த அபாயத்தை ஒரு சாம்பிள் காண்பிப்பதுபோல போன வாரம் (ஆகஸ்ட் இறுதியில்) உலகத்தில் நிறைய பகுதிகளை வெள்ளத்தில் மூழ்கடித்து, இயற்கை அன்னை 'முழிச்சிக்குங்கடா டேய்' என்று சாமியாடியிருக்கிறாள். இந்தியாவின் ஒரு பகுதி வெள்ளத்தில் மூழ்கி வழக்கம்

# உளதுவத்திக்

போல நிவாரணம், மீட்பு, மந்திரி, ஹெலிகாப்டர் பயணம் என்று கண்ணீர் சிந்திய அதே நேரத்தில் உலகின் மற்ற பகுதிகளில் என்ன நடந்தது என்று கவனியுங்கள்.



- கம்போடியாவில் நாலைந்து மாதங்களாக வறட்சி. மழை வரப்போவதில்லை என்று வழக்கமாகப் பயிரிடுவதில் பாதி அளவுதான் பயிரிட்டார்கள். அதற்கப்புறம் திடீரென்று வானிலை மாறி மழை பெய்ய ஆனந்த கும்மியடித்துக் கொண்டாடினார்கள். ஆனால் மழை நிற்காமல் பெய்து கொண்டே இருக்க, மழை நிற்க பிரார்த்தனை செய்யத் துவங்கிவிட்டார்கள். மழை ஓயவில்லை. வெள்ளமாக மாறி ஊரை மூழ்கடித்தது. கொஞ்ச நஞ்ச பயிர்களையும் நாசமாக்கியது. பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை நாலரை லட்சம். வியட்நாமிலும், தாய்லாந்திலும் அதே கதிதான்.

- பனி மழைக்கு மட்டும் பழக்கப்பட்ட ஐரோப்பாவில் இந்த முறை அடித்த நிஜ மழை, ஐரோப்பாவின் சரித்திரத்தில் இதுவரை காணாதது. பொருளாதார சுபிட்சமும், சகல வசதிகளும் கொண்ட ஐரோப்பாவிலேயே எண்பது பேருக்கு மேல் இறந்து போயிருக்கிறார்கள்.

- செக்கோஸ்லோவாக்கியாவின் தலைநகர் 'ப்ராக்' கிட்டத்தட்ட வெள்ளத்தில் மூழ்கியே போய்விட்டது. அங்கே இந்த அளவு வெள்ளம் என்பது கடந்த 800 வருடங்களிலேயே இதுதான் முதல் முறை.

- எல்பே நதியில் பெருக்கெடுத்துள்ள வெள்ளத்தினால் ஜெர்மனியின் சில நகரங்கள் வெள்ளத்தில் மூழ்கிப்போயின. 1945 இரண்டாம் உலகப்போருக்குப் பிறகு ஜெர்மனியில் நிகழ்ந்த மாபெரும் துயரம் இந்த வெள்ளம்தான் என்கிறார்கள் அதிகாரிகள்.

**“ அமெரிக்கா இந்த சீர்கேட்டை அதிகரிக்கிறது என்பதுதான் உண்மை. மற்ற விஷயங்களில் ஊருக்கெல்லாம் உபதேசம் செய்யும் அமெரிக்கா, இந்த விஷயத்தில் சுய நலம் காரணமாய்ச் சண்டித்தனம் செய்கிறது. ”**

• ஆஸ்திரியாவிலும் ஹங்கேரியிலும் டான்யூப் நதியில் வெள்ளம் ஒரு மணி நேரத்துக்கு ஒரு மீட்டர் வரை உயர்ந்து ஊரை சூழ் கடித்திருக்கிறது.

• ரஷ்யாவில் வெள்ளத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை 58. ரொமானியாவிலும் வெள்ளத்தினால் நிறையப் பேர் இறந்து போயிருக்கிறார்கள்.

• சீனாவில் நிலைமை ரொம்பவே மோசம். ஆயிரம் பேருக்கு மேல் இறந்து போயிருக்கிறார்கள். பாதிக்கப்பட்டவர்கள் ஒரு கோடி பேர்.

# கொளுத்தத் தடை?



இவை அத்தனையும் நிகழ்ந்தது ஒரே நேரத்தில் என்பதுதான் கவனிக்க வேண்டிய சங்கதி. ஜெர்மனியில் மட்டும் வெள்ளச் சேதம், மீட்புப் பணி அதன் பின் செப்பனிடும் பணி என்று எல்லாவற்றுக்கும் சேர்ந்து அவர்கள் ஒதுக்கியிருக்கும் பணம், அவர்கள் நிதி நிலைமையையே ஒரு கலக்கு கலக்கியிருக்கிறதாம். இந்தத் திடீர் வெள்ளம் பெரிய விவாதத்தைத் துவக்கியிருக்கிறது. ஜெர்மனியின் பிரதமர் இந்தப் பேய் மழைக்கும் வெள்ளத்துக்கும் காரணமான குளோபல் வார்மிங்கைக் குறைக்க அவரது அரசு போராடும் என்று நம்ம ஊர் அரசியல்வாதி மாதிரி சூளுரைத்திருக்கிறார்.

இதில் வேடிக்கை என்னவென்றால், இப்படி ஓர் அபாயம் வரும் என்று பல ஆண்டுகளாக இந்த நாடுகள் பேசி வந்திருக்கின்றன. பேச்சோடு நிற்காமல் 1992 இல் 170 நாடுகள் சேர்ந்து கார்பன் வாயு தடுப்பு பற்றி ஓர் உடன்படிக்கை வேறு நிறைவேற்றின. அதன் படி கார்பன் வாயுக்களின் பரவலை 1990 ஆம் வருடத்தின் நிலைக்கு உட்பட்டே ஒவ்வொரு நாடும் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ள ஒப்புக் கொண்டது. ஆனால் நடந்தது என்ன? ஐ.நா. புள்ளிவிவரங்களின்படி இந்தப் பத்து வருடத்தில் அது போன்ற வாயுக்களின் பரவல் 9 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. தொண்ணூறுகளில் அழிக்கப்பட்ட காடுகளின் அளவு 89 மில்லியன் ஹெக்டேர்கள். இது வெனிசுவேலா நாட்டின் பரப்பளவை விடப் பெரியது.

இதில் அமெரிக்காவின் பங்குதான் மிக மோசம். அமெரிக்க தொழிற்சாலைகளால் கார்பன் வாயுக்களின் பரவல் 18 சதவீதம் உயர்ந்திருக்கிறது. மற்ற நாடுகளைவிட நூறு சதவீதம் அமெரிக்கா இந்தச் சீர்கேட்டை அதிகரிக்கிறது என்பதுதான் உண்மை. மற்ற விஷயங்களில் ஊருக்கெல்லாம் உபதேசம் செய்யும் அமெரிக்கா இந்த விஷயத்தில் சுய நலம் காரணமாய்ச் சண்டித்தனம் செய்கிறது.

இதுவரை இல்லாத அளவுக்கு இந்தத் தடவை வெள்ளத்தின் கொடூரம் ஏன் என்று வெள்ளம் வடிந்தவுடன் எல்லா அரசாங்கங்களும் யோசிக்க வேண்டும். உலகத்தின் ஆறு பில்லியன் ஜனத் தொகையில் இரண்டு பில்லியன் மக்கள் கடலோரப் பகுதிகளில் வாழ்கிறார்கள். இது போன்று பூமியின் வெப்ப நிலை அதிகரித்து கடல் மட்டம் அதிகரிக்கும் சூழலில், மூன்றில் ஒரு பங்கு மக்கள் தொகை உடனடியாக பாதிக்கப்படக் கூடிய பேரபாயம் இருக்கிறது. இப்போதே சுதாரித்துக் கொண்டு, சுற்றுப் புறத்தை மாசு படுத்தாமல், உலகளாவிய நோக்கோடு செயல்பட வேண்டிய அவசியம் எல்லா நாடுகளுக்கும் இருக்கிறது. இல்லையென்றால் இன்னும் இருபது வருஷத்தில் ஒரு ஊதுவத்தி கொளுத்தினால்கூட அரசு அவர்களைப் பிடித்து உள்ளே வைத்து விடும் நிலைமை வந்துவிடும்.

– ஆனந்த் ராகவ்

படங்கள் : நன்றி : தி நேஷன்



"ஐயன்னா ஐயரா?" என்று ராதாகிருஷ்ணன் கேட்டார்.

"அது அப்படியில்லை."

சங்கரன் வாய்விட்டுச் சிரித்து ராதாகிருஷ்ணனைப் பார்த்தார்.

"ஐயன்னா பெரியவர்னு அர்த்தம். கொஞ்சம் குண்டா இருக்கேனோன்னோ என்னை குண்டன்னு சொல்றதுக்கு பதிலா ஐயன்னு சொல்றா. அப்படித்தானே ருக்மணி?"

"நீங்க சொன்னா சரியாத்தான் இருக்கும் மாமா."

ருக்மணி சொல்ல "அடி சக்கை, ருக்மணி குறுக்க கோல்

# மனம்

பாலகுமாரன்

"பொண்டாட்டி உட்பட என்னை முட்டாள், மடையன், ஒன்றுக்கும் லாயக்கில்லாதவன்னு பேசறாங்க. எல்லாத்தையும்விட இன்னிக்கு அடி வாங்கி நடுரோட்ல நாய்மாதிரி கிடக்கேன்யா."

17



போட ஆரம்பிச்சுட்டா. யாரையாவது இடறிவிடாம ஓய மாட்டா."

"ஐயன், நான் அதெல்லாம் சொல்லலை. நீங்களா ஏதாவது கற்பனை பண்ணாதீங்கோ. ஐயன் வாய்க்கால், ஐயன்குளம் அப்படின்னு தஞ்சாவூர்ல உண்டு. கோவிந்த திட்சிதர்னு நாயக்கர் ஆட்சில ஒரு மந்திரி இருந்தார். அவர் ஜனங்களுக்கு உபயோகமா நிறைய பண்ணார். அவரைப் பேர் சொல்லிக் கூப்பிடாம சேனாதிபதிகளும், படை வீரர்களும், பொதுமக்களும், பண்டிதர்களும் ஐயன்னு கூப்பிடுவா. ஐயன்

கடைத்தெருன்னு இப்பவும் தஞ்சாவூர்ல இருக்கு. அந்த கோவிந்த தீட்சிதர் சிலையும் பட்டீஸ்வரன் கோவில் துர்க்கைக்கு பின்னாடி இருக்கற தேனுகாம்பாள் கோவில்ல இருக்கு. அந்த ஐயன் இந்த ஐயன் மாதிரி பூசினாப்போல இருப்பார். அதனால இவரை ஐயன்னு கூப்பிடறோம்."

ருக்மணி விளக்கினாள். அங்கு மௌனம் நிலவியது.

"காவி பண்றதைப் பத்தி இன்னும் யோசனை பண்ணிட்டு சாதக பாதகங்கள் பத்தி நன்னா அலசி ஆராய்ஞ்சுட்டு அப்புறம் பேசலாம். நான் சொன்னா மாதிரி எங்கு இருப்பது உத்தமம். ஏன் இருக்க வேண்டும். இந்த ரெண்டு கேள்விக்கும் நீங்களா கேள்வி கேட்டு பதில் சொல்லுங்கோ. இது ஒரு பக்கம் இருக்கட்டும். தினசரி பூஜைகள் உண்டா?"

ஐயன் சங்கரன் கேள்வி கேட்டார்.

# உருகுதே...



"உண்டு. அவர் விஷ்ணு ஸஹஸ்ரநாமம் சொல்வார்."

"அடிசக்கை. நீ?"

"நான் சௌந்தர்யலஹரி சொல்வேன். எட்டு வயசுல எங்கம்மா சொல்லிக் கொடுத்தா. சௌந்தர்யலஹரி சொல்லிண்டே எல்லா படத்தையும் துடைப்பேன். எல்லாப் படத்துக்கும் சந்தன குங்குமம் வைப்பேன். எல்லாப் படத்துக்கும் பூ வைப்பேன். முடியறபோது நைவேத்தியம் காண்பிச்சு நமஸ்காரம் பண்ணிட்டு கற்பூர ஆரத்தி காண்பிப்பேன். சௌந்தர்யலஹரி உட்கார்ந்துண்டு சொல்றதுக்கு பதிலா பூஜை ரூம்ல சுத்தி சுத்தி வந்து சொல்றது என் வழக்கம். இது தவிர பூஜைன்னு பெருசா ஒண்ணும் பண்றதில்லை."

"நீங்க மந்திரஜபம் எடுத்துண்டா நன்னா இருக்குமே."

"வீட்ல நான் ஒருத்திதான் சமைக்கணும். மடியெல்லாம் பார்க்க முடியலை."

"ஒண்ணும் பார்க்க வேண்டாம். நன்னா சொல்லலாம். வேலை நேரத்துல மட்டும் சொல்லாத, எல்லா நேரத்துலயும் மந்திர ஜபம் உள்ளுக்குள்ள ஓடிண்டிருக்கும்."

"நான் கொஞ்சம் சமஸ்கிருதம் படிச்சேன். அவருக்கு அவ்வளவா தெரியாது."

"அதனால என்ன? வடமொழி தெரியணும்னு அவசியமில்லை. நல்ல உச்சரிப்போட சரியா சொன்னா போதும். செய்யணும்கற வைராக்கியம் மட்டும்தான் முக்கியம். மொழி முக்கியமில்லை. ஜபம் கறது என்ன? உனக்கு ஒரு காரியமாகணும். ஒருத்தரைப் போய்ப் பார்க்கணும். திரும்பத் திரும்ப ஞாபகப்படுத்திண்டு அவரைப் பார்க்கணும், அவரைப் பார்க்கணும்னு சொல்லிண்டு சரியான நேரத்துக்கு அவரைப் போய்ப் பார்க்கறோமில்லையா. அடிக்கடி சொல்லி ஞாபகப்படுத்திக்கிறோமில்லையா. இடுப்புல கொத்து சாவி இருக்கா இருக்கா இருக்கான்னு கை தொட்டுப் பார்க்கறதில்லையா, பாக்கெட் மணிபர்ஸ் வச்சுண்டு காசு இருக்கான்னு ஞாபகப்படுத்திக்கறதில்லையா, அதேபோல ஒரு விதமான சப்தத்தை இடையறாது திரும்பத் திரும்பச் சொல்ல எதை நோக்கி முன்னேறு கிறோமோ அதைப் பற்றிய ஒரு பிடிப்பு அதற்கான வலிவு ஏற்படும். நீங்க ரெண்டுபேருமே மந்திரஜபம் எடுத்துக்கணும்னு எனக்கு ஆசை."

"நிச்சயமா எடுத்துக்கறோம்."

ரேவதி சந்தோஷமாகச் சொன்னாள்.

ராதாகிருஷ்ணன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்ன சந்தேகம். இவன் உண்மையா இல்லை ஃப்ராடா அப்படின்னு சந்தேகமா. இன்னும் ரெண்டு மூணு தடவை ஆராய்ந்து இவனைப் பார்த்துட்டுதான் இவனோட பழகணும்னு ஒரு எண்ணமா?"

"அப்படியில்லை."

"அப்படித்தான். உள்ள அந்த சந்தேகம் தான் ஓடறது. நீங்க நினைச்சாப் போலயே ரெண்டு மூணு தடவை பார்த்துப் பழகிட்டு அதுக்குப்பிறகு மந்திரஜபம் கத்துக்கலாம்."

"மாமா இப்போ சொல்லிக் கொடுங் களேன்."

ரேவதி பரபரக்க, "இல்லை. ராதாகிருஷ் ணனுக்குத் தெளிவு வந்த பிறகு கத்துக்கறது தான் உனக்கு உத்தமம். அவரைத் தாண்டி நீ போறது உனக்கும் நல்லதில்லை. அவருக் கும் நல்லதில்லை. நீங்க கத்துக்கற மந்திரத் துக்கும் நல்லதில்லை."

"அவருக்கொண்ணும் சந்தேகம் இல்லை. என்ன பண்றதுன்னு தெரியாம கொஞ்ச நேரம் மலங்க மலங்க முழிப்பார். எல்லா விஷயத்துக்கும் அவர் அப்படித்தான்."

"இருக்கட்டுமே, இன்னிக்கு முழுக்க முழிக் கட்டுமே. நாளைக்குத் தெளிவாகட்டுமே. தெளிவாறபோது வந்து கத்துக்கட்டுமே. ருக்மணி இவாளுக்கு ஏதாவது பிரசாதம் கொடு."

சங்கரர் முடித்துவிட்டார் என்பதை அவர் பிரசாதம் கொடுக்கச் சொன்னதன் மூலம் உறுதிப்படுத்தினார்.

அவர்களுக்குப் பின் வந்த ஒருவரை அவர் உற்றுப் பார்க்க ஆரம்பித்தார். வாருங் கள் என்று அருகே அழைத்தார். உட்காரச் சொன்னார்.

அவரை உட்கார வைத்து அவரையே பார்த்துக்கொண்டு சட்டென்று திரும்பி ரேவதியைப் பார்த்து புன்னகை செய்து ராதாகிருஷ்ணனை வாஞ்சையோடு பார்த் தார். அவர்களுக்கு உண்பதற்கான பிரசாத மாக சிறிது சர்க்கரைப் பொங்கலும், சுண் டலும் தரப்பட்டன.

அவற்றை பிளாஸ்டிக் பையில் போட்டுக்கொடுத்தார்கள். குங்குமம் கொடுத்தார்கள். ரேவதிக்குப் பூ கொடுத்தார் கள். உடனே தலையில் பூவை வைத்துக் கொள்ளும்படி ருக்மணி வற்புறுத்தினாள்.

ரேவதியும் ராதாகிருஷ்ணனும் மறுபடி யும் வணங்கினார்கள். அருகே போய் சங்கரனின் மனைவியை வணங்கினார்கள்.

சங்கரன் சட்டென்று கூர்மையானார்.

"ரெண்டு பேரும் அந்த இடத்துல கொஞ்ச நேரம் நில்லுங்கோ" என்று ஆஞ்ச நேயருக்கு அருகே கை காட்டினார்.

இரண்டு பேரும் நேர் எதிரே சங்கரனைப் பார்த்து ஆஞ்சநேயருக்கு அருகே நின்று கொண்டிருந்தார்கள்.

சங்கரன் கூர்மையாக எதிரே உள்ளவரை, ருக்மணியை, ராதாகிருஷ்ணன் ரேவதியை உறுத்துப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அவர் சிந்தனை எதையோ தேடிக் கொண்டிருப்பதுபோல் இருந்தது. அவர் முக பாவனையில் மெல்ல கடுமை ஏற்பட்டது.

---

**"எங்கேடி, நம்ம இடைக் குட்டி பிளாக்ஷீப்பைக் காணோம்?"**

**"'பாபா' பார்க்கப் போயிருக்கான்!"**

**- தஞ்சை தாமு**

---

யாரோ தடதடவென்று மாடிப்படி ஏறி வந்தார்கள். உள்ளுக்குள் நுழைந்தார்கள்.

"ஐயா...ஐயா..." என்று வேகமாக அவரை நோக்கி வந்தார்கள்.

அந்த வீட்டுக்காரரின் மகன் அவரை நோக்கி வந்தான். அவன் முகத்தில் பல இடங்களில் அடிபட்டு ரத்தம் வழிந்து கொண்டிருந்தது.

"ஐயா.. என்னை ஆள் வச்சு அடிக்க ட்ரை பண்றாங்க ஐயா. அந்த ராதா கிருஷ்ணன் என்னை ஆள்விட்டு அடிக் கறான்யா" என்று வேகமாகச் சொன்னான்.

ராதாகிருஷ்ணனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவர் தடுமாற, ரேவதி பிடித் துக்கொண்டாள்.

"ஒரு லேடி சைக்கிள்ல வந்து நேரா கார்ல முட்டினா, இறங்கி திட்டினேன். அதை வச்சு நாலு பேர் சேர்ந்து பிச்சு எடுத்துட்டாங் கய்யா. முதுகுல, மூஞ்சியில அடிச்சிட்டாங் கய்யா. ரொம்ப அடிச்சிட்டாங்கய்யா."

அவன் குனிந்து வயிற்றைப் பிடித்துக் கொண்டான்.

ராதாகிருஷ்ணனுக்கு அவன் முதுகைத் தடவி விட வேண்டும்போல் இருந்தது. உட னடியாக மருத்துவமனைக்குக் கூட்டிப் போக வேண்டும் என்று மிகக் கவலையோடு அவனைப் பார்த்தார்.

ராதாகிருஷ்ணன் பார்த்ததை சங்கரன்

உற்றுப் பார்த்து மெல்லியதாய் ஒரு சொடுக்கு நேரம் புன்னகை செய்தார். பிறகு மறுபடியும் கூர்மையானார்.

"இது ரோட்ல போற ஜனங்க செய்ததா, இல்லை, திட்டமிட்ட அடிதடியா?"

ரேவதியை என்னடி இது என்பது போல் பார்த்தார்.

சங்கரன் அந்தக் குச்சியை வாங்கி உறுதியாகப் பிடித்துக்கொண்டார். மெல்ல நெஞ்சில் வைத்துக்கொண்டார். ஆழ்ந்து மூச்சுவிட்டு அந்தக் குச்சியையே உற்றுப் பார்த்தார். பிறகு வலது பக்கம் பொத்தென்று தரையில் போட்டார். குச்சியை ஒரு அற்பமான பொருள்போல கவனித்தார்.



"இங்க வலிக்கிறதா?" அவன் கழுத்தைத் தடவினார்.

"ஆமாய்யா."

"வேற எங்க வலிக்கறது?"

அவன் சட்டையைத் தூக்கி மார்புக்குக் கீழே இரைப்பைக்கு மேலே இடம் காண்பித்தான். அந்த இடங்கள் வெந்து போயிருந்தன. மெல்ல சங்கரன் தன் கைகளால் வருடிவிட்டார். அவன் முகத்தைத் துடைத்தார். வலக்கையை அவன் தலைமீது வைத்தார். "இன்னும் ரெண்டு நிமிஷத்துல சரியாப் போயிடும். பயப்படாத. யார் அடிச்சிருப்பாங்கன்னு நினைக்கற?"

"அந்த ராதாகிருஷ்ணன்தான்."

அவன் தொடர்ந்து பேசினான்.

ரேவதி சட்டென்று ராதாகிருஷ்ணனைப் பார்த்து வாயைத் திறக்கக் கூடாது என்று தன் உதட்டின்மீது விரல் வைத்துச் சைகை செய்தாள்.

ராதாகிருஷ்ணன் பெரும்பாடுபட்டு தன்னுடைய மறுப்பை அடக்கிக் கொண்டார். வேடிக்கை பார்த்தார்.

"நான் ஆள்வச்சு அவரை மிரட்டினேன். பதிலுக்கு அவரு என்னை அடிக்கச் சொல்லியிருக்காரு. ரொம்ப மோசமான ஆளுய்யா அவரு. அது என் சொத்து. என் சொத்தைக் கேட்கறதுக்கு எனக்கு உரிமையில்லையா?"

"சரி இருக்கு. அதுக்கு ஆள் வச்சு, மிரட்டுவானேன்?"

"என்ன சொன்னாலும் காலி பண்ண மாட்டேன்றாரே. கோர்ட்டுக்குப் போவேன். முடிஞ்சா பார்த்துக்கோன்னு சொல்றாரே."

"அதான் எங்கிட்ட வந்துட்ட இல்லை.

"திட்டமிட்ட அடிதான்."

"என்னன்னு சொல்லி அடிச்சாங்க? இவனெல்லாம் கைய காலை வெட்டினாத்தான் சரியா வரும்னு சொல்லி அடிச்சாங்க."

"அடிச்சது யாருன்னு தெரியுமா?"

"தெரியலை. ஒருத்தரைக்கூட அடையாளம் தெரியலை. தவில் குச்சி மாதிரி வச்சருக்கான். அதனாலதான் கழுத்துல குத்தினான். நெஞ்சல குத்தினான். வயித்துல குத்தினான். பளிச்பளிச்சுனு மூஞ்சியில அடிச்சான். அடி தாங்க முடியலைய்யா. கனமான கட்டையா. அவன் ஒரு தடவை அடிச்சபோது நான் நகர்ந்து போயிட்டேன். தவில்குச்சி கார்ல போய் விழுந்துடுச்சு. இதோ பாருங்க இதுல தான் அடிச்சாங்க."

மழமழவென்று ஓர் அடிக்கும் குறைவாய் உறுதியான கிட்டத்தட்ட தவிலை வாசிப்பவர் குச்சி போன்ற ஒரு விஷயத்தை அவன் காட்டினான்.

இதனால் வயிற்றில் குத்தினால் முகத்தில் அடித்தால் தாங்க முடியாத வலி ஏற்படும்.

மறுபடியும் ராதாகிருஷ்ணன் பதறினார்.

நான் அந்த விஷயத்தைக் கவனிச்சண்டிருக்கறபோது நீ எதுக்கு இந்த மாதிரி வேகமான காரியங்கள்ல ஈடுபடற?"

"சும்மா மிரட்டிப் பார்க்கலாம்னுதான் போனேன்."

"மிரட்டறதுக்குப் பயந்துட்டா வீட்ல இருக்கற டி.வி.யை உடைப்ப. ரேடியோவை உடைப்ப, நாஸ்தி பண்ணிடுவேன்னு மிரட்டிட்டு வந்துடுவ. உன் மிரட்டலுக்குப் பயப்படலைன்னா வேற விதமா நடந்துப்பியா?"

அவன் மௌனமாக இருந்தான்.



நம் பள்ளிக்கூடங்களில் உலக வரலாறு கற்றுக் கொடுக்கும் முறை மிகவும் அதிருப்தியாக இருக்கிறது. வரலாறு பாடம் கற்றுக் கொடுப்பதன் நோக்கம், சில தேதிகளையும் சம்பவங்களையும் மாணவர்கள் உருப்போட்டு மனப்பாடம் செய்ய வேண்டுமென்பதல்ல; இதைப் பெரும்பாலான ஆசிரியர்கள் உணர்ந்து கொள்வதில்லை. ஒரு குறிப்பிட்ட தளபதியோ அல்லது வேறெவரின் பிறந்தநாளையோ அல்லது ஒரு யுத்தம் ஆரம்பமான தேதியையோ ஒரு மன்னரின் பட்டாபிஷேக நாளையோ அறிந்து கொள்வதில் மாணவர்களுக்கு என்ன சிரத்தையிருக்க முடியும்?

— அடால்ப் ஹிட்லர்

"ராதாகிருஷ்ணனா உன்னை அடிச்சுருப்பாருன்னு நினைக்கற?"

"வேற யாருங்கய்யா எனக்கு எதிரி?"

"இருக்கலாம். உனக்கு நிறைய பேர் எதிரி இருக்கலாம். நீ முன்னுக்கு வரதை விரும்பாதவங்க நிறைய பேர் இருக்கலாம். ஏன் ராதாகிருஷ்ணனைச் சொல்ற. அவருக்கு அந்த இடம் மலிவான விலையில இருக்கு. வேற இடத்துக்குப் போகணும்னா பகடி கேட்கறார். பகடி கொடுக்கறேன்ற மாதிரி பேச ஆரம்பிச்சாக்க ராதாகிருஷ்ணன் இறங்கி வந்துடுவாரு. நானும் படியேறி அவங்க வீட்டுக்குப் போய் இந்த இடத்தை விட்ருங்க, அந்தப் புள்ளைக்கு வேணும்னு சொல்லியிருப்பேன். எல்லாத்தையும் விட்டுட்டு எனக்குத்தான் எல்லாம் தெரியுங்கறமாதிரி உள்ள புகுந்து ஆட்களோட மிரட்டினா நல்லாவா இருக்கு? சரி மிரட்டற அளவுக்கு உனக்கு என்ன கோவம்?"

"எனக்குக் கோவம் ஒண்ணுமில்லை. அவசரம்."

"என்ன அவசரம்?"

"என் பொண்டாட்டி ரொம்ப கேலி பண்றா."

"என்ன கேலி பண்றா?"

"அவ பணக்கார வீட்டுப் பொண்ணு. எங்களுக்குச் சொத்துபத்து அதிகம் இருக்குன்னு சொல்லி கல்யாணம் பண்ணிட்டாங்க. வந்து பார்த்தா இதுவொரு சொத்துதான் இருக்கு. இந்தச் சொத்து வேர்த்து வர காசு எதுக்கும் உதவாது. இதைத்தான் சொத்துன்னு சொன்னீங்களா. இதுதான் உங்க சம்பாத்தியமா. இதைவிட்டு வேற சம்பாதிக்க முடியாதான்னு சொல்றா."

"நீ ஏன் சம்பாதிக்கலை?"

"பழக்கமில்லையா."

"என்னய்யா பேசற?"

சங்கரன் கூர்மையாக அவனைப் பார்த்தபடி கேட்டார்.

"வேலை செய்து பழக்கமில்லை. சின்ன வயசுலேர்ந்து காசு யாராவது கொடுப்பாங்க. வாங்கிட்டு ஊர் சுத்துவனே தவிர ஒரு வியாபாரத்துல ஈடுபட எனக்குத் தெரியவே இல்லை. அப்படி ஈடுபட்ட போதெல்லாம் சுத்தி இருக்கறவங்க ஏமாத்தறாங்களே தவிர, என்னை யாரும் எதுக்கும் எப்பவும் கை தூக்கி விடலை. பொண்டாட்டி உட்பட என்னை முட்டாள், மடையன், ஒன்றுக்கும் லாயக்கில்லாதவன்னு பேசறாங்க. எல்லாத்தையும்விட இன்னிக்கு அடி வாங்கி நடுரோட்ல நாய்மாதிரி கிடக்கேன்யா."

அவன் மறுபடியும் முகம் பொத்திக் கொண்டு அழுதான்.

ராதாகிருஷ்ணனுக்கு அவன் நிலைமை புரிந்தது.

ஒரு குழந்தையின் தலையை வருடுவது போல சங்கரன் மிகுந்த கருணையோடு அந்த இளைஞனின் தலையை வருடிக் கொடுத்தார்.

(தொடரும்)

அன்பே சிவம்! சிவமே செல்வம்!



# பசிப்பிணி போக்கும் அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில்
# தீபாவளி அமாவாசையன்று
# அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புனித க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...**

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்டின் நான்காம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை!

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை தீபாவளித் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

கயிலாயத்தில் எம்பெருமானின் ஜடாமுடியிலிருந்து பெருகும் கங்கை நீர் காரணமாகப் பசியில் வாடுகிறாள். சிவபெருமானின் ஆணைப்படி காசி சென்று ஸ்ரீ அன்னபூரணியை உத்தரவாகினியாகப் பாய்ந்து வணங்கி, அம்பிகையின் அருள் அக்னியால் நிவாரணம் பெறுகிறாள். சிவபெருமான் உலக ஜீவராசிகளின் நலம் கருதி அப்போது ஸ்ரீ அன்னபூரணியிடம் அன்னம் யாசித்துப் பெறுகிறார். இதன்மூலம் பிரபஞ்சம் முழுமைக்கும் உணவுபடைக்கும் தாயாக ஸ்ரீ அன்னபூரணி காசியில் கொலுவீற்றிருக்கிறாள். ஒவ்வொரு தீபாவளி அமாவாசையன்றும் அன்னாபிஷேகம், லட்டு தேர், அன்னக்கூடு போன்றவை காசியில் மிக விசேஷமாக நடத்தப்படுகிறது. ஸ்ரீ அன்னபூரணி அருளால் வாழ்நாள் முழுவதும் உணவுத்தட்டுப்பாடின்றி ஆரோக்கியமாக வாழ அனைவரையும் தீபாவளித்திருநாளில் 'ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்' மூலம் அன்னதானம் செய்ய அன்புடன் அழைக்கின்றோம்.

★ தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
★ ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்தநாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் ஏதாவது நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பும் காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு வருடமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், "ஆன்மீகம்" மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்நதிகளில் மூலவருக்கும் அர்ச்சனை செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

**காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், ச்ராத்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.**

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000/- அனுப்பும்போது யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். பிண்ட பிரதானத்திற்காக ரூ.5000/= அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை பத்து ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்குப் பணம் அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான "அக்ஷய வடத்தின்" படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

**அன்னதான சேவையில் ஈடுபட விரும்பும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai-4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப் பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.**

*Cheque/D.D./M.O அனுப்ப வேண்டிய முகவரி:*


# ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**
**68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.**
**Tel: 4959302 Fax: (044) 4616311 E-mail:siva siva@vsnl.net**


**தீபாவளித்திருநாளில் (அமாவாசையில்) அடியார்களுக்கு அமுதளிப்பது சிவனுக்குச் செய்யும் ஜீவசேவையாகும்!**

# இனி பிள்ளை வரம் வேண்டி எங்கும் அலைய வேண்டாம்

## ஹோமியோ - சித்தா - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

குழந்தை இல்லாத தம்பதிகள் பிள்ளைவரம் வேண்டி இனி எங்கேயும் அலைய வேண்டாம். குழந்தை பெறாமைக்கு குறைபாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி. ஹோமியோ-சித்தா-ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் ஆண் மலட்டுத் தன்மையும், பெண் மலட்டுத் தன்மையும் அறவே நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறார்கள் டாக்டர் **ஏ.அர்ஜுனா, டாக்டர் வி.ஏ.ஆண்டாள்.** இவர்கள் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறார்கள். திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னையில் வடபழனி 100 அடி சாலையிலும் வெற்றிகரமாக சிகிச்சை நிலையங்கள் நடத்தி வருகிறார்கள்.



• திருவண்ணாமலை மாவட்டத்தில் உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் குழந்தை பெற்ற ரங்கநாதன் - கீதா தம்பதியர். டாக்டர் A. அர்ஜுனா - டாக்டர் ஆண்டாள் அர்ஜுனாவுடன் உள்ளார்கள்.

குழந்தைப் பெற்றுக் கொள்ள சிகிச்சைக்கு வரும் தம்பதிகளை டாக்டர் **ஏ.அர்ஜுனா** முதலில் கணவனின் உயிரணு உற்பத்தியை விந்து பரிசோதனையின் மூலம் குறைபாடுகளைக் கண்டறிகிறார். பிறகு மனைவியின் குறைபாடுகளை சில பரிசோதனைகளின் மூலம் தெரிந்து கொண்டு ஆண் மலட்டுத் தன்மை, பெண் மலட்டுத்தன்மை நீங்கி குழந்தை பெற முக்கூட்டு மருத்துவ சிகிச்சையளிக்கிறார்.

''சென்னை கோடம்பாக்கத்தில் சம்பத் என்ற நபர் என்னிடம் சிகிச்சைக்கு வரும்போது அவரது விந்து பரிசோதனையில் டோட்டல் கவுண்ட் 70 மில்லியனும், மொட்டிலிட்டி 70%ம் இருந்தது. 2 மாத சிகிச்சைக்குப்பின் விந்து பரிசோதனையில் டோட்டல் கவுண்ட் 142 மில்லியனும், மொட்டிலிட்டி 80% உயர்ந்துள்ளது.

இது முக்கூட்டு மருத்துவத்தில் ஒரு சாதனையாகும்.

சென்னை புளியந்தோப்பைச் சேர்ந்த, அறவே உயிரணு இல்லாத ரவி எங்களிடம் சிகிச்சை பெற வந்து 2 மாத முக்கூட்டு மருந்தில், நல்ல முறையில் உயிரணு உற்பத்தியாகியுள்ளது.

கோவை பெரியநாயக்கன் பாளையத்தைச் சேர்ந்த லோகநாதனுக்கு அறவே உயிரணு இல்லை. அவருக்கு ஒரே மாத முக்கூட்டு மருந்தில் கவுண்ட் 110 மில்லியன், மொட்டிலிட்டி 20% உற்பத்தி ஆகியுள்ளது.

உயிரணு குறைவாக இருந்த கேரள மாநிலம் பாலக்காட்டைச் சேர்ந்த சேதுமாதவனுக்கு 16.6.2000ல் கவுண்ட் 20மில்லியன், மொட்டிலிட்டி 50% இருந்தது. 13.7.2001ல் கவுண்ட் 60மில்லியன், மொட்டிலிட்டு 50% என்று முன்னேற்றம் கண்டது.

மகாராஷ்டிர மாநிலம் நியூபாம்பே வாஷி பகுதியைச் சேர்ந்த ஜெயராமனுக்கு உயிரணு குறைவாக இருந்தது. 28.12.2000ல் இருந்த கவுண்ட் 45 மில்லியன், மொட்டிலிட்டி 50% ஒரே மாதத்திற்குள் 26.1.2001ல் கவுண்ட் 92மில்லியன், மொட்டிலிட்டி 30% என்று உயர்ந்தது.

சென்னையைச் சேர்ந்த, உயிரணு குறைவாக இருந்த ரகுவுக்கு 6.5.2000ல் கவுண்ட் 29 மில்லியன், 50% மொட்டிலிட்டி இருந்தது. எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் அவருக்கு 20.8.2000ல் கவுண்ட் 160 மில்லியன் உயர்ந்தது.

சென்னை வண்ணாரப்பேட்டையில் மனோகரன் என்பவருக்கு 6 மாத முக்கூட்டு சிகிச்சையில் உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

காஞ்சீபுரத்தில் கணேசன் என்பவருக்கு சில மாத சிகிச்சையில் உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

### ஆண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்திருந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந்தாலும், விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம் அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், தன்னைவிட வயது முதிர்ந்த பெண்களிடம் தாம்பத்திய உறவு கொண்டாலும் அவர்களால் புத்திர பாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது. அவர்களுக்கு முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்கிறோம்.

## பெண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:

பெண்களில் கருப்பை ஓவரி வளர்ச்சியே இல்லாமல் இருப்பவர்களுக்கு வளர்ச்சியடைச் செய்கிறோம். வீட்டு விலக்கு ஒழுங்கில்லாதவர்களுக்கு ஒழுங்குபடுத்துகிறோம். சிலருக்கு வீட்டு விலக்கின் போது வரும் சூதக வயிற்றுவலியால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையை முக்கூட்டு மருந்துகளால் நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்கு கருமுட்டை உற்பத்தி இருக்காது. இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கருமுட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருமுட்டை உண்டாக்கி கருவுறச் செய்கிறோம். பெண்களிடமுள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது. அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி கருத்தரிக்க செய்கிறோம்.

சென்னை புதுப்பேட்டையைச் சேர்ந்த ஒரு முஸ்லிம் தம்பதிகளுக்கு எங்கள் வைத்தியத்துக்குப் பின், இரட்டைக் குழந்தை பிறந்தது.

திருவண்ணாமலை நகரத்தைச் சேர்ந்த ஒரு தம்பதிக்கு மூன்று மாத மருந்து சாப்பிட்டதில் தற்போது அந்தப் பெண் நான்கு மாத கர்ப்பவதியாக இருக்கிறார்.

சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா – அலமேலு தம்பதியர் திருமணமாகி நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, அவர்களுக்கு முக்கூட்டு சிகிச்சையளித்ததில், திருமதி ராஜா வுக்கு கடந்த 6.3.2001 அன்று ஆண் குழந்தை பிறந்துள்ளது.

பெங்களூரைச் சேர்ந்த ஜி.பி. மோகனவேலு கீதாஞ்சலி தம்பதிக்கு எங்களது முக்கூட்டு சிகிச்சையால் ஆண், பெண் குழந்தைகள் பிறந்துள்ளன. மதுரையைச் சேர்ந்த அரசாங்கத்தில் பணிபுரி யும் ஒரு மாவட்ட அதிகாரிக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்து எங்களிடம் சிகிச்சை பெற்ற அவரது மனைவிக்கு கடந்த 5.6.2000ல் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ சென்னை கிண்டியில் கோபால் – சித்ரா தம்பதிகளுக்கு பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்து எங்கள் முக்கூட்டு சிகிச்சையினால் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அவலூர் பேட்டையில் சந்திரமூர்த்தி தம்பதிகளுக்கு ஆண் மகன் பிறந்துள்ளது.

❍ சென்னை, வடபழனி, கங்கையம்மன் கோயில் தெருவைச் சேர்ந்த, எங்களிடம் சிகிச்சைப் பெற்ற ஒரு முஸ்லீம் பெண்மணி புத்திரபாக்கியம் அடைந்துள்ளார்.

❍ தஞ்சாவூர் புரசகுடியில் சௌந்தர்ராஜன் - வனரோஜா தம்பதிகளுக்கு ஒரு பையன் பிறந்துள்ளது. மீண்டும் வனரோஜா தற்போது கர்ப்பமாக உள்ளார்.

❍ பாண்டிச்சேரி கணபதிபட்டில் சாந்தி செல்வராஜ் தம்பதிகளுக்கு பெண்ணும், பையனும் பிறந்துள்ளார்கள். செஞ்சியைச் சேர்ந்த முருகன் - தமிழரசிக்கு ஒரே மாத மருந்தினால் உயிரணு உற்பத்தி ஆகி, கருக்குழாய் அடைப்பு நீங்கியதால் கடந்த 20.8.02ல் ஆண் குழந்தை (சுகப்பிரசவத்தில்) பிறந்துள்ளது.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல வர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளி நாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு என்றார்'' **டாக்டர் அர்ஜுனா**. சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திரபாக்கியம் அடைய **டாக்டர் ஏ. அர்ஜுனா**, அவரது மனைவி **டாக்டர். வி.ஏ.ஆண்டாள்** அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

**நவீன வைத்தியாலயா** ஹோமியோபதி - சித்தா - ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

**சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம்: எண் 65 நெற்குன்றம் பாதை, (டி.எஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை - 600 026. போன் : 4833464 எஸ்டிடி.044**

**செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம் -**
**வீடு : நெ. 30, பிராமணர் தெரு, ஈஸ்வரன் கோயில் அருகில், வந்தவாசி.**
**திருவண்ணாமலை மாவட்டம் - 604 408**

**புதிய தொலைபேசி எண்கள்**
**225208, 226180**
**STD 04183**

ADVT



• ஆர்.வீ.

விஐபிங்க போறதைப் பார்த்தேன். சட்னு நானும் உள்ளே பூந்துட்டேன். இன்னும் பத்து நிமிஷம் பொறுத்துக்க அண்ணே... விழா முடிஞ்சதும் கற்பகாம்பாள் மெஸ்கிட்டே வர்றேன்..."

அமரத் தோட்ட பூபதியைக் கண்டதும் 'பக்' என்று சிரித்துவிட்டான் ஆ.பூ.

"இன்னாடா...! குங்குமப் பொட்டெல்லாம் வைச்சுகினு கிரே!"

"விழாலே குடுத்தாங்க அண்ணே! காமாட்சி அம்மன் பிரசாதம்!"

# பிரம்மஞானியும்

"எங்கே பூட்டான்? கரீட்டா வந்துடுவானே?" என்று கவலையோடு சுற்றும் முற்றும் பார்த்துக்கொண்டே நின்றான் ஆல் தோட்ட பூபதி.

செல்ஃபோன் அலறியது.

அட! அவனேதான்!

"அண்ணாத்தே! அமரத் தோட்ட பூபதி பேசறேன்."

"இன்னாடா... தலைவரு கேட்ட உருவ பொம்மை ரெடியா? நாளைக்கு எரிக்கணும்டா!"

"நைட்டு பத்துமணிக்கு தான் ரெடியாவும்."

"எங்கேயிருந்துடா பேசற?"

"எதிர்லே பாரு. பாரதிய வித்யா பவன் இருக்குல்ல. அங்கே விழா நடக்குது. அதிலே இருக்கேன்."

"டேய்...! பெரிய பெரிய மனுசனுங்கோ, படிச்சவங்கோ வர்ற இடத்துலே உனக்கு இன்னாடா சோலி?"

"உனக்காக வெயிட் பண்ணிக்கினு இருந்தேன். நம்ப முன்னாள் ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன், நல்லி குப்புசாமி, நடிகரு நீலு, வக்கீல் சுமதி, நடிகை வைஜெயந்தி மாலா, குமரி அனந்தன், ஆர்.எம். வீரப்பன்'னு நிறைய



• விழா மேடையில்...

"இன்னாடா ஏஸி ஹால்ல சாமி கும்பிட்டாங்களா...?"

"கல்கி சதாசிவம் நூற்றாண்டு விழா அண்ணாத்தே."

"நானும் கேள்விப்பட்டிருக்கேன்டா! கல்கி ஸாரோட கதையெல்லாம் படிச்சிருக்கேன். ஐயா சதாசிவமும், கதையெழுதுன கல்கியும், படா தோஸ்துங்க. ஆங்! பாட்டு படிக்கற எம்.எஸ். அம்மா புருஷன்தானே?"

"ஆமாம். சதாசிவம் ஐயாவோட நிழலாவே இருந்த. ஆத்மா ஸாரும், முரளி ஸாரும் விழா ஏற்பாடுகளை பிரமாதமா செஞ்சிருந்தாங்க. அஞ்சு மணிக்கே கூட்டம் சேர்ந்துடுச்சு அண்ணே. அந்த அம்மா வராதது மட்டும்தான் குறை. மத்தபடி இப்படியொரு விழாவை நான் பார்த்ததேயில்லை! முதல்லே குட்டி குட்டி பசங்கள்ளாம் மேடையில வந்து வாத்யம் வாசிச்சாங்க. விநாயக்ராம் சிஷ்யப் பிள்ளைங்களாம். ரொம்ப ஷோக்கா இருந்துச்சு. அதுக்கப்புறம் ஒரு மணி நேரம் வேத வழிபாடு நடந்துச்சு."

"அதெல்லாம் உனக்கு ஒண்ணுமே புரிஞ்சிருக்காதே" என்று ஆ. பூபதி, கிண்டலாய்க் கேட்க,

"அய்யே...! உனக்கு மட்டும் தெரியுமாக்கும்! ஏதோ கேட்க

நல்லா இருந்துச்சு... அம்புடுதேன்!"

"சரி... மேலே சொல்லு!"

"செதலபதி பாலசுப்ரமணியம்னு ஒரு பெரியவர் - 'சதாசிவ பஜனமே'னு ரொம்ப உருக்கமா, இறை வணக்கம் பாடினாரு. விழா பெரியவர் பெயரும் சதாசிவமா? ரொம்ப கரீட்டா போச்சு."

"தாமரையாலே குளத்துக்குப் பெருமை; அந்த இரண்டுக்கும் சந்திரனாலே பெருமை; சந்திரனாலே வானத்துக்குப் பெருமை. வானத்தாலே உலகுக்கே பெருமை" அது மாதிரி, அசந்து போகிறான் ஆ.தோ.பூ.

"மெய்யாலுமே, நல்லா ஆக்ட் கொடுக்கறேடா" என்று சகாவைப் பாராட்ட, அ.தோ.பூபதிக்கு விழா 'மூடு' அதிகமானது.

"டாக்டர் வீழிநாதன்னு ஒரு ஐயா பேசினாரு. எல்லாரும் சம்பாதிச்ச பணத்தைத் தானே தர்மம் பண்ணுவாங்க. தர்மம் பண்றதுக்குன்னே சம்பாதிச்ச திவ்ய தம்பதினு ரொம்ப பெருமையா குறிப்பிட்டாரு."

"அது நிஜந்தான்டா... எம்.எஸ்.சுப்புலட்சுமி அம்மா பண்ற கச்சேரியிலே வர்ற துட்டு

# பூபதிகளும்...

ராஜாஜி, சதாசிவம் மாமா, எம்.எஸ். அம்மா, அமரர் கல்கி, இவங்களாலே ஒருத்தருக்கு ஒருத்தர் பெருமை. இவங்களாலே உலகுக்கு பெருமை'னு ரொம்ப அழகா பேசினாங்க. அந்த உவமை எனக்குப் பிடிச்சிருந்தது!"

"அசல் கவிதை புக்ல வரா மாதிரி இருக்கு. அப்புறம் நீலு என்னா பேசுனாரு?"

"சோ டிராமாலே பேசற மாதிரியே, நல்ல கணீர்னு பேசுனாரு. அவர் நடிச்ச 'வந்தே மாதரம்' நாடகத்தை, சதாசிவம் மாமா ரொம்ப ரசிச்சுப் பார்ப்பாராம். அதுலே வஜ்ரவேலுங்கிற கதாபாத்திரத்தோட வசனத்தைப் பேசச் சொல்லிக் கேட்பாராம். நீ மட்டும் சுதந்தரப் போராட்டக் காலத்துல பிறந்திருந்தா, உன்னை



• சிஷ்யப் பிள்ளைகள்

இங்கிலீஷ் பேச வைச்சே, வெள்ளைக்காரனை இந்தியாவை விட்டு விரட்டியிருப்பேன்''னு சதாசிவம் தமாஷ் பண்ணுவாராம்!" என்று சொல்லி, நீலு மாதிரியே பேசிக் காட்ட,

எல்லாமே, நல்ல காரியத்துக்குப் போறதா ஜனங்க பேசிக்குவாங்க."

"இதுவரைக்கும் அப்படி அவங்க கொடுத்த காசு எவ்ளோ இருக்கும்னு நினைக்கிறே அண்ணாத்தே?"

"இன்னா... ஒரு அம்பது லட்சம் இருக்குமா?"

"ஏழு கோடியே இருப்பத்தஞ்சு லட்சத்துக்கும் மேலே! இது சும்மா, குன்ஸா போட்ட கணக்குதான். அந்தப் பெரியவங்க, பண்ற தானத்துக்குக் கணக்கே வைச்சுக்கிறதில்லியே அப்பனே...!"

"என்னது அப்பனேவா?"

"ஆமா... பெரியவரு சதாசிவம் எல்லாரையும் பிரியமா 'அப்பனே'னு கூப்பிடுவாராம். 'சாப்பிட்டியா அப்பனே?'னு விசாரிக்கற அன்பிலேயே சந்தோஷமாயிடுவாங்களாம். அவரோட மருமக ஆனந்தியம்மா சொன்ன தகவல் இது! ஒருமுறை, ரயில்ல போயிட்டிருக்காங்க... ஒரு சின்னப் பையன், ஒரு கூடை பப்ளிமாஸ் பழத்தை, தூக்க மாட்டாமல் தூக்கி வித்துக்கிட்டிருந்தானாம். அதைப் பார்த்த, பெரியவர் சதாசிவம், ஒரு கூடை பழத்தையும் காசு கொடுத்து வாங்கிட்டாராம். "பழமெல்லாம் பிஞ்சா இருக்கே! இதைச் சாப்பிடவே முடியாதே மாமா!"னு

ஆனந்தியம்மா சொன்னப்போ, 'இதை நாம்ப சாப்பிடவா வாங்கினேன்? அந்தப் பையன் இன்னிக்கு ராத்திரி வீட்டுக்குப் போய் வயிறு ரொம்ப சாப்பிடணும்னுதானே வாங்கினேன்'னு பதில் சொன்னாராம். அப்படி மத்தவங்க கஷ்டப்படறதைப் பார்த்தா உருகிடுவாராம் சதாசிவம் அய்யா!"

"நீயும்தான் நெகிழ்ந்து போயிட்டே அப்பனே!" என்று ஆ.தோ.பூபதி விலாவில் குத்தியதையும் அ.தோ.பூ பொருட்படுத்தவில்லை.

"இந்த நாட்டுலே இருக்கிற ஜனங்களுக்கு எல்லாம் இரண்டு வேளை வயிறாரச் சாப்பாடு; ஒதுங்க ஒரு வீடு; உடுத்த துணி, நல்ல குடிதண்ணீர்; இது இருந்தால் போதும்னு ஐயா பெரியவர் ஆசைப்படுவாராம்! அப்படியொரு சுபிட்சமான இந்தியா அமையறதுக்காக ஆனந்தியம்மா பிரார்த்தனை செஞ்சதும் எனக்குக் கண் கலங்கிடுச்சு அண்ணே!"

ஆல்தோட்ட பூபதியின் செல்ஃபோன் அலறியது.

"ஹலோ...நான்தான் தலைவா பேசறேன்... வணக்கம் தலைவா. டோண்ட் வொர்ரீ தலைவா... ரெடியாயிடும்... வைச்சுடுங்க தலைவா..."

"இவரு வேறே... நல்ல விஷயம் பேசிக்கிட்டு இருக்கும்போது...சே!" அமரத் தோட்ட பூபதிக்குக் கடுப்படித்தது.

"சரி... நீ ஃபங்க் ஆவாதே! இன்னும் என்னா பேசினாங்க...?

"தான வீரர், கர்மயோகி, பிரம்மஞானினு எல்லாம் சொன்னாரு ஆர். வெங்கட்ராமன் - அதான் நம்ம ஜனாதிபதியா இருந்த பெரியவரு. 'ஐயா சதாசிவம் உருவத்தாலே மட்டும் உசரமானவர் இல்லே! குணத்தாலும் உயர்ந்தவர். பார்க்கறதுக்கு மட்டும் அழகானவர் இல்லே! செயல்களிலும் அழகானவர்'னு பாராட்டினார்."

"அதோட விழா முடிஞ்சதுன்னா, இன்னாத்துக்கு இவ்ளோ லேட்?"

"ரேவதி சங்கரன், அதாம்பா நம்ப டீ.வி ஆர்டிஸ்டு... அவங்களோட ஹரிகதை காலட்சேபமும் நடந்துச்சே. காஞ்சி பெரியவரோட சரித்திரத்தை ரொம்ப அழகா, உருக்கமா சொன்னாங்க. அதான் கேட்டுக்கிட்டே உட்கார்ந்துட்டேன்."

"அவரு கதையை அங்க வைச்சு ஏன் சொன்னாங்களாம்...?"

"பெரியவரு சதாசிவம் அய்யா அந்த காஞ்சி சாமி பேர்ல ரொம்ப பக்தியா இருந்தாரு... அவரு ஞாபகமா ஒரு பெரிய்யய

---

# நெஞ்சிலிருந்து வருகிறது நேர்மை!




மூன்று வருடங்களுக்கு முன்னால், ஒரு ஜூன் மாதக் காலையில், கன்னட செய்தித்தாளைப் படித்துக்கொண்டிருந்தேன். எஸ்.எஸ்.எல்.சி தேர்வு முடிவு வெளியாகியிருந்தது. யார் முதலாவது, இரண்டாவது போன்ற செய்திகளே கிட்டத்தட்ட முதல் பக்கம் முழுக்க இருந்தன.

எனக்கு இந்த முதலாவது இரண்டாவது மூன்றாவது இடங்களைப் பிடிப்பவர்கள் மீது பிரமிப்பும் கவர்ச்சியும் உண்டு.

எல்லாப் புகைப்படங்களிலும், ஒரே ஒரு மாணவனின் படம் என்னுடைய கவனத்தைக் கவர்ந்தது. அவனுடைய படத்திலிருந்த என் கண்களை எடுக்கவே முடியவில்லை. அவன் மெலிந்து, உலர்ந்து போய்க் காணப்பட்டாலும் அவனுடைய கண்களில் ஓர் ஒளி தெரிந்தது. அவனைப் பற்றி இன்னும் நிறையத் தெரிந்துகொள்ள விரும்பினேன். அவனுடைய பெயர் ஹனுமந்தப்பா என்றும், அவன் எட்டாவது இடத்தைப் பிடித்திருந்தான் என்பதையும் படித்தேன்.

அவன் ஒரு கூலித் தொழிலாளியின் மகன் என்று தெரிந்துகொண்டேன். மேற்கொண்டு தொடர்ந்து படிக்க இயலாது என்று பேட்டியில் சொல்லியிருந்தான். ஒரு கிராமத்தில் வெகு தொலைவில் வசிப்பதாவும், அவன் அப்பாவுக்குத் தினக் கூலியே நாற்பது ரூபாய்தான் என்றும் அதில் கூறியிருந்தான். ஐந்து குழந்தைகளில் அவன்தான் மூத்தவன். அப்பா மட்டுமே சம்பாதிக்கிறார். பழங்குடி இனத்தைச் சேர்ந்தவன்.

உடனே நான் பணத்தை அனுப்பி, என்னுடைய அலுவலக முகவரியையும் கொடுத்தேன். அவன் என் அலுவலகத்துக்கு வந்தபோது, வழி தவறி வந்துவிட்ட பசுங்கன்று போல் பயந்து போயிருந்தான். இதுதான் அவன் பெங்களூருக்கு வருவது முதல் தடவை போலும். அடக்கமாயிருந்தான். திருத்தமான சட்டையும், நிஜாரும் அணிந்திருந்தான். தலையை வகிடு எடுத்து அழகாக வாரியிருந்தான். அவன் கண்களில் அந்தப் புகைப்படத்தில் தெரிந்த ஒளி பளிச்சிட்டது.

நான் நேரடியாக விஷயத்துக்கு வந்துவிட்

● ரேவதி சங்கரன்

மண்டபம் கட்டணும்னு புராஜெக்ட் போட்டு ஆரம்பிச்சாரு. அவர் கடைசிக் காலத்துல கண்ணை மூடறப்போகூட அந்த ஞாபகத் துலதான் இருந்தாராம். அதான் அந்த சாமி யைப் பத்தி ரொம்ப சொன்னாங்க மீட் டிங்ல..

"சரிதான்..."

"காஞ்சி சாமி, சதாசிவம் அய்யா - எம்.எஸ். அம்மா பேர்ல ரொம்ப பிரியமா இருந்தாராம்... பாரு அண்ணே! ஊருக்கெல்லாம் நல்லவங் களா வாழ்ந்தாங்களா அதான் அவங்களுக்கு சாமிமாரோட அன்பும் பாசமும் அப்படிக் கிடைச்சிருக்கு... நானும் போய் உருப்படியா எதுனா பண்றேன்..."

"டேய்... எரிக்கறதுக்கு உருவ பொம்மை வேணுமேடா...?"

"சொத்து சேர்த்து வச்சிக்கினு ஃபிலிம் காட்டாம, சம்பாதிச்சதையெல்லாம் மத்தவங் களுக்குக் கொடுத்தவரைப் பத்தி மூணு மணி நேரம் பேசக் கேட்டிருக்கேன்... இன்னிக்கு இருக்கற தலைவருங்க பேர்ல மரியாதை வர மாட்டேங்குது அண்ணே... நம்ம சதாசிவம் அய்யா மாதிரி தலைவருங்களும் ஜெயிலுக் குப் போனாங்க. நாட்டுக்காக எவ்வளவோ தியாகம் பண்ணாங்க. ஆனா அவங்க சொல் லிக்கலை. 'நான் தியாகி! நான்தான் தலை



வரு'ன்னு வெளிச்சம் போடல... இன்னிக்குப் பாரு... எந்தவிதமான தியாகமும் பண்ணாம, நாட்டைக் குட்டிச் சுவராக்கிக்கிட்டிருக்கற ஆளுங்களை எல்லாம் 'தலைவர்'னு நாம கொண்டாடறமே, இது நாயமா?'னு வக்கீல் சுமதி கேட்டாங்க இந்த மீட்டிங்ல... அது என்னையே பார்த்து கேட்கிற மாதிரி இருந் துச்சு...இனிமே, இந்த சங்காத்தமே வேணாம். நான் வரேண்ணே... எதுனா ரீஜண்டான வேலையிருந்தா சொல்லு, செய்யறேன்."

பணிவோடு கும்பிடுபோட்டுவிட்டு நகர்கிறான்.

"டேய்...பூபதி..." ஆ.தோ.பூபதி கூப்பிடக் கூப்பிட அமரத் தோட்ட பூபதி, இருளில் மறைந்தே விட்டான்... மன்னிக்கவும்... வெளிச் சத்துக்கு வந்துவிட்டான்.

— அனுராதா சேகர்

படங்கள் : யோகா

---

டேன். "உன்னுடைய படிப்புத் திறமை எங் களுக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. மேற்கொண்டு படிக்க விரும்புகிறாயா? நாங்கள் உதவுகிறோம். என்ன வேண்டுமோ படி. எங்கே வேண்டு மானாலும் படி!"

அவன் பதில் ஏதும் பேசவில்லை. விடை பெற்றுக்கொண்டு இளம்பும் முன், "அம்மா,

## புக் பேங்க்

நான் மேற்கொண்டு பெல்லாரி ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் படிக்க விரும்புகிறேன். என்னுடைய கிராமத்துக்கு அருகிலேயே அது இருக்கிறது" என்றான்.

நான் சரி என்றேன்.

"மாதா மாதம் நான் உனக்கு என்ன தொகை அனுப்ப வேண்டும்? கல்லூரியில் ஹாஸ்டல் வசதி இருக்கிறதா?" என்று கேட்டேன். விவரங் களை எல்லாம் சேகரித்துக் கொண்ட பிறகு என் னோடு தொடர்பு கொள்ளுவதாகச் சொன்னான்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, அவனுடைய அழகான கையெழுத்தில், மாதம் முந்நூறு ரூபாய் அவனுக்குத் தேவைப்படும் என்று எழுதினான்.

ஆறு மாதச் செலவுக்கு இருக்கட்டும் என்று ஆயிரத்து எண்ணூறு ரூபாய் அவனுக்கு அனுப்பி வைத்தேன். அதைப் பெற்றுக் கொண்டு உடனே நன்றி தெரிவித்துக் கடிதம் எழுதினான்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, அடடா ஹனு மந்தப்பாவுக்கு அடுத்த ஆறு மாதத்துக்கான பணம் அனுப்ப வேண்டுமே என்று நினைவு வந்தது. இன்னொரு ஆயிரத்து எண்ணூறு அனுப்பி வைத்தேன்.

இதையும் பெற்றுக் கொண்டதாக உடனே பதில் வந்தது. ஆனால், கூடவே, "அம்மா நீங் கள் அடுத்த ஆறு மாதங்களுக்கான தொகையை அனுப்பியிருந்ததற்கு நன்றி. ஆனால், நான் இரண்டு மாதங்கள் பெல்லாரியிலேயே இருக்க வில்லை. ஒருமாதம் எங்கள் கல்லூரி விடுமுறை. இன்னொரு மாதம் எங்கள் கல்லூரியில் வேலை நிறுத்தம். எனவே, இந்த இரண்டு மாதங்களும் நான் வீட்டிலேயே இருந்தேன். அதனால் என் செலவுகள் முந்நூறு ரூபாய்க்கு குறைவாகவே இருந்தன. எனவே, நான் செலவழிக்காத மீத முந்நூறு ரூபாயை இத்துடன் திருப்பி அனுப்பி யிருக்கிறேன். தயவு செய்து ஏற்றுக் கொள்ளவும்."

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அத்தனை வறுமையிலும்கூட ஒரு நேர்மை!

**- சுதாமூர்த்தி எழுதிய 'அனுபவங்கள் தந்த பாடங்கள்' எனும் நூலிலிருந்து (தமிழில், சாருகேசி)**

*கலைஞன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.70.*



வேத மந்திரங்கள் பகவானிடம் என்னவெல்லாம் வேண்டுகின்றன பாருங்கள்...

"ஹே பகவானே, நாராயணா, விஷ்ணு! என்னுடைய கண் பார்வையை நீதான் ரக்ஷிக்க வேண்டும். சகல இந்த்ரியங்களையும் நீயே காக்க வேண்டும். மனஸுக்கு அதிபதியாக இருக்கும் நீயே என் மனசை நிர்வகிக்க வேண்டும்" என்கிறது.

மனஸுக்கு சித்பதி என்று பெயர். சித் என்கிற சப்தத்துக்கு ஞானம் என்று ஒரு பொருள் உண்டு.

'சிதம்பரம்' என்றால் என்ன பொருள்? திருச்சிற்றம்பலக் கூடம் என்கிறார் ஆழ்வார் அவ்வூரை. 'சித்' என்றால் ஞானம், அம்பரம் என்றால் ஆகாசம் - ஞானாகாசம் என்றே பெயர் அந்த ஊருக்கு.

# குறையொன்றுமில்லை

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

"நரசிம்ஹ அவதாரத்திலும் பாருங்கள்.... ஹிரண்ய கசிபு நின்று கொண்டிருக்கிறான்; பிரஹலாதன் நின்று கொண்டிருக்கிறான். இவர்கள் சேதனர்கள். ஸ்தம்பம் இருக்கிறதே, அது அசேதனம். அந்த ஸ்தம்பத்திலிருந்து எம்பெருமான் ஈச்வரன் தோன்றினான்."

7

'சித்' என்றால் ஞானம் என்று ஒரு அர்த்தம்; மனம் என்று இன்னொரு அர்த்தம். மனத்துக்கு அதிபதியாய் இருந்து அதைச் செலுத்துகிறான் எம் பெருமான் விஷ்ணு என்பதால் அவனைச் சித்பதி என்று அழைக்கிறது வேதம்.

நமது பேச்சும் நல்ல முறையிலே அமைய வேண்டும். நல்ல வாக்பதித்வம் வேண்டும். எந்த வாக்கினால் உலகம் திருந்துகிறதோ, எந்த வாக்கு பகவானுடைய பெருமையைப் பேசுகிறதோ, எந்த வாக்கு மற்றவர்களுக்கு உபயோகப்படுகிறதோ, அந்த வாக்கே வாக்கு! அப்படிப்பட்ட வாக்குக்குப் பதியாய் இருக்கிறான் பரமாத்மா.

தேவர்களுக்கெல்லாம் பதியாக இருப்பவனே நம் மனசுக்கும் பதியாக இருக்கிறான்; நம் வாக்குக்கும் பதியாக இருக்கிறான்.

எங்கும் பரவியிருப்பதனால் பகவானுக்கு 'வஸு' என்று பெயர் வழங்குவதாகச் சொல்லியிருக்கிறேன். எல்லா இடங்களிலும் வாஸம் பண்ணுபவன் வஸு. சூரிய ரச்மியைப் போன்றவன். சூரிய கிரணங்கள் படாத இடமே இல்லை உலகத்தில். அப்படி சூர்ய ரச்மியானது உலகத்தில் படும்பொழுது எப்படி அந்த கல்மிஷம், துர்கந்தம் அங்கே இருக்கும்படியான கெட்ட வாசனையைப் போக்குகிறதோ, அந்த மாதிரி எம் பெருமான் அருளாகிற கிரணம் நம் மீது படுகிறபோது நம் மீதிருக்கிற தோஷங்கள் எல்லாம் பறந்து போய்விடுகிறது. எம் பெருமானுடைய கடாக்ஷ வீக்ஷணத்தினாலே நம்முடைய பாபங்கள், தோஷங்களெல்லாம்

இருக்கிற இடம் தெரியாமல் ஓடிவிடுகின்றன. அப்படி சர்வந்தர்யாமியாய், எங்கும் நிறைந்திருக்கும்படியான விஷ்ணு இந்த யக்ஞத்தை ரக்ஷிக்கிறான் என்கிறது வேதம்.

'இந்திரனும் நீதான், அக்னியும் நீதான், எல்லா தேவதைகளும் நீதான்' என்கிறது.

எந்த தேவதா சப்தத்தைச் சொன்னாலும் அந்த சப்தத்தினாலே சொல்லப்படக்கூடியவன் பரமாத்மா.

எல்லா சராசரங்களிலும் இருப்பவன் பரமாத்மா என்று ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் பேசப்படுகிறது. இதற்கு கடக ஸ்ருதி என்று பெயர்.

இன்னும் சில உபநிஷத்கள் பகவான் வேறு இது வேறு என்று பேதமாகப் பேசுகின்றன.

தைத்ரீய உபநிஷத்தில் நாம் பார்த்தோமானால், 'எதனிடத்திலிருந்து இதெல்லாம் உண்டாகிறதோ, எதனால் நிலைபெறுகிறதோ, எதனுள் சென்று ஒடுங்குகிறதோ, அது இதற்குக் காரணம் என்பதனாலே, அது வேறு இது வேறு' என்று வலியுறுத்துகிறது.

போக்தா - போக்யம் என்பது இருவேறு என்கிறது.

சேதனம் - அசேதனம் - அதற்கும் மேல் இவற்றையெல்லாம் பிரேரேபிக்கக்கூடிய ஈச்வரன் என்று சிதசித்ஈச்வர தத்துவத்தைச் சொல்கிறது.

ஆளவந்தார் என்கிற ஆசார்யர், ஸ்தோத்திர ரத்தினம் என்று ஒரு ஸ்தோத்திரத்தைப் பண்ணினார். அதில் சொல்லப்படக்கூடிய அர்த்தத்தை நல்ல முறையிலே மனத்திலே தேக்கிக் கொண்டோமானால், நல்ல வைராக்கியமும் ஞானமும் நமக்குச் சித்திக்கும்; பக்தி ஞானம், வைராக்கியம் மூன்றையும் அளிக்கக் கூடிய உயர்ந்த வான்மயம், உயர்ந்த வாக்கு ஆளவந்தாருடைய வாக்கு - ஸ்தோத்திர ரத்தினம் அது.

அர்ஜுனனுடைய தேர்த்தட்டை நாம் இங்கே பார்க்கிறோம். - சிதசித்ஈச்வர தத்வம் தான் நமக்கு அதிலே தெரிகிறது. சித் என்றால் 'அறிவை உடையவன் - சேதனன். அர்ஜுனன் தேரிலே உட்கார்ந்திருக்கிறான்; குதிரைகள் இருக்கின்றன. - இவை சேதனம். சித் இருக்கிறது இந்தக் காட்சியிலே. அசித் என்பது எது...? அந்த ரதம் இருக்கிறதே அசேதனப் பொருள்... அது அசித்.

இவை இரண்டையுமே நடத்துபவன் யார்...? நடுவிலே உட்கார்ந்திருக்கிற கிருஷ்ணன்தான்!

ஆகையினாலே சித் - அசித் - ஈச்வர தத்துவம் இந்த அர்ஜுனனுடைய தேர்த்தட்டிலே நமக்குத் தெரிகிறது.

அதே மாதிரி நரசிம்ஹ அவதாரத்திலும் பாருங்கள்.... ஹிரண்ய கசிபு நின்று கொண்டிருக்கிறான்; பிரஹலாதன் நின்று கொண்டிருக்கிறான். இவர்கள் சேதனர்கள். ஸ்தம்பம் இருக்கிறதே, அது அசேதனம். அந்த ஸ்தம்பத்திலிருந்து எம்பெருமான் ஈச்வரன் தோன்றினான். அப்போது சித் ஆகிற இந்த இருவருக்கும் அசித் ஆகிற ஸ்தம்பத்துக்கும் நிர்வாககன் யார் என்றால், ஸ்தம்பத்திலேயிருந்து தோன்றிய எம்பெருமான்தான்.

இவ்வாறே எங்கு நாம் பார்த்தாலும் சிதசித்ஈச்வர தத்துவம் காணப்படுகிறது. தத்வத்ரயம் என்று இந்த மூன்று விஷயங்களைச் (சித் - அசித் - ஈச்வரன்) சொல்லுவார்கள். இந்த மூன்று விசேஷமான அம்சங்கள் உலகத்திலே தெரிவதனாலே, அப்படிப்பட்ட ஸர்வ தேவதா அந்தர்யாமியாய் பரமாத்மா இருப்பதனாலே அந்தந்த தேவதையாகவே அவன் சொல்லப்படுகிறான்.

அக்னி என்று சொன்னால், அக்னி என்ற சப்தத்துக்கு விஷ்ணு என்று பொருள்; முன்னுக்கு அழைத்துச் செல்லக் கூடியவன் அவன் - அவனே விஷ்ணு. அது மாத்திரம் இல்லை, அக்னிக்கு அந்தர்யாமியாய் இருந்துகொண்டு அதற்குப் பயனைக் கொடுக்கக்கூடியவன் விஷ்ணு; இந்திரனுக்கு அந்தர்யாமியாய் இருந்து பலனைக் கொடுக்கக் கூடியவன் விஷ்ணு.

ஆகையால், நாம் எந்த தேவதையை ஆராதித்தாலும் அதனால் சந்தோஷிக்கிறவன் பரமாத்மாதான். இந்த ஞானத்தோடு யார் யக்ஞம் பண்ணுகிறார்களோ, அவர்களுக்கு யக்ஞம் பூரண பலனைக் கொடுக்கும்.

இதைத்தான் மீமாம்ஸையிலே - பூர்வ மீமாம்ஸையிலே ஜைமினி மகரிஷி நமக்கு நன்கு விளக்கியிருக்கிறார்.

கர்மா பலனைக் கொடுக்கிறதா? கர்மாவினால் பலனை அடைந்த பகவான் பலனைக் கொடுக்கிறாரா?... என்பது விசாரம். கர்மா ஒரு நாளும் பலனைக் கொடுக்காது!

> **உலகத்தில் உள்ள மதிப்புக்குரிய செல்வங்கள் அனைத்திலும், மக்களே அதிக மதிப்புள்ள செல்வம், முக்கியமான செல்வம் என்பதை உணர வேண்டும். அவர்களே அனைத்தையும் தீர்மானிக்கிறார்கள் என்பதை அறிய வேண்டும்.**
>
> **- ஸ்டாலின்**
>
> **தொகுப்பு : சுந்தரா**

அந்த கர்மாவினால் ஆராதிக்கப்படுகின்ற எம்பெருமான்தான் பலனைக் கொடுக்கிறான்.

சர்வகர்ம சமாராஜ்யன் என்று எம் பெருமானுக்குப் பெயர் ஆனதனாலே, எந்த கர்மா நாம் பண்ணினாலும் அந்த கர்மாவினால் சந்துஷ்டி அடைகிறான் பரமாத்மா.

ஆகையினால், கர்மாக்களில் பல தேவதைகளின் பெயர் வந்தாலும், அந்த தேவதைகள் பலனைக் கொடுப்பது பகவத் அனுக்கிரஹத்தினாலேதான். உள்ளிருந்து பலனைக் கொடுக்கிறவன் யார்? என்று கேட்டால், அந்த தேவதைகளுக்கு சக்தியைக் கொடுக்கிறவன் பகவான்தான்.

ஒரு ராஜா சிம்மாசனத்திலே உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அவன் மேலே, பல அங்கிகளெல்லாம் போட்டுக் கொண்டிருக்கிறான். அவனுக்குச் சேவகன் வேலை செய்கிறவன், ராஜா மீது பன்னீர் தெளிக்கிறான். சந்தனம் பூசுகிறான், பூமாலை போடுகிறான் ராஜாவுக்கு. இப்போது சந்தோஷிப்பது யார்..? ராஜா, மேலே போட்டுக் கொண்டிருக்கிற அந்த ஆடையா சந்தோஷிக்கிறது? அங்கியா சந்தோஷப்படுகிறது? உள்ளுக்குள்ளே இருக்கிற ஆத்மா அல்லவா சந்தோஷிக்கிறது!

இந்த அங்கியைப் போல்தான் தேவதைகளெல்லாம்..! அவர்களுக்குள்ளே அந்தர்யாமியாக இருக்கிற பரமாத்மாதான் சந்தோஷப்படுவான். பரமாத்மாவினுடைய சந்தோஷம்தான் ரொம்ப முக்கியம். அவன்தான் பலனை அளிக்கிறான்.

பிரும்ம சூத்திரத்திலே இது விசேஷமாகச் சொல்லப்படுகிறது.

இப்படிப்பட்டவனின் பெருமையை 'பூதாத்மா, பரமாத்மா' என்று விசேஷமான முறையிலே கர்மகாண்டத்திலேயே சொல்லியிருக்கிறது. ஞான காண்டத்தை நாடி உபநிஷத் வரையிலே நாம் செல்ல வேண்டாத



வாறு கர்மகாண்டத்திலேயே அவன் பெருமை வெளிப்படும்படி சொல்லியிருக்கிறது.

கர்ம காண்டத்தில் அவன் பெருமையை நேராகச் சொல்லாமல், ஒரு கர்மாவைச் சொல்லி அவன் பெருமையைச் சொல்கிறது. ஞானகாண்டத்திலும் அவன் பெருமை. உபநிஷத் என்று அதற்குப் பெயர். 'உப' என்றால் சமீபம் என்று அர்த்தம்.

நிஷின் என்றால் அந்த தாதுவுக்கு என்ன பொருள்? எம்பெருமானுக்கு மிக அருகில் இருத்தல் என்று பொருள்.

'உ ப நி ஷத; - ஷத என்கிற தாதுவுக்கு ஆதி சங்கர பகவத்பாதாள் ஒரு பொருள் உரைத்துள்ளார். தூள் தூளாய் எகிறிப் போதல் என்று அர்த்தம்.

உபநிஷத் என்றால், நம்மிடத்தில் இருக்கும்படியான ஐயப்பாடுகள், கஷ்டம் வினை - இவை அனைத்தையும் தூள் தூளாக்குகிற ஞானம்!

வேதாந்த ஞானத்திலே நல்ல அறிவைப் பெற்றவர்கள், தெளிவான அர்த்த ஞானம் உடையவர்கள், ஐயமற்ற வைராக்கியத்தோடு வாழ்வார்கள்.

சன்னியாசம் என்பதற்கு இரண்டு பொருள் உண்டு.

சன்னியாசம் என்றால் நான்காவது ஆசிரமம். மற்ற மூன்று ஆசிரமங்களை விட்டவர்கள் சன்னியாசிகள். பொருளிலே ஆசை வைக்கக் கூடாது அவர்கள். 'அதை விட்டேன்' என்று அவர்கள் சொல்ல வேண்டும்.

சன்னியாசம் வாங்கிக் கொள்கிறபோது, முழங்கால் அளவு ஜலத்திலே நின்று கொண்டு சபதம் பண்ணவேண்டும். சன்னியாசாசிரமம் மேற்கொள்கிறேன்; மூன்று ஆசைகளை விடுகிறேன் என்று சொல்ல வேண்டும்.

பொருளிலே உள்ள ஆசை;

ஸ்த்ரீகளிடத்திலே உள்ள ஆசை,

பூமியிலே இருக்கிற ஆசை - (சொத்து முதலியவற்றிலே உள்ள ஆசை) - இந்த மூன்றையும் விட்டேன் என்று மும்முறை சொல்ல வேண்டும்.

சன்னியாஸம் என்றால் இன்னொரு பொருள்...? - நியாஸம் என்றால் சரணாகதி. சன்னியாசிகள், அந்த எம் பெருமானிடத்திலே இந்த ஆத்மாவைச் சமர்ப்பிக்க வேண்டும். இது என்னுடையதல்ல, என்று சொல்லி, அவன் ஏற்கும்படியாகச் சமர்ப்பிக்க வேண்டும். பகவான் அதை ஏற்பான். ●



நீச்சல் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஒன்றிணைந்த நீச்சல்? அதாவது 'சிங்க்ரோனைஸ்ட் ஸ்விம்மிங்'. டிடி ஸ்போர்ட்ஸில் மான்செஸ்டரில் நடைபெற்ற இந்தப் போட்டியைக் காண்பித்தபோது மூச்சடைத்தது. நாட்டுக்கு இரண்டு பெண்கள் என்று நீச்சல் உடையுடனும் நிறைவான பயிற்சியுடனும் வருகிறார்கள். தொபுக்கடீரென்று தண்ணீரில் ஒரு சேர விழுந்து ஏதோ மேடையில் பாலே ஆடுவதுபோல் அசைவுகளைக் காட்டுகிறார்கள். தண்ணீரில் இவ்வளவு ஒற்றுமையாக "ஜதி தவறாமல்" அசைவுகளைச் செய்ய முடியுமா? அதுவும் தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த இரு நங்கையர்கள் கடைசி நிமிடத்தில் இசையின் பின்னணி கூட இல்லாமல் இப்படித் தங்கள் திறமையைக் காட்டியது, வாவ்!

# நல்ல கவிஞன்; நல்ல மனிதன்!



"ஒரு நல்ல கவிஞன் ஒரு நல்ல மனிதனாகவும் இருப்பது வெகு கஷ்டம்' என்ற முன்னுரையுடன் கவிஞர் வாலி (அப்படியிருப்பதாகத்தாம் கருதும்) கவிஞர் பழனி பாரதியை அழைத்தார் (பொதிகை). எங்கோ கொஞ்சம் தூசுதட்டிய நெடி அடிக்கிறதே என்று யோசித்தபோது ஒரு கவிஞர் 'விக்ரம ஆண்டில் அக்ரமம் நடக்கலாமா?' என்று கூறி மர்மத்தை உடைத்தார். (இப்போது நடப்பது சித்ரபானு ஆண்டு.)

வெளிக்கிரகவாசிகள், பயங்கரமிருகம், உலக அழிவு, ஜனாதிபதியைக் கொல்ல முயற்சி - இப்படி நான்கு பிரிவுகளில் பெரும்பாலான ஹாலிவுட் திகில் கதைகளை அடக்கிவிடலாம். எச்.பி.ஓ.வில் ஒளிபரப்பப்பட்ட 'கமாண்டோ' நான்காவது வகை. ஜனாதிபதியைக் கொல்லும் முயற்சியில் ஈடுபடுபவர் ஸ்வார்ஷ்நெகர் (தொடக்கக்காட்சியே இவரது உர்ருண்டு திர்ரண்ட புஜத்தின் டைட் க்ளோசப்தான்). ஒரு கதாநாயகனை வில்லனாக்கலாமா? எனவே 'வேறுவழியில்லாமல் மனசாட்சிக்கு எதிராகத்தான் அவர் அந்தக் காரியத்தில் ஈடுபடுகிறார்'. "ஜனாதிபதியை நீ கொல்லு. இல்லேன்னா உன் பாசமுள்ள ஒரே மகளை நான் கொல்வேன்" என்கிறார் நிஜவில்லன். முடிவு எப்படியிருக்கும் என்பதைக் கணிக்க மனோஜ் ஷியாமளன் தேவையில்லை, மக்குப்பிளாஸ்திரியே போதும்.

டிஸ்கவரியில் சிறுத்தைப் புலி பாய்ந்து சென்று மானைத் தாக்குவதை மீண்டும் காண்பித்தார்கள். சப்தம் போடாமல் பாக்கியுள்ள மானைக் கழுகுக்கூட்டம் தின்ன முயற்சிக்க, கூட்டத்தை ஒரு உறுமலாலேயே அகற்றிவிட்டு சிறுத்தைப் புலி மீண்டும் எஞ்சியுள்ள மானைத் தின்கிறது. ஒரு சின்ன வேண்டுகோள். அடாது அசைவம் சாப்பிடுபவர்களே அருவெருப்படுமளவுக்கு இந்த மிருகங்கள் இறைச்சி தின்பதை நெடுநேரம் க்ளோசப்பில் காட்ட வேண்டாமே!

— சேனல் பாய்

**ரிமோட்**

திருவாரூர் மாவட்டத்தில் பட்டினிச் சாவு ஒன்று பதிவாகியுள்ளது. பலியானது ஏழு வயதுச் சிறுவன் பிரகாஷ்.

மன்னார்குடியிலிருந்து பன்னிரண்டு கி.மீ. தொலைவில் உள்ளது ஆதிச்சபுரம் கிராமம். மேலத் தெருவில் தொகுப்பு வீடு ஒன்றில் வசித்து வரும் விவசாயக் கூலித் தொழிலாளி சந்திரசேகரன் (37), மனைவி ரேணுகா (30) இருவருக்கும் ஐந்து பிள்ளைகள்.

பிரகாஷ் இரண்டாம் வகுப்பு படித்து வந்தான். பிரகாஷ் எப்போதும் பசி தாங்க மாட்டானாம்.

கடந்த ஆறு மாத காலமாக வேலை வெட்டி ஏதுமின்றி, சாப்பாட்டுக்கே மிகவும் சிரமப்பட்டு வந்திருக்கிறது சந்திரசேகரன் குடும்பம். சம்பவம் நிகழ்ந்த இரண்டு நாட்களுக்கு முன்னதாக பிள்ளைகள் மூவரும் பள்ளிக்குச் சென்றாலாவது நிச்சயிக்கப்பட்ட மதிய உணவு கிடைக்குமே என்கிற எண்ணத்தில் பள்ளிக்குப் புறப்பட்டுச் சென்றிருக்கின்றனர்.

போகும் வழியில் மூவரும் வெவ்வேறு இடங்களில் மயங்கி விழுந்துள்ளனர். வீட்டுக்குச் சேதி வரவும் பதறிச் சென்று பார்த்துள்ளனர் பெற்றோர்கள். பசி மயக்கம்தான் என்பதை உணர்ந்து கொண்ட அவர்கள், பிள்ளைகளை வீட்டுக்குத் தூக்கி வந்துள்ளனர். "ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப் போயிக் காண்பிங்க. குளுக்கோஸ் பாட்டில் ஏத்தினாக் கூடப் போதும்... புள்ளைங்களுக்குத் தெம்பு வந்துடும்!" என அக்கம்பக்கத்தவர் கூறியுள்ளனர்.

அருகிலிருக்கும் ஆரம்ப சுகாதார நிலையத்தில் மூவரையும் காண்பித்துள்ளனர். மூவரில் பிரகாஷின் நிலைமை மட்டும் மோசமாயிருக்க, அன்றிரவே மன்னார்குடி அரசு மருத்துவ மனையில் சேர்த்துள்ளனர்.

மன்னார்குடி அரசு மருத்துவமனையில், வாந்தி – வயிற்று வலி எனப் பதிவு செய்து கொண்டு பிரகாஷைச் சேர்த்திருக்கிறார்கள். எடுத்தவுடன் கட்டிலுக்கு பெட்ஷீட் விரித்துப் போடுபவர் பத்து ரூபாய்க் கொடுத்தால்தான் ஆயிற்று என்றிருக்கிறார். கொடுத்து அழுதிருக்கிறார்கள். மருத்துவர் வந்து பரிசோதித்த

# பட்டினிச் சாவு; பரிதாப சோகம்!



• சந்திரசேகரன் குடும்பத்துடன்...

பிறகு இரண்டு ஊசிக்கும், குளுகோஸ் பாட்டில் ஏற்றுவதற்கும் எழுதிக் கொடுத்துள்ளார். இரண்டு ஊசி போட்ட பிறகு பிரகாஷுக்கு குளுக்கோஸ் பாட்டில் இணைப்புக் கொடுத்துள்ளனர். முதல் பாட்டில் இறங்கியவுடன் இரண்டாம் பாட்டிலுக்கு நர்சிடம் சென்று முறையிட்டிருக்கிறார் சந்திரசேகரன். அந்த நர்சோ, "ஒவ்வொரு பாட்டிலுக்கும் இருபது ரூபாய் கொடு" என்றிருக்கிறார்.

சந்திரசேகரன் வறுமையை எடுத்துச் சொல்லியும் காதில் வாங்காத நர்ஸ், பிரகாஷுக்கு இரண்டாவது குளுக்கோஸ் பாட்டில் கொண்டு வந்து கூடப் போடவில்லையாம். இதனால் வெறுத்துப்போன அவர், அன்று அதிகாலையே ஆஸ்பத்திரியில் சொல்லிக் கொள்ளாமல் பிரகாஷை வீட்டுக்குக் கூட்டி வந்து விட, மயங்கிய நிலையில் வீட்டில் படுத்துக் கிடந்த அன்று மாலையே இறந்து போனான் பிரகாஷ்.

"விவசாயத் தொழிலாளிகளுக்கென தமிழக அரசு (164 கோடி ரூபாய்த் திட்டம்) அறிவித்திருந்த 'சம்பூர்ண கிராமிய வேலை வாய்ப்புத் திட்டத்தின்' கீழ் உதவி எதுவும் கிடைக்கவில்லையா?' என்றால், "அந்த வயித்தெரிச்சலை ஏன் சார் கேக்கறீங்க!" என்கிறார் சந்திரசேகரன்.

"மூணு நாள் வேலை. ஒரு நாளைக்கு ஆளுக்கு இருபத்துநாலு ரூவா கூலியும் அஞ்சு கிலோ அரிசியும் கெடைக்கும்னு சொன்னாங்க. குளத்தை வெட்டி முடிச்சோம். தினமும் பத்து ரூவாக் கொடுத்தாங்க. மொத்தம் பதினைஞ்சு கிலோ அரிசிக்குப் பத்து கிலோ மட்டும்தான் தந்தாங்க. மீதிப் பணமும், அஞ்சு கிலோ அரிசியும் இன்னும் தரவே இல்லீங்க. குளத்தை வெட்டிப்போட்டு ஒரு மாசத்துக்கு மேல ஆவுதுங்க!" என்கிறார் பரிதாபமாக.

கட்டுரை, படம் : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



**மேஷம் :** ராசிநாதன், 5ல் பூர்வ புண்ணியஸ்தானத்தில் சூரியனுடன் சஞ்சாரம் என்பதால், பலவிதமான பிரச்னைகள் இம்சை செய்யும். ஆனாலும் 3ல் உலவும் சனி, தன்னம்பிக்கை யோடு, சமாளிக்க உதவி செய்வார். உத்தியோகத்தில் எதிர்ப்புகள் மறையும். புதிய முயற்சிகள் அனுகூலம் தரும். அலுவலகத்தில் சுமுகமான சூழ்நிலை நிலவும். ஜெயலலிதா, சோனியா போல மோதிக் கொள்ளும் தம்பதிகூட, அன்பு பாராட்டி மகிழ்வார்கள். பெண்களின் உடல்நலம் சீராக இருக்கும். மேல்படிப்புக்கான முயற்சிகள் எடுக்கும் மாணவர்கள் வெற்றி நடை போடுவார்கள்.

# நடக்குமென்பார்;

**ஓவியர் பத்மவாசனின் மனைவி ராஜிக்கு (சிம்மம்) இந்த வாரம் யோகம் அடிக்குமாம்.**

**ரிஷபம் :** 'என்னமோ நேரமே சரியில்லை'ன்னு நொந்து போய்க் கிடந்தீங்க இல்லையா? இனிமே அப்படியொரு பேச்சே வராது. காரியத் தடை எல்லாம் தவிடு பொடியாகிவிடும். நினைச்சது நினைச்சபடி தானா வந்து அமையும். ராகு, கேது சஞ்சாரம் இருக்கே என்று விசனப்பட வேண்டாம். குரு பார்வை, ரொம்பப் பலமாக இருப்பதால், கெடுதல்கள் எல்லாம் பனிபோல் மறையும். குறிப்பாக பணவசதி சரளமாக அமைந்து விடும். உடல் நலம் சீராக இருந்து, உற்சாகத்தைத் தரும். கிரக வழிபாடு, தான தருமம் செய்வதால், இரண்டாவது சுற்று ஏழரை நாட்டுச் சனி நடப்பவர்களுக்கு, சிரமம் குறைந்து, மேன்மை உண்டாகும்.

**மிதுனம் :** குருபகவான் கருணை பரிபூரணமாக அமைந் திருக்கிறது. தன மற்றும் குடும்ப ஸ்தானத்தில் அமர்ந்து பலம் பெற்றிருப்பதால், மனத்தில் உற்சாகம், பண வசதி, பயணத்தால் அனுகூலம், குடும்ப நலம் என்று சௌக்கியமான பலன்களே நிகழும். சனி, இரண்டாவது சுற்று என்றால், நல்ல பலன்கள் நடக்கத் தடையில்லை. எடுத்த காரியங்களில் வெற்றி கிடைக்கும். சுய தொழில் புரிபவர்கள் அதிகமாக உழைக்க வேண்டி வரும். வியாபாரிகள் முன்னேற்றம் அடைவார்கள். பொருளாதாரம் சீரடைவதால், பழைய கடன்கள் தீரும். சொத்து, வீடு, மனை வகையில் அனுகூலமான திருப்பம் ஏற்படும். சாதுக்கள் தரிசனம் மன அமைதி தரும்.

**கடகம் :** ஜென்மராசியில் உச்ச பலத்துடன் குரு சஞ்சாரம் என்பதால், மனநிலை தெளிவாக இருக்கும். 11ல் ராகு, 5ல் கேது இருந்தாலும் குரு பார்வை அனுகூலம் தரும். இதனால் உங்கள் மதிப்பு, செல்வாக்கு உயரும். கணவன் - மனைவி உறவு நிலை இனிமையாக இருக்கும். சுப காரிய முயற்சிகள் கூடி வரும். புதிய பொருள் சேர்க்கை, புதிய வீடு, வாகனம் அமையும். வியாபாரிகளுக்கு உன்னதமான காலம். பெண்களுக்கு மாமூலான பலன்களே நடந்தாலும், குறையொன்றும் இருக்காது.

**சிம்மம் :** தன, குடும்ப, வாக்குஸ்தானத்தில், புதன் ஆட்சியாக உலவுவதால், பேச்சில் கவர்ச்சி, சாதுர்யம் கூடும். கடன் தொல்லை நீங்கும். கடினமான வேலைகளையும் சுலபமாக நிறைவேற்றி வெற்றியே காண்பீர்கள். வரவேண்டிய பணம்

**அக்னிசர்மா பக்கம்**

**செப்டெம்பர் 11 முதல் 17 வரை**

வந்து சேரும். உணவுப் பொருள், தானிய வகை, உணவுவிடுதி, லாட்ஜ், டிராவல்ஸ் ஆகிய இனங்கள் ஆதாயம் கொண்டு வரும். ஆட்சி உச்சம் என்பதால், தாய்மாமன் வகையில் யோகம் ஏற்படும். குரு பார்வையின் காரண மாக, தாமதமாகிய திருமணம், தடைப்பட்ட சுபகாரியம் நிறைவேறும்.

**கன்னி :** இந்த வாரம் அதிர்ஷ்டமான வாய்ப்புகள் அணிவகுத்து நிற்கும். தெளிவான சிந்தனையுடன் உங்கள் செயல்கள் அமைந் பாகவே உள்ளது. அதிலும் தனம், வாக்கு, குடும்பம், ஜீவனம் போன்ற இடங்களைப் பார்ப்பது இன்னும் விசேஷம். எதிரிகள் அடங் கிப் போக, எதிர்ப்புகள் ஓடி ஒளிய, எதிர் காலம் சிறப்பாக அமையும். மாணவர்கள் உழைப்புக்கேற்ற பலன் பெறுவார்கள். வியா பாரிகள் வளர்ச்சி காண்பார்கள். பணவசதி சரளமாக இருக்கும் என்பதால், வீட்டிலும் சுபிட்சமான சூழ்நிலை இருக்கும்.

**மகரம் :** குரு பலன் பரிபூரணமாக இருப்

# நடக்கும்!

திருக்கும் என்பதால், காரியங்கள் நினைத்தபடி நிறைவேறும். வேலையில்லாதவர்களுக்கு, தகுந்ததொரு வேலை வாய்ப்பு அமையும். கொடுக்கல் - வாங்கல் இனங்கள் நன்மை தரும். பத்திரிகை, எழுத்து, கணிதம், மருத்துவம், கெமிக்கல்ஸ் ஆகிய இனங்களில் ஆதாயம் கூடும். குடும்பத்தில், மகிழ்ச்சி அமைதி நிறைந்திருக்கும்.

**துலாம் :** 'நாலு காசு உத்தியோகம், நாய் பிழைப்பா போச்சே' என்று சலித்துக் கொண்டே அலுவலகம் சென்று வந்த துலாம் ராசிக்கார அன்பர்களே, இந்த வாரம் உத்தி யோகச் சங்கடங்கள் முழுமையும் நீங்கி ஆறு தல் தரும். புதிய பொறுப்பு, விரும்பிய இடத் துக்கு மாற்றம், பதவி உயர்வு என்று நல்ல பலன்கள் உண்டாகும். கம்ப்யூட்டர், எலக்ட் ரானிக்ஸ், ரசாயனம் போன்றவை ஆதாயம் கொண்டு வரும். பேச்சில் நிதானம் தவறக் கூடாது. வீண் சண்டை வரும்.

**விருச்சிகம் :** செய்யும் தொழில் எதுவாக இருந்தாலும், ஈடுபாட்டுடன் செய்து வந்தாலே, சிக்கல்களும் சிரமங்களும் குறையும். பெயர், புகழ் அதிகரிக்கும். சுய தொழில் புரிபவர்கள் வளர்ச்சி காண்பார்கள். வர வேண்டிய பணம் அனைத்தும் வசூலாகும். ஏற்றுமதி இறக்குமதி, போக்குவரத்து, வாகனம், ஒப்பந்தம், இயந்திர வகைத் தொழில்களில் ஆதாயம் கிடைக்கும். அரசியல்வாதிகள் அளவோடு நலம் பெறுவார் கள். அரசுப் பணியாளர்கள் முன்னேற்றம் காண் பார்கள். பெரியவர்களின் ஆலோசனைகளை ஏற்று நடப்பது பிரச்னைகளைக் குறைக்கும்.

**தனுசு :** 'ராசிநாதன் குரு 8ம் இடத்தில் உலவுகிறாரே. ஏதேனும் குழப்பம் செய்து குடைந்து விடுவாரோ?' என்று பயப்படத் தேவையில்லை. குருவுக்குப் பார்வை சிறப் பது முதல் ஆதாயம். தெய்வ பலம் கூடியிருப் பது சிறப்பு ஆதாயம். அதனால், உற்சாகமான மனநிலையுடன் ஆரவாரமாகச் செயல்படுவீர் கள். பொன், வெள்ளி, ஆடை, ஆபரணம் சேர்க்கை ஏற்படும். திருமணம் போன்ற சுபகாரியம் இனிதே நடக்கும். உல்லாசப் பயணம், புதிய பொருள் சேர்க்கை, தெய்வீக ஈடுபாடு, ஸ்தல யாத்திரை போன்றவை வாய்க் கும். பூர்வீகச் சொத்து விவகாரம் அனுகூல மாகும். சாதுக்கள் தரிசனம், கிரக வழிபாடு நலம் தரும்.

**கும்பம் :** உங்கள் சமயோசித புத்தி, திறமை, துணிவு ஆகியவை பளிச்சிடும் வாரம் இது. யாரையாவது அசத்த முடிவு செஞ்சிருந்தீங் கன்னா, இதுதான் உகந்த தருணம். அலுவல கத்திலும் சுதந்திரமாகச் செயல்படும் சூழ்நிலை நிலவும் என்பதால், தெளிவாகத் திட்டமிட்டு திருப்தியாகக் காரியங்களை முடிப்பீர்கள். குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். பெண்கள் மன மகிழ்ச்சி அடைவார்கள். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல்கள் வந்து சேரும்.

**மீனம் :** இந்த வாரம் எதிர் நீச்சல் போட வேண்டியிருக்கும். சிறு சிறு பிரச்னை களும், வீண் தொந்திரவுகளும் உங்களை முன்னேறவிடாமல் துன்புறுத்தினாலும், வார இறுதியில் எல்லா பிரச்னைகளும் சுலபமாகத் தீர்ந்து மன அமைதி தரும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி ஏற்படும். சனி 4ல் இருப்பதால், சனி கிரகத்துக்கு ப்ரீதி செய்வது நல்லது. உயர் அதிகாரிகளிடம் பேசும்போது, பேச்சில் பணிவு தேவை. அவசரம், பதற்றம் கூடாது. நண்பர்கள், உறவினர்கள் மனமுவந்து உதவுவார்கள் என்பதால், ஓரளவு சுமுகமான வாரமாகவே அமையும். ஞானிகள் தரிசனம் நன்மை தரும்.



• பீலே

# கால்பந்து கலாட்டா!

தென்கொரியாவிலும் ஜப்பானிலுமாக நடந்த சமீப கால்பந்துப் போட்டிகளில் பல குளறுபடியான தீர்ப்புகள் நடுவர்களால் கொடுக்கப்பட்டன என்ற பேச்சு பலமாகி வருகிறது. வலுவான பல அணிகள் சீக்கிரமே சுருண்டு போனதற்கு இது போன்ற தவறான தீர்ப்புகளே காரணம் என்று கருதுபவர்கள் உண்டு.





• மாரடோனா

அர்ஜென்டினாவின் சூப்பர் ஸ்டார் மாரடோனாவுக்குப் பல ஆண்டுகளாகவே உலகக் கால்பந்துக் கூட்டமைப்பின் மீது புகைச்சல் உண்டு. இப்போதைய வாய்ப்பை நழுவவிடாத அவர் "சரியான நடுவர்களை நியமிக்கவில்லை. அவர்களின் அபத்தமான தீர்ப்புகளினால்தான் உலகக் கோப்பைப் பந்தயங்கள் தங்கள் நம்பகத்தன்மையையும் கவர்ச்சியையும் இழந்து நிற்கின்றன" என்றிருக்கிறார்.

தோற்ற அணிகளின் பிரதிநிதிகள் இப்படித்தான் மடுவை மலையாக்குவார்கள் என்ற அமைப்பாளர்கள் அலட்சியப் படுத்த முடியாத அளவுக்கு வென்ற அணியின் நாட்டைச் சேர்ந்த பிரபலமான பீலேவும் சேர்ந்துகொண்டு சில நடுவர்களின் அபத்தமான முடிவுகளைத் தாக்கியிருக்கிறார்.

உலகக் கால்பந்துக் கூட்டமைப்பு, "எந்த மனிதருமே சில சமயம் தவறு செய்யலாம். இதற்காக ஒட்டுமொத்தமாக அத்தனை நடுவர்களையும் சாடுவது தவறு" என்று கூறி சமாளிக்கிறது.

"முக்கியமான உலகக் கால்பந்துப் பந்தயங்களில் வீடியோ ரீப்ளேக்களைப் பயன்படுத்தலாமே. கிரிக்கெட்டில் மூன்றாவது அம்பயர் என்பவர் அதைத்தானே செய்கிறார். இதனால் தவறான முடிவுகள் எடுப்பதற்கான வாய்ப்புகள் தவிர்க்கப்படுமே" - இந்த ஆலோசனை யின் குரல் வலுத்து வருகிறது.

இதை ஏற்க மறுத்து வருகிறது உலகக் கால்பந்துக் கூட்டமைப்பு. நவீன தொழில்நுட்பம் நடுவர்களின் சிறு தவறுகளையும் பூதாகாரமாக்கும் என்ற அச்சத்தையும் வெளிப்படுத்துகிறது. எனினும் எதிர்ப்பு குரல் வலுவாகிக் கொண்டு வருகிறது. அடுத்த உலகக் கோப்பைப் பந்தயத்தில் "சிவப்பு அல்லது பச்சை விளக்கில் எது எரியப் போகிறது?" என்று நெஞ்சம் துடிதுடிக்க விளையாட்டு வீரர்களும், விசிறிகளும் காத்திருந்தால் வியப்பில்லை.

— ஜி.எஸ்.எஸ்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd. Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 " Registered No. TN / Chief PMG-141 / 2002 "
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 " Registered as a Newspaper in Srilanka